

# சிறுநீரகக் கோளாறா! புற்றுநோயா! சர்க்கரை வியாதியா! ஆஸ்த்மாவா! அல்சரா! மூட்டுவலியா!



## இனி கவலையே வேண்டாம்!

நமது உணவு பொருட்களில் நாள்தோறும் சேர்க்கும் ரசாயனப் பொருட்களாலும், T.B., B.P., Sugar, Asthma போன்றவைகளுக்காக உபயோகிக்கும் இரசாயன மாத்திரைகளை அதிகம் உபயோகிப்பதாலும் நமது உடலில் உள்ள சிறுநீரகங்களில் தற்காலிக அடைப்பு ஏற்பட்டு விடுகிறது. இவ்வாறு தற்காலிக அடைப்பு ஏற்பட்டு செயல்படாமல் இருப்பதை நிரந்தரமாக சுருங்கி பழுதடைந்து (Kidney Failure) விட்டதாக முடிவு செய்து டயாலிஸிஸ் செய்து கொண்டிருப்பவர்களும், உடனடியாக டயாலிஸிஸ் செய்ய வேண்டும் என்ற நிலைமையில் உள்ளவர்களும், மாற்று சிறுநீரகங்களை தேடி அலைந்து கொண்டிருப்பவர்களும் உடனே கவலையை விட்டு விடுங்கள்.

சிவனுக்குரிய வில்வ இலை, சக்திக்குரிய வேப்பிலை, பிரம்மாவுக்குரிய அத்திஇலை, விநாயகருக்குரிய அருகம்புல், திருமாலுக்குரிய துளசி இலை, கங்கைக்குரிய மாவிலை போன்ற தெய்வீக மூலிகைகளுடன் அற்புத மருத்துவ குணம் கொண்ட பக்க விளைவு, பின்விளைவுகளை ஏற்படுத்தாத ஆடாதொடை, கீழாநெல்லி, குப்பைமேனி, தும்பை ஆகியவைகளையும் பொடி செய்து தக்க அளவில் கலந்து உட்கொண்டும் இயற்கை உணவுகளான பச்சையாக சாப்பிடும் காய்கறிகள், பழங்கள் போன்றவைகளை உட்கொண்டு வருவதாலும் சிறுநீரகங்களில் ஏற்பட்டுள்ள தற்காலிக அடைப்பினை நீக்கி மீண்டும் சீராக செயல்பட செய்திடலாம். மேலும் நீரிழிவு, மூட்டுவலி, அல்சர், ஆஸ்த்மா, புற்றுநோய் போன்ற நோய்களில் இருந்து வியக்கத்தக்க வகையில் விடுபடவும் விரிவான ஆலோசனையை கீழ்கண்ட முகாம்களில் தெய்வீக மூலிகை வைத்தியர் Dr. C.K.M. சபாபதி அவர்களிடம் நேரில் ஆலோசனை பெறலாம். ஆலோசனைக்கு :

*மூலிகை வைத்தியர்கள்*

**தலைமை முகவரி** : Dr.C.K.M.குருபரன் & Dr.C.K.M.சபாபதி, S/o.Dr.C.K.மாணிக்கவாசகம்

P.B.No:30, காலேஜ் எதிரில், திருப்பத்தூர் (N.A.A.) 635 601 ✆ : 04179-20469, 22769.

**சென்னை கிளை** : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, பிரின்ஸ் மேனர் பக்கத்தில் கெல்லீஸ், சென்னை-10.

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1 மாலை 6 to 8

✆ : 6424285, 6427638

## வைத்தியரிடம் நேரில் ஆலோசனை/மருந்தினைப் பெற முகாம் விவரம்.
## (முக்கிய பண்டிகை தினங்களிலும் முகாம் உண்டு)

| | | |
|---|---|---|
| 2-ந் தேதி | - வேலூர் (N.A.) | பிற்பகல் 1 to 2 மணி வரை ஹோட்டல் கன்னா (கங்கா), 16, ஆப்பீசர்ஸ் லைன், ✆ : 0416 / 23060. |
| 3,6,7,10,13,20,27,28,29ந் தேதி | - சென்னை | காலை 9 to 2 மேலே உள்ள சென்னை முகவரியில், ✆ : 044 / 6424285, 6427638. |
| 4-ந் தேதி | - கடலூர் (S.A.Dt.) | காலை 9 to 11 ஆர்க்காடு உட்லண்ட்ஸ் ஹோட்டல், ✆ : 04142 / 30707, 30717 |
| 4-ந் தேதி | - விழுப்புரம் | பிற்பகல் 2 to 3 ஹோட்டல் ஆனந்தா, பஸ்நிலையம் எதிரில், ✆ : 04146 / 22962. |
| 4-ந் தேதி | - திருவண்ணாமலை | மாலை 5 to 6 ராதா லாட்ஜ் பஸ் நிலையம் எதிரில் ✆ : 04175 / 22536. |
| 9-ந் தேதி | - பெங்களூர் | காலை 11 to 12.30 ஹோட்டல் பிரசிடெ. (கல்பனா தியேட்டர் அருகில் கெம்பே கவுடா ரோட் ✆ : 2265374 |
| 9-ந் தேதி | - ஓசூர் | மாலை 3 to 4 சீனிவாசா லாட்ஜ், பாகலூர் ரோட், ✆ : 04344 / 22899. |
| 9-ந் தேதி | - கிருஷ்ணகிரி | மாலை 5 to 6 அமராவதி லாட்ஜ், ✆ : 04343 / 22120. |
| 12-ந் தேதி | - சேலம் | காலை 11.30 to 12.30 ஹோட்டல் செல்வம், புதிய பஸ் நிலையம் எதிரில், ✆ : 0427 / 449333. |
| 12-ந் தேதி | - ஈரோடு | மாலை 4 to 5 ஹோட்டல் ஆக்ஸ்போர்டு, பஸ் நிலையம் எதிரில், ✆ : 0424 / 70761. |
| 13-ந் தேதி | - கோயம்புத்தூர் | காலை 9.30 to 12.30 சேரன் பேலஸ் லாட்ஜ் சாந்தி தியேட்டர் பின்புறம் ✆ : 0422 / 302211, 302220 |
| 14-ந் தேதி | - மதுரை | காலை 9 to 11 ஹோட்டல் கிராண்ட்ஸ் சென்ட்ரல், மேலப் பெருமாள் மேஸ்திரி தெரு, ✆ 0452 / 743941 |
| 14-ந் தேதி | - தஞ்சாவூர் | மாலை 5 to 6 அசோகா லாட்ஜ், ✆ : 04362 / 30021 / 30022 |
| 15-ந் தேதி | - திருச்சி | காலை 9 to 11 ஹோட்டல் ஆனந்த் (சென்ட்ரல் பஸ் நிலையம் அருகில், ✆ : 0431 / 460545. |
| 15-ந் தேதி | - நாமக்கல் | பிற்பகல் 2.30 to 3.30 ஹோட்டல் தேவி அன்னபூர்ணா, ✆ : 04286 / 20433 |
| 18-ந் தேதி | - ஆம்பூர் | காலை 10 to 11 சம்பங்கி லாட்ஜ், ✆: 04174 / 43311. |
| 18-ந் தேதி | - காஞ்சிபுரம் | மாலை 4 to 5 ராஜம் லாட்ஜ், பஸ் நிலையம் அருகில் 9, காமராஜர் தெரு, ✆ : 04112 / 22519. |
| 19-ந் தேதி | - சென்னை | காலை 9 to 2 மேலே உள்ள சென்னை முகவரியில், ✆ : 044 / 6424285, 6427638. |
| 22-ந் தேதி | - தர்மபுரி | காலை 9 to 10 ஸ்ரீ மாதேஸ்வரா லாட்ஜ், ✆: 04342 / 60226. |
| 22-ந் தேதி | - திருப்பூர் | பிற்பகல் 2 to 3 ராமகிருஷ்ணா லாட்ஜ், ✆ : 0421 / 740418. |
| 22-ந் தேதி | - உடுமலைபேட்டை | மாலை 6 to 7 குறிஞ்சி லாட்ஜ், பஸ் நிலையம் எதிரில் ✆ : 04252 / 24353. |
| 23-ந் தேதி | - திண்டுக்கல் | காலை 9 to 10.30 ஹோட்டல் குறிஞ்சி, பஸ் நிலையம் பின்புறம் ✆ 27017. |
| 23-ந் தேதி | - தூத்துக்குடி | மாலை 5 to 6 ஹோட்டல் ஆல்வின், தேவர் புரம் ரோடு, ✆ : 0461 / 327760 |
| 24-ந் தேதி | - திருநெல்வேலி | காலை 8.30 to 11 ஹோட்டல் ஸ்ரீ சித்தாபதி, மதுரை ரோடு, ✆ : 0462 / 23312. |
| 24-ந் தேதி | - நாகர்கோவில் | பிற்பகல் 2 to 3 ஹோட்டல் சரவணா, மீனாட்சிபுரம், ✆: 04652 / 25689. |
| 25-ந் தேதி | - விருதுநகர் | காலை 9 to 10 ஆண்டாள் லாட்ஜ், மதுரை ரோடு, ✆ : 04562 / 43537. |
| 25-ந் தேதி | - கரூர் | பிற்பகல் 2.30 to 3.30 மணி வரை அரசி லாட்ஜ் துவார் பஜார், ✆ : 63763. |




**தகவல்:** டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 22 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ.50/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.45/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.37/-ம் தலைமை முகவரிக்கு M.O. அல்லது D.D. அனுப்பவும்.

# “சினிமாவில் பாட ஆசையே இல்லையா?”

• மேடையில்....



• புவனா

ஒருவருக்கு வாய்ப்புகள் எப்படியும் வரலாம்; எந்தச் சமயத்திலும் வரலாம். புவனாவின் வாழ்க்கையில் நிறைய உதாரணங்கள்!

ஆதர்ஷ் வித்யாலயா மாணவியாக புவனா இருந்தபோது சும்மா தோழிகளோடு சினிமாப் பாடல்களை - குறிப்பாக ஹிந்திப் பாடல்களை முணுமுணுப்பதோடு சரி. ஒருதரம் பள்ளிக்கூட விழாவின்போது இரண்டு நிகழ்ச்சிகளுக்கிடையே சின்ன இடைவெளியில் ‘புவனா... பாடு’ என்று தோழிகள் கோரஸாய்க் கட்டாயப்படுத்தி மேடை மீது தள்ளிவிட, இவரும் போய் ஏக் துஜே கேலியேவில் ‘தேரே மேரே’ பாட்டைப் பாடி அப்ளாஸ் வாங்கி கீழே இறங்கினார். ரசித்துக் கைதட்டியவர்களில் ரமேஷ்குமாரும் ஒருவர் என்பது அப்போது புவனாவுக்குத் தெரியாது. ராஜன் அண்ட் ராஜன் இசைக் குழுவில் அவர் உறுப்பினர் என்ற விவரமும் தெரியாது. ரமேஷ் அறிமுகப்படுத்தி வைக்க, புவனாவுக்கு முதல் மேடை அனுபவம்.

சினிமாப் பாடல்கள்தான் வாழ்க்கையாகப்



● வெற்றிகரமான ஆண் யார்? தன் மனைவி செலவு செய்வதை விட அதிகமான பணத்தை யார் சம்பாதிக்கிறானோ அவன்தான்.

வெற்றிகரமான பெண் யார்? அப்படிப்பட்ட ஆண் மகனைக் கண்டுபிடித்து மணந்து கொள்கிறவள் எவளோ, அவளே.

'குபீர் சிரிப்பு' நூலிலிருந்து
என். ஜெயராமச்சந்திரன்

---

போகிறது என்ற அடையாளமே தெரியாமல் கம்ப்யூட்டர் படித்துத் தேறி 'இன்ஃபோடிரைவ்'வில் வேலை பார்த்துக் கொண்டே மாலை நேரத்தில் மைக் பிடித்துக் கொண்டிருந்தார்.

'மலேசியா வாசுதேவன் ஒரு புதிய பாடகியைத் தேடிக் கொண்டிருக்கிறார். போன் பண்ணிப் பாரேன்' என்று நண்பர்கள் மூலம் செய்தி கிடைத்தது.

"நான் இப்போது ரெமி ஸ்டுடியோவில் ரிகார்டிங்கில் இருக்கிறேன். வந்து பாருங்கள்" என்றார் ம. வாசுதேவன்.

பார்த்தார். பாடச் சொல்லிக் கேட்டு 'அப்புறம் பார்க்கலாம்' என்று சொல்லவில்லை. அப்போதே அந்தக் காஸெட்டில் ஒரு பாட்டைப் பாட வாய்ப்பளித்தார். புவனாவின் இனிய குரலுக்குக் கிடைத்த அங்கீகாரம் அது.

'தேவாவுக்கும் புதுக் குரல் வேணுமாம்' – செய்தி கிடைத்தது.

கலைவாணர் அரங்கில் கச்சேரியின் இடைவேளையின்போது 'இவர்தான் புவனா' என்று தேவாவுக்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்டார்.

'ஒரு பாட்டுப் பாடு' என்று மேடைக்கு அனுப்பினார். 'நிலாக்காயும் நேரம்' பாடி கைதட்டல் வாங்கியதும் 'இரண்டு இரண்டு பாடல்கள் பாடு' என்று ஊக்கமளித்தார்.

தேவா நிகழ்ச்சிகளில் புவனா இடம்பெற ஆரம்பித்தார். 'சினிமாவில் பாட ஆசையில்லையா உனக்கு?'

"இருக்கு."

"பின் ஏன் அதை வெளிப்படுத்தவே மாட்டேங்கறே?" – என்று கேட்டு விட்டு சினிமாவில் பாட வாய்ப்புகள் தந்தார்.

கிழக்கு மலை, பாஞ்சாலங்குறிச்சி, வர்றார் சண்டியர் என்று பட்டியல் தொடர்கிறது.

தம் ஐரோப்பிய சுற்றுப் பயணத்தின் போது கலை நிகழ்ச்சிகளில் பங்கேற்க ரஜினிகாந்த் தேர்வு செய்த பின்னணிப் பாடகிகளில் புவனாவும் ஒருவர்.

லண்டன், பாரீஸ், ஸ்விட்சர்லாந்த், ஜெர்மனி, கனடா, துபாய், பக்ரைன் என்று தமிழ் வாழும் நல்லுலகம் எல்லாம் சுற்றியாயிற்று.

"வெளிநாடு போனால் கடிகாரத்தோடு ரேஸ்தான். ஊர் சுற்றிப் பார்க்க நேரமே இருக்காது. பாரீஸ் போய் ஈஃபல் டவர் பார்க்காத ஜென்மம் அநேகமாக நானாகத்தான் இருக்கும்" என்பவர், சக மேடைப் பாடகர் வெங்கடேஷைக் காதலித்து மணந்திருக்கிறார்.

பி.சுசீலா என்று சொன்னாலே நெகிழ்ந்து போய் விடுகிறார் புவனா. காரணம் இருக்கிறது.

"ஒருதரம் சுசீலாம்மாவோடு கனடாவுக்குப் போயிருந்தேன். கலை நிகழ்ச்சிகள்தான். கனடாவில் என் அக்கா இருந்ததால் நான் அவர் வீட்டில் தங்குவதாக திட்டம். 'நானும் உன் கூட வந்தால் அக்காவுக்குப் பரவாயில்லையா?' என்று சுசீலாம்மா திடீரெனக் கேட்டதும் எனக்கு வார்த்தையே வரவில்லை. நான், என் அக்கா எல்லோரும் அவரது பயங்கர விசிறிகள். அக்கா ஆனந்தத்தில் அழுதே விட்டாள். அக்கா வீட்டில் நாங்கள் தங்கியிருந்த போது 'என் பாட்டு ஒன்றைப் பாடு' என்றார் சுசீலாம்மா. 'காதல் சிறகைக் காற்றினில் விரித்து' பாடினேன். அப்படியே கட்டிப் பிடித்து எனக்கு முத்தம் கொடுத்து 'என்னமாப் பாடறே' என்றார். சிலிர்த்துப் போனேன்.

"அது மட்டுமல்ல, அங்கே கனடாவில் ஒரு பிரஸ் மீட் நடந்தது. தமிழர்கள் வந்திருந்தார்கள். சுசீலாம்மா, மனோ ஸார் ஆகியோரை பல பேர் கேள்விகள் கேட்டுக் கொண்டே இருந்தார்கள். என்னை யாரும் கேட்கவில்லையென்று நான் வருத்தப்படுவதில் நியாயமில்லை. நான் ரொம்ப ஜூனியர். என் பெயரே அவர்கள் யாருக்கும் தெரியாது. திடீரென சுசீலாம்மா, 'இங்கே ஒரு புது ஆர்ட்டிஸ்ட் இருக்காளே.. அவளை நீங்க தெரிஞ்சிக்க வேணாமா? என்று சொல்லி, 'இவ புவனா' என்று அறிமுகப்படுத்திவிட்டு 'என் பாட்டு ஒண்ணு பாடு' என்றார். நான் அந்த பிரஸ் மீட்டில் 'மாலைப் பொழுதின் மயக்கத்திலே' சில வரிகள் பாடி முடித்ததும், 'தேனா பாடறா' என்றார் சுசீலாம்மா. பரவசத்தில நான் தேம்பித் தேம்பி அழுதேன்.

"இனி நான் இத்துறையில் எவ்வளவு வளர்ந்து எத்தனை சிகரங்களைத் தொட்டாலும் சுசீலாம்மா என் மீது காட்டும் அன்பை வணங்கிக் கொண்டுதான் இருப்பேன்."

புவனா சொந்தமாக இப்போது 'சத்கீர்த்தி கம்யூனிகேஷன்ஸ்' என்று தொடங்கியிருக்கிறார். தனியார் டீ.விகளுக்கு ஆன்மீகம், சினிமா என்று பல்வேறு தொடர்களைத் தயாரிக்க எண்ணம். நிர்வாகப் பொறுப்பு கணவர் வெங்கடேஷ்.

பேட்டி : கஸ்தூரி

TOP ANGLE

குடுமிப்பிடி குழாயடிச் சண்டை ஓய்ந்தது;

குடங்கள் நிரம்புவது எப்போது?

படம் : கோபிநாத்

**குஜ்ரால் பிரதமரானதில் த.மா.கா.வினருக்கு வருத்தமில்லை; அவரைப் பாராட்டவே செய்கிறார்கள். மூப்பனார் பிரதமர் ஆகாமல் போனதில் கூட அவர்களுக்கு வருத்தமில்லை! மூப்பனாருக்கு எதிராக டெல்லியில் நடந்த பின்னணி வேலைகளால்தான் ரொம்பவும் கொதித்துப் போயிருக்கிறார்கள் தொண்டர்கள். இனி தி.மு.க.-த.மா.கா. உறவுக்கு வழியே இல்லை என்கிறார்கள் அவர்கள். பலரிடமும் பேசியபோது...**

"இனியும் நாங்கள் தி.மு.க.வோடு தோழமையாக இருக்க முடியாது. முறிந்த உறவு முறிந்ததுதான்!" என்றார் விழுப்புரம் ராமசாமி படையாச்சியார் மாவட்டத்தைச் சேர்ந்த ராவத்தநல்லூர் என்னும் கிராமத்திலிருந்து வந்திருந்த த.மா.கா. தொண்டர் எம். நாகராஜன்.

"வழக்கமாகக் கலைஞர்தான் தமது முதுகில் மற்றவர்கள் குத்திவிட்டதாகக் கூறுவார். ஆனால் இந்தமுறை அவர் எங்கள் முதுகில் குத்திவிட்டார். தமிழினத் தலைவர் என்பதில் பெருமைப்படுகிற அவர், ஒரு தமிழர் பிரதமராவதற்கு இதய சுத்தியுடன் பாடுபடாததன் மூலம் தமிழினத்துக்கே துரோகம் செய்து விட்டார்!" என்று மனம் குமுறிச் சொன்னார், சங்கராபுரத்திலிருந்து வந்திருந்த கே. ராமலிங்கம் என்கிற த.மா.கா. தொண்டர்.

"தமிழர் ஒருவர் பிரதமர் ஆவதற்கான வாய்ப்புக் கிடைக்குமேயானால், மூப்பனாரைத் தவிர வேறு யாரை தி.மு.க. ஆதரிக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?" என்று டெல்லி புறப்படுகிற நேரத்தில் கலைஞர் சுற்றி வளைத்துச் சொன்னதில் அவரது தமிழ்ப் புலமை வெளிப்படவில்லை; வேறு வழியில்லாமல் போனால் நாங்கள் மூப்பனாரைத் தானே ஆதரித்துத் தொலைய வேண்டியிருக்கும் என்கிற அவரது நிஜமான சொரூபத்தைத்தான் வெளிக்காட்டியிருக்கிறது!" என்றார் மதுரை மாவட்டத்திலிருந்து வந்திருந்த ராமன் என்கிற தொண்டர்.

தொண்டர்கள் இப்படித் தங்களுடைய உணர்வுகளை வெளிப்படையாகக் காட்டிக் கொண்டாலும் மேல் மட்டத்திலுள்ள கட்சியின் முக்கியப் பிரமுகர்கள் கொஞ்சம் அடக்கியே வாசிக்கிறார்கள். ''மூப்பனாரிடமிருந்து சமிக்ஞை வந்தால் பிய்த்து உதறிவிடுவோம்!'' என்கிறார்கள்.

இட்டத்தட்ட ஒரு வார காலம் டெல்லியிலேயே தங்கியிருந்து அரசியல் நிலவரங்களைக் கவனித்து விட்டுச் சென்னை திரும்பிய த.மா.காவின் முக்கிய பிரமுகர் ஒருவரைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தபோது, அவருக்கு ஒரு டெலிபோன் வந்தது. அதை அப்படியே நம்மிடம் கொடுத்தார் அவர்.

"என்ன சார், இப்படிச் செய்து விட்டார்

• வண்ணப்படம் : கோபிநாத்



கள் தி.மு.க.வினர்!'' என்று மிகவும் வருத்தத்தோடு பேசினார் ஓய்வு பெற்ற அந்த இஞ்ஜினீயர்.

த.மா.காவின் இன்னொரு முக்கிய பிரமுகரிடம் (இவரும் டெல்லி சென்று வந்தவர்தாம்) பேசிக் கொண்டிருந்தபோது வழக்கம் போல் சில தொண்டர்கள் உணர்ச்சிபூர்வமாக வந்தார்கள்!

அவர்களிடம், "கலைஞர்தான் மூப்பனாருக்காகப் பலரிடமும் போய்ப் பேசி ஆதரவு கேட்டதாகச் சொல்கிறாரே!" என்றோம் நாம்.

"அவரோடு எங்கள் கட்சிக்காரர் யாருமே போகவில்லையே சார்! அவர் யாரிடம் என்ன பேசினார் என்பது யாருக்குத் தெரியும்? நிஜமாகவே அவர் எங்கள் தலைவருக்கு ஆதரவு திரட்டத்தான் சென்றிருந்தார் என்றால், எங்கள் கட்சிக்காரர் ஒருவரையும் கூடவே அழைத்துச் சென்றிருக்கலாமே! அப்போது இதுபோன்ற பிரச்னைகளுக்கு இடமே இருந்திருக்காதே!" என்றனர் அவர்கள்.

"பார்த்தீர்களா! எங்களை விட எங்கள் கட்சித் தொண்டர்கள் எவ்வளவு நுணுக்கமாக விஷயங்களைப் பார்க்கிறார்கள்! இவர்களின் கேள்விகளுக்கு என்ன சமாதானம் சொல்ல முடியும்!" என்றார் அந்தப் பிரமுகர்.

ஆமாம், டெல்லியில் என்னதான் நடந்தது? டெல்லி சென்று வந்த சில முக்கிய பிரமுகர்களைச் சந்தித்துப் பேசியதிலிருந்து நமக்குக் கிடைத்த தகவல்கள் :

மூப்பனாரும் கலைஞரும் கடந்த 17-ம் தேதி டெல்லி சென்றபோது இருந்த நிலவரப்படி, பிரதமருக்கான போட்டியில் மூப்பனாரும் குஜ்ராலும்தான்! நிறைய பேர் மூப்பனாரையே ஆதரித்த காரணத்தால் மூப்பனாரின் இல்லமான 'வெஸ்டர்ன் கோர்ட்'டுக்குப் பலரும் வந்த வண்ணம் இருந்தனர்.

மூப்பனாரே தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்கிற தமது விருப்பத்தை சந்திரபாபு நாயுடுவிடம் ரஜினிகாந்த் தெரிவித்திருந்ததால் அவரும் ஆரம்பத்தில் மூப்பனாரையே ஆதரித்தாராம். ஆனால் தி.மு.க. தரப்பிலிருந்து மூப்பனாருக்கு ஆதரவாக வலுவான குரல் ஏதும் வராததால் வேறுவழியில்லாமல் நாயுடு வெறும் 'அம்பயர்' என்கிற நிலைக்கு வந்து விட்டாராம்.

# "உறவு என்னும் கண்ணாடிப் பாத்திரம் உடைந்து போனது!"

• வண்ணப்படம் : யோகா



மூப்பனாருக்கான தி.மு.க.வின் ஆதரவு மிகவும் பலவீனமாக இருந்ததால்தான் போட்டியில் லல்லுபிரசாத் யாதவ், பஸ்வான், முலாயம் சிங் யாதவ் போன்றோரும் கலந்து கொள்கிற நிலையே வந்ததாம்.

மூப்பனார் வருவதை மார்க்ஸிஸ்ட் கட்சி கடுமையாக எதிர்த்தது கூட 'இடரென்று' ஏற்பட்ட ஒரு நிலைதானாம். அவர்கள் மூப்பனாரை எதிர்ப்பதற்கு அவர் 'காங்கிரஸ் விசுவாசி' என்று ஒரு காரணம் கூறப்பட்ட தென்

பது ஒரு சொத்தை வாதம். காரணம், சென்ற முறை மூப்பனாரை ஆதரித்தவர்கள் அவர்கள். (அப்போது மூப்பனார் மறுத்து விட்டார்! இப்போதும் மற்றவர்களின் வற்புறுத்தலுக் காகவே இணங்கினாராம்)

அப்போதும் மூப்பனார் காங்கிரஸ் விசு வாசியாகத்தானே இருந்திருக்க முடியும்! என்று கேட்டால், 'அப்போது காங்கிரஸ் இருந்த நிலையே வேறு. நரசிம்மராவ் தலைவராக இருந் தார். அவரை எதிர்த்துத்தானே இவர் தனிக் கட்சி ஆரம்பித்தார் என்பதால் அப்போது காங் கிரஸுக்கும் மூப்பனாருக்கும் இருந்த உறவு முறையே வேறு. அதனால்தான் மார்க்ஸிஸ்டுகள் மூப்பனாரை ஆதரித்தார்கள்' என்று சொல் கிறார்கள்.

ஆனால், அப்போதும் நரசிம்மராவ் தலை மைப் பொறுப்பிலிருக்கும் நாட்கள் எண்ணப் பட்டுக்கொண்டிருந்தன என்கிற விஷயம் மார்க் ஸிஸ்டுகளுக்குத் தெரியாத ஒன்றல்ல! எனவே, இப்போது அவர்கள் கூறுகிற காரணம் ரொம் பவும் பலவீனமான காரணம்தான்!

குஜ்ரால் தேர்ந்தெடுக்கப்பட்ட விஷயம் சனிக்கிழமை இரவுதான் அறிவிக்கப்படுகிறது. ஆனால் அன்று காலையே தம்மைச் சந்திக்க வந்த குஜ்ராலுக்குக் கலைஞர் பொன்னாடை போர்த்தியது எதற்காக?

காலையில் குஜ்ராலுக்குப் பொன்னாடை போர்த்திய கலைஞர், மாலையில் தம்மைச் சந் தித்த தமா.காவின் முக்கிய தலைவர் ஒருவரிடம், "மூப்பனார் தேர்ந்தெடுக்கப்பட்டால் உங்களை விட நான்தான் இரட்டிப்பு மகிழ்ச்சி அடை வேன்!" என்று கூறினாராம். அதாவது குஜ்ரால் தான் தேர்ந்தெடுக்கப்படப் போகிறார் என்று தமக்கு நிச்சயமாகத் தெரிந்த நிலையிலும் ரொம்பவும் சாமர்த் தியமாக அதை மறைத் துக் கொண்டு அந்த த.மா.கா. முக்கியஸ்தரி டம் பேசி னாராம் கலைஞர்!

இரண்டு கம்யூனிஸ் டுகள் மற்றும் பார்வர்டு பிளாக் ஆகியவற்றின் எம்.பிக்கள் 45 பேர் தான். இவர்களின் மூப் பனார் எதிர்ப்பு நிலை யையே அசாம் கன பரிஷத்தும் எடுத்தார் கள் என்பதாகச் சொல் லப் பட்டதால், அந்தக் கட்சியின் ஐந்து எம்.பிக்களையும் சேர்த்து மொத்தம் ஐம்பது எம்.பிக்கள் தான் மூப்பனாரைக் கடுமையாக எதிர்த்ததாகச் சொல்கிறார்கள். சரி, இருக்கட்டும்.

த.மா.கா., தி.மு.க. மற்றும் தெலுங்கு தேசக் கட்சிகளின் மொத்த எம்.பிக்கள் 54 பேர் அல்லவா! 54 ஐ விடவா ஐம்பது பெரிது? ஆக, தி.மு.கவினர் மூப்பனாரை மனப்பூர்வமாக ஆதரித்திருந்தால் நிச்சயமாக மூப்பனார்தான் தேர்ந்தெடுக்கப்பட் டிருப்பார். தி.மு.கவின் மூப்பனார் ஆதரவு என்பது வெறும் வெளிப்பூச்சாக இருந்ததால்தான் தெலுங்கு தேசமும் பின்வாங்கியது.

சுருக்கமாகச் சொன்னால் டெல்லியில் நடந் ததென்பது மூப்பனார் தேர்ந்தெடுக்கப்படுவதற் கான ஆலோசனைகள் அல்ல; அவர் தேர்ந் தெடுக்கப்பட்டு விடக்கூடாது என்பதற்கான ஆலோசனைகள்தான் என்கிறார்கள் த.மா.கா வினர்.

"சரி, ஏதேதோ காரணங்களால் மூப்பனார் தேர்ந்தெடுக்கப்படவில்லை; அவருக்கு ஆதர வாகத் தி.மு.க. கொடுத்த குரல் வட இந்தியத் தலைவர்களிடம் எடுபடவில்லை என்று தி.மு.க. சொல்வது உண்மையாகவே இருக்கிறபட்சத்தில், த.மா.கா. மாதிரி தி.மு.கவும் 'அமைச்சரவையில் இடம்பெற மாட்டோம்; வெளியிலிருந்து ஆதரவு தருகிறோம்' என்று சொல்லியிருக்கலாமே! இப் படிச் சொல்லியிருந்தால் தி.மு.க.வினரின் முயற்சிகளை நாங்கள் நம்பியிருப்போம்; ஆனால் கலைஞரை முந்திக் கொண்டு 'நாங்கள் அமைச்சரவையில் பங்கு பெறுவோம்!' என்று மாறன் அறிக்கை விட வேண்டிய அவசிய மென்ன?" என்றுதான் த.மா.காவின் முக்கிய பிரமுகர்கள் மாத்திரமல்ல; தொண்டர்களும் கேட்கிறார்கள்.



• இனி காணக் கிடைக்குமா இந்தக் காட்சி?

"ஞாயிறன்று கூடுகிற செயற்குழு கூட்டத்தில் மீண்டும் மத்திய அமைச்சரவையில் சேருவ தென்கிற முடிவு எடுக்கப்பட்டால் உங்களது உணர்வு எப்படிப்பட்டதாக இருக்கும்?" - சில தொண்டர்களிடம் இந்தக் கேள்வியைக் கேட்ட போது, "மூப்பனார் தேர்ந்தெடுக்கப்படவில்லை என்பதை அறிந்ததுமே எங்களது அமைச்சர்கள் ஒருவருக்கொருவர் 'முன்னாள் அமைச்சரே!' என்றுதான் அழைத்துக் கொண்டார்களாம். அவர்களது தன்மான உணர்வு எங்களுக்குப் பெருமையாக இருக்கிறது. என்றாலும் எல்லோ ரும் கேட்டுக் கொள்கிற நிலையில், அமைச்சர வையில் மீண்டும் இடம்பெறுகிற முடிவு எடுக் கப்படுவதில் தவறில்லை. காரணம், தி.மு.க. இடம்பெற்றிருப்பதற்கும் நாங்கள் மீண்டும் இடம் பெறுவதற்கும் நிறைய வித்தியாசம் இருக் கிறது என்பதுதான். இனி அவர்கள் தனி; நாங் கள் தனிதான்!" என்கிறார்கள் அவர்கள்.

இந்த விவகாரத்தில் தாங்கள் துரோகிகள் ஆக சித்திரிக்கப்பட்டிருப்பது கண்டு கொஞ்சம் அதிர்ந்துதான் போயிருக்கிறார்கள் தி.மு.க.வினர். "ஊருக்கு இளைச்சவன் பிள்ளையார் கோயில் ஆண்டிதானாம்! அது போல கொலைப்பழி, துரோகப்பழி எல்லாம் எங்கள் தலையில் தான் விடியும். ஆனால் எங்கள் கட்சி வரலாற்றில் இது போன்ற பல சம்பவங்களைப் பார்த்துக் கொண்டுதானிருக்கிறோம். இவற்றை எப்படிச் சமாளிப்பது என்பதும் எங்களுக்குத் தெரியும். தலைவர் செய்த உண்மையான முயற்சிகளுக்கு மாசு கற்பிக்கிறார்கள் த.மா.கா.வினர். தேர்தலில் தோளில் சுமந்தது போதாதென்று பிரதமர் பதவிக்கும் மூப்பனாருக்காக சிபாரிசு செய் தோம். 13 கட்சி கூட்டணியில் 90 சதவீத கட்சி கள் பிடிவாதமாக அவரை வேண்டாமென்று சொல்லும்போது எங்கள் கருத்து எப்படி அங்கீ கரிக்கப்படும்? தேவேகௌடாவை விரட்ட கேசரியும் மூப்பனாரும் சேர்ந்து திட்டமிட்டார் கள் என்று கூட டெல்லியில் ஒரு பேச்சு இருக் கிறது. இதற்குக் காரணம் இந்தியன் வங்கி விவகாரத்தைக் கிளறியதுதானாம்!'' என்று பொரிந்து தள்ளினார் அறிவாலயப் பிரமுகர் ஒருவர்.

"மறுநாள் ஐ.முன்னணிக்குத் தலைவர் தேர்ந் தெடுக்கப்பட இருக்கிறார் என்றால் முதல்நாள் மாலைதான் எங்கள் தலைவரிடம் வந்து மூப்ப னார் பற்றி ஃபார்மலாகச் ஆகச் சொல்கிறார்கள் த.மா.கா.வினர். பிறகு குஜ்ரால் தேர்ந்தெடுக்கப் பட்டதும் எங்களிடம் ஒரு வார்த்தை சொல்லாம லேயே மந்திரி சபையில் பங்கெடுத்துக் கொள்ள மாட்டோம் என்று சொன்னார்கள்."

-தி.மு.க.வின் மாவட்டச் செயலாளர் ஒருவரின் விளக்கம் இது.

மொத்தத்தில், பரஸ்பர மரி யாதை கொண் டிருந்த இரு கட்சி யினர் இன்று ஒருவரையொரு வர் விட்டுக் கொடுத்துப் பேசத் தயங்காத நிலை. இந்த உறவுப் பிணக்கு, தமிழக சட்டமன்றத்தில் பிரதிபலிக்க ஆரம் பித்து விட்டது. சர்க்காரியா கமி ஷனை த.மா.கா. தூசி தட்டி எடுத்து வைக்க, 'நான் இதை எதிர்பார்த் துத் தயாராயிருக் கிறேன்' என்று முதல்வர் பேசி யிருக்கிறார்.

"நாங்கள் இது வரை மிகவும் மைல்டாக பல பிரச்னைகளைக் கூறி வந்தோம். இனி எங்கள் குரலின் சத்தம் கொஞ்சம் அதிகமாகும்!" என்று நம்மிடம் வெளிப்படை யாகக் குறிப்பிட்டார் ஒரு த.மா.கா. எம்.எல்.ஏ.



'வர வர இன்டர் வியூவிலே என்ன கேள்வி கேக்கறதுன்னு விவஸ்தையில்லாமப் போச்சு!''

''ஏன், என்னாச்சு?''

''நேத்திக்கு நான் போயிருந்த இன் டர்வியூவில சசிகலா வுக்கு இதுவரை எத் தனை தடவை ஜாமீன் மறுக்கப்பட்டிருக்குன்னு கேட்டாங்க!''

- டி.என். பாலகிருஷ்ணன்

இந்த மாதிரியான ஒரு புதிய அரசியல் சூழ்நிலையில் - அதி.மு.க.வுடன் மதி.மு.க. கூட் டணி வைத்துக் கொள்ளும் என்கிற நிலையில் இனி தமிழக அரசியலின் எதிர்காலம் எப்படியிருக்கும்? பரவலாகப் பேசப்படுகிற ஒரு யூகம் இது:

அதி.மு.க.விலுள்ள புகைச்சல் அம்பலத்துக்கு வந்திருக்கிறது. சேடப்பட்டி - திருநாவுக்கரசு மோதலின் இறுதிக் கட்டமாக திருநாவுக்கரசு அதி.மு.க.வை விட்டு வெளியே வரலாம். அப் படி வருகிறபோது அவர் த.மாகா.வில் இணை வார். கூடவே ஆர்.எம்.வீயின் எம்.ஜி.ஆர். மன் றமும் த.மா.கா.வுடன் இணையும். ரஜினியின் ஆதரவு மூப்பனாருக்கா, கலைஞருக்கா என்றால் சந்தேகமில்லாமல் மூப்பனாருக்குத்தான். ஆக, தி.மு.க., அ.தி.மு.க. கூட்டணிகளுக்கு எதிராக பலமானதொரு கட்சியாக த.மா.கா. விளங் கும் என்பது அரசியல் வட்டார 'கால்கு லேஷன்'!

- இளங்கோவன்,
ஸ்ரீநிவாசன்



# பொண்ணு பாக்கப் போறேன்!

''உங்க பொண்ணு டீ.வி. அதிகமா பாக்கிறவளா?''

''ஏன் கேட்கிறீங்க?''

''பாடுன்னு சொன்னா, இந்தப் பாட்டை யார் ஸ்பான்ஸர் பண்ணுவாங்கன்னு கேட்கிறாளே...!''

– ராதா வாசுதேவன்

''மாப்பிள்ளே, நீங்க 'புரட்சித் தலைவி'யின் தீவிரத் தொண்டரா இருக்கலாம். அதுக்காக பெண்ணின் பெயர் 'ஜெயா'ன்னதும், அவ 'காலில் விழுவேன்'னு அடம்பிடிக்கிறது கொஞ்சங்கூட நல்லா இல்லே!''

– கு. கணேசன்

''உங்கள் பையனுக்கு பெண் பிடிச்சிருக்கா?''

''இது பற்றி இன்னும் இரண்டு நாட்களில் அவன் கட்சியின் செய்தித் தொடர்பாளர் அறிக்கை வெளியிடுவார் என்று சொல்கிறான்.''

– கு. சம்பத்குமார்

''என்ன டீ கிளாசுக்கு அடியில ஐநூறு ரூபா தாளா இருக்கு...''

''உஸ்... சத்தம் போடாதீங்க! என்னை பிடிச்சிருக்குன்னு சொல்றதுக்காக நான் உங்களுக்குக் கொடுக்கிற சம்திங். எடுத்துக்கிட்டு ஓ.கே. சொல்லிடுங்க!''

– ஜி. செல்லத்துரை

''உங்க பொண்ணுக்கு என்ன போடுவீங்க?''

''காலையில இட்லி, மத்தியானம் சாப்பாடு போடுவோம்!''

– வே. செந்தில்குமார்

''மூத்த பெண்ணுக்கு 25 பவுன் போட்டோம். இப்ப 2வது பெண்ணுக்கு 35 பவுனும் ஸ்கூட்டரும் சீர் செய்யறோம்.''

**கல்கி–பாலு ஜுவல்லர்ஸ் இணைந்து வழங்கும்**
**வாசக வள்ளல் ஜோக் போட்டி — 1 முடிவு**



"அப்படியா! அப்ப அடுத்த பெண் இருந்தா அதை நான் கல்யாணம் பண்ணிக்கிறேனே."

– எம். சின்னதுரை

"நேத்து நான் பார்த்த பெண் தமிழ் குடிமகனின் விசிறியா இருக்கலாம். அதுக்காக இப்படியா?"

"என்ன சொன்னா?"

"பஜ்ஜி, சொஜ்ஜிக்கு சுத்த தமிழ் பேர் சொல்லுங்க, கல்யாணம் பத்தி யோசிக்கலாங்கறா!"

– ம. தக்ஷிணாமூர்த்தி

"பொண்ணுக்கு தாராள குணம்னு சொன்னாங்க. ஆனா இப்படி இருக்கும்னு நினைக்கல"

"எப்படி?"

"குடிக்க தண்ணி கேட்டா குடத்துல கொண்டு வர்றா."

– ஏ. இராசேந்திரன்

"பெண்ணுக்குச் சமைக்கத் தெரியுமா?"

"ஒரு கல்யாணத்துக்கே சமைக்கத் தெரியும்!"

"அப்ப கல்யாணத்துக்குத் தனியே வேற சமையல்காரங்க வேணாம்னு சொல்லுங்க!"

– என். பர்வதவர்த்தினி

"மாப்பிள்ளை வீட்டுக்காரங்க ஏன் கோபமா போறாங்க?"

"மாப்பிள்ளையை எவ்வளவுக்கு விக்கிறீங்கன்னு பெண் வீட்டுக்காரங்க கேட்டாங்களாம்!"

– சி. அருண் பிரகாஷ்

"பெண் பார்க்க வர்றவரு அரசியல்வாதிங்கிறதுக்காக இப்படியெல்லாம் செய்யக் கூடாதுங்க!"

"ஏங்க, என்ன செஞ்சாங்க?"

"பெண் பார்க்க வரும் எங்கள் தலைவரே வருக வருகன்னு வரவேற்பு வளைவெல்லாம் வெச்சிருக்காங்க!"

– ஒட்டநத்தம் சங்கர்

"ஏங்க... பெண்ணுக்கு ஆடத் தெரியுமா பாடத்தெரியுமான்னு கேட்காம, ஓடத் தெரியுமான்னு கேட்கறீங்களே, எதுக்கு?"

"பையனுக்கு நிதி நிறுவனத்துல வேலை. அதனால்தான்."

– ஆங்கரை பைரவி

பிரசுரமாகும் ஒவ்வொரு ஜோக்குக்கும் ரூ. 100 பரிசு பெறுகின்றன.

# எப்படி மாறினார் எம்.பி?

ஜே.எம்.எம். லஞ்ச வழக்கு மூலம் பரபரப்பூட்டியவர் ஜார்கண்ட் முக்திமோர்ச்சா எம்.பி சைலேந்திர மகதோ. அந்த வழக்கிலே ஒரு திடீர் திருப்பம். மகதோ, அப்ரூவர் ஆக மாறி விட்டார். நரசிம்மராவ் உட்பட, பலரையும் இந்த திடீர் திருப்பம் திக்கு முக்காட வைத்தது, சமீபத்தில்.

சைலேந்திர மகதோவின் இந்த திடீர் மாற்றத்துக்கு முக்கியக் காரணமாக இருந்தவர் ஒரு தமிழ்நாட்டுக்காரர் என்பது ஆச்சரியமூட்டும் புதிய தகவல். அவர் பெயர் ராஜன். அவர் கிறிஸ்தவ மத போதகர். அதுமட்டுமில்லை. ராஜன் ஒரு மனம் திருந்திய முன்னாள் குற்றவாளி.

தமிழ்நாட்டுக்காரரான ராஜன், இளம் வயது முதலே பல திருட்டுக் குற்றங்களில் ஈடுபட்டவர். ஒரு கட்டத்தில், நக்ஸலைட் தொடர்பு ஏற்பட்டு, தமிழக போலீசாரால் தேடப்பட்டு வந்தவர். அதன்பின் மேற்கு வங்காளத்துக்கு ஓடிப் போய், தலைமறைவாக, நக்ஸலைட் இயக்கத்தில் தன்னைத் தீவிரமாய் ஈடுபடுத்திக் கொண்டவர். கொள்ளை, வழிப்பறி போன்றவற்றிலும் ஈடுபட்டு,

**சைலேந்திர மகதோவின் இந்த திடீர் மாற்றத்துக்கு முக்கியக் காரணமாக இருந்தவர் ஒரு தமிழ்நாட்டுக்காரர் என்பது ஆச்சரியமூட்டும் புதிய தகவல். அவர் பெயர் ராஜன். அவர் கிறிஸ்தவ மத போதகர்.**



• மகதோ

## ஊர் சுற்றும் வண்ணத்துப்பூச்சி!

வள்ளி – சித்திரை – டெம்பிள் – தேசிய ஒருமைப்பாடு – வைகை – கன்யா – சூர்யா...

என்ன இதெல்லாம்? கோ-ஆப்டெக்ஸ் சமீபத்தில் அறிமுகப்படுத்தியிருக்கும் நவீனரக பருத்திப் புடைவைகளின் பெயர்கள்!

சென்னை எழும்பூரில், கோ-ஆப்டெக்ஸ், இந்த ரகங்களை அறிமுகப்படுத்தும்விதமாக, 'புதுப்பாவு' என்றொரு கண்காட்சியை நடத்தியது.

என்ன புதுசு என்று பார்த்துவரப் போனபோது பளிச்சென்று கண்ணில் பட்ட முதல் ஆச்சர்யம் –

தீவிரவாத அமைப்புக்கு நிதி சேர்த்துக் கொடுத்தவரென்று போலீஸ் ரிகார்டுகள் கூறுகின்றன.

ஒருமுறை வீடு புகுந்து திருடியபோது, வீட்டில் மாட்டப்பட்டிருந்த முழு சைஸ் கண்ணாடியில் தன் உருவத்தைக் காண நேர்ந்தபோது, அவரது முகபாவமும், கண் களிலிருந்த உணர்ச்சியும் ஒருகணம் ராஜனைத் திகைக்க வைத்தன. 'இந்த உருவமும் உடலும் திருட்டுத் தொழிலுக்கா படைக்கப்பட்டவை?' - அதுதான் அவரது மனதிலே மனமாற்றத் துக்கான பிள்ளையார் சுழி. (நம்பித்தான் ஆக வேண்டும்!)

அதன்பின் கைதாகி, 1976ல் சிறையில் அடைக்கப்பட்டபோது, பைபிளைப் படிக்க வாய்ப்புக் கிடைத்தது. ராஜனின் மனம் மாறி யது. 79ல் ஜெயிலிலிருந்து ரிலீஸ் ஆனவுடன், முழு நேர மதப் பிரசாரகராய் மாறிவிட்டார் ராஜன்.

கிரன்பேடி, திகார் ஜெயிலில் பணியாற்றிய போது, அவரது அனுமதியுடன், ஜெயிலில் இருக்கும் கைதிகளை நல்வழிப்படுத்தும் பணியை ராஜன் மேற்கொண்டார். திகார் ஜெயிலில் ஜே.எம்.எம். வழக்கு தொடர்பாக மகதோ அடைக்கப்பட்டிருந்தபோது, ராஜ னைச் சந்தித்தார் மகதோ.

'எதையும் மறைத்து, வீணாய் ஆண்ட வனின் பாவத்துக்கு ஆளாகக் கூடாது' என்ற பைபிள் வரிகளை ராஜன் சொன்னவுடன், மகதோ 'நான் உண்மையைச் சொல்லி விட்டால், எனக்கும் என் குடும்பத்துக்கும் பல தொல்லைகள் வருமே' என்று பயந்தபோது 'ஆண்டவனை நம்புங்கள்! உங்களையும் உங்கள் குடும்பத்தையும் நிச்சயம் காப் பாற்றுவான்' என்று ராஜன் கூறியதும் மகதோ மனதிலே தெளிவு பிறந்தது.

அப்ரூவர் ஆவது என்று மகதோ எடுத்த முடிவை, அவரது குடும்பத்தினர் முழுமனதாய் ஏற்றுக் கொள்ளவில்லை. 'எது நடக்க வேண்டுமோ அது நடந்தே தீரும். நான் சிறை யிலிருக்கும்போது படித்த கீதையும், பைபிளும் இதை மிகத் தெளிவாய்ச் சொல்லுகின்றன. எனது முடிவு சரியானதுதான்' என்று அடித்துச் சொல்லுகிறார் மகதோ.

— மௌலி

நன்றி: பயனீர் நாளிதழ்

---

பட்டுப் புடைவைகளுக்கேயான பிரத்தியேக டிஸைன்களைப் பருத்திக்கும் கடத்தி வந்திருக்கிறார்கள்! கூடுதலாக ஜரிகை ஜாலங்கள்.

முன்பு இதே போல் ஒரு கண்காட்சியை கோ-ஆப்டெக்ஸ் நடத்தியபோது கூட்டமில் லாமல் நிறைய 'தென்றல் வீசிய' அனுபவம் இருந்தும் துணிந்து மறுமுறை எப்படி நடத்தினார்கள்?

பருத்திப் புடைவைகள் - வெயில் காலம் என்று கணக்குப் போட்டிருக்கிறார்கள். கணக்கு தப்பாமல் ஜோராக விற்பனை நடக்கிறது என்கிறார்கள், நிர்வாகிகள்.

வந்திருந்த சில தாய்க்குலங்களிடம் பேசிய போது, "விலை அதிகம்தான் (250-1750 வரை!) ஆனா லும் டிஸைன்கள் கண்டி இழுக்கின்றனவே!" என்று செல்லச் சிணுங்கல் காட்டுகிறார்கள்.

"அது சரி. ஒரு புடைவை நெய்யக் கூலியே 150 - 200 ரூபாய் ஆகிறதே" என்கிறது கோ-ஆப்டெக்ஸ்.

இந்தக் கண்காட்சி தந்திருக்கும் தெம்பில், விரைவில் டெல்லி, மும்பை, கோவை, திருச்சியிலெல்லாம் இதே போலக் கண்காட்சி நடத்தப் போகிறார் களாம்!

உளர் சுற்றும் வண்ணத்துப்பூச்சி!

- ஜி.எஸ்.எஸ்.

படம் : ஸ்ரீஹரி

• கண்காட்சியில்...





கூடாரத்தில் அந்தக் கை கால் முளைத்த கவிதையின் ஆலாபனை கேட்டுக் கொண்டே இருந்தது. கிடைகிடையான ஆடுமாடுகளும் ஈசாக்கின் அரற்றலைக் கேட்கிறபோதெல்லாம் காதுகளைக் குவித்துக் கவனமாகக் கேட்கும். அவற்றுக்கு மாத்திரம் இது அதிசயம் இல்லையா என்ன? சாராள் வைத்த விழி வாங்காமல் தொண்ணூறு வயதில் தனக்குப் பிறந்த மகனைத் தொட்டிலுக்குள் பதியம் வைத்துக் கொண்டிருந்தாள். நூறு வயதான தனது கணவர் ஆபிரகாமோடு கடவுளின் கரம் இருந்ததை நினைத்து நினைத்துப் பெருமைப்படுவாள். அவளது உலர்ந்த உதடுகளில் புன்னகை மின்னல்

# அன்பு

புரண்டு படுக்கும். ஆண்டவரால் ஆகாதது ஒன்றுமில்லை' என்று சாராள் சொல்லிக் கொண்டே இருந்தாள்.

ஈசாக் வளர்ந்தான்; வாலிபன் ஆனான். தலைமுறைகள் பூமியில் தழைக்கத் தொடங்கின. ஈசாக்கிற்குக் கொச்சி மஞ்சளில் குழி பறித்த ஓவியமாக ரபேக்கா என்ற மனைவியை ஆபிரகாம் தேடிப் பிடித்தார். ரபேக்காவிற்கோ இரட்டைக் குழந்தைகள். முதலில் முகம் காட்டியவன் ஏசா. இவனுக்கு வெட்ட வெட்டத் துளிர்க்கும் எட்டி மரம்போல

## வெளிச்சத்தின் விலாசம் – 4

# அண்ணன்; வஞ்சகத் தம்பி!

வெல்பரி ஜான்

சிவப்புநிற ரோமம் உடல் முழுவதும் படை நடத்திப் பார்த்தது. ஏசாவின் உடலைக் கைகொண்டு தடவினால் செம்மறியாட்டின் உடலே மிருதுவானது என்கிற முடிவிற்கு ஏக காலத்தில் எல்லோருமே வந்துவிடுவார்கள். இளையவன் பெயர் யாக்கோபு.

ஏசா வேட்டைக்காரன். காடுதான் அவனுக்குக் கடை. அப்பா ஈசாக்கிற்கு அவன் கொண்டு வரும் வேட்டைக்குட்டியின் கறிதான் பலம், பலவீனம் எல்லாம். ஆகவே, ஏசாவின் உயிரைச் சுற்றியே உலாவர ஈசாக்கின் இதயம் இரண்டு இறக்கைகளைச் சேர்த்துக் கொண்டது. தாய் ரெபேக்காவோ, இளைய மகன் யாக்கோபுவை இதய நரம்புகளால் இறுகக் கட்டியிருந்தாள்.

ஒருநாள், யாக்கோபு கூடாரத்திற்கு முன்னால் அடுப்பு மூட்டி பயிற்றுக்களி கிண்டிக் கொண்டிருந்தான். அப்போது பார்த்து ஏசா உழுதநிலம் போல களைத்து உலர்ந்த உடலை அன்னிக்கொண்டு அங்கே வந்து சேர்ந்தான். "கொஞ்சம் பயிற்றுக் களி கொடு தம்பி" என்று கெஞ்சினான். ஏசாவிற்கு அழகற்ற ஒரே முகம்; தம்பி யாக்கோபுவிற்கோ அழகான இரண்டு முகங்கள். சோர்ந்து விழுந்த அண்ணனின் பசியைப் பயன்படுத்தினான் தம்பி. "உனது சொத்துரிமையை எனக்கு விட்டுக் கொடுத்தால் உன் பசியை ஆற்றி விடுகிறேன்" என்று அண்ணனின் கண்ணீரில் அவன் உப்பு வாணிபம் தொடங்கினான். "நான் பசியால் சாகக் கிடக்கிறேன். சொத்தை வைத்துக்கொண்டு நான் என்ன சுகமா பெறப் போகிறேன்?" என்றான் ஏசா. 'சத்தியம் செய்து கொடு' என்றான். தனக்குச் சொந்தமில்லாத பூமியைக்கூட எடுத்துக் கொள் என்று தாராளம் காட்டுகிற அளவிற்கு ஏசா பசியில் தள்ளாடிக் கொண்டிருந்தான். 'சத்தியமாக' என்றான். ஏசா சொத்துரிமையை இழந்தான். ஆனால் பசி தற்காலிகமாகத் தணிந்து போனது.

ஈசாக்கிற்கு கண்களில் இருட்டுப் படுதாக்கள் இறங்கின. தனது முடிவு கதவுக்கருகில் காத்திருக்கிறது என்பதை அறிந்த ஈசாக், பாசத்தைக் கொட்டிப் பயிராக்கிய தன் மகன் ஏசாவை அழைத்தார். இறுதியாக



அவனது கைப்பாகத்தில் நல்ல வேட்டைக் குட்டி விருந்தொன்றைச் சாப்பிட்டுவிட்டு, உச்சி முகர்ந்த உள்ளன்போடு உன்னை ஆசீர் வதிக்கப் போகிறேன் என்றார். ஊன்றுகோல் பிடித்து நடந்த ஈசாக்கின் வார்த்தைகள் எப் படியோ ரெபேக்காவின் செவி வயலில் சிந்தின. தனது உயிர்ப்பறவை சிறகடித்துக் கொண்டிருந்த சொர்க்கக்கூடான அன்புமகன் யாக்கோபுவை அழைத்தாள். "மகனே! உனது அண்ணன் விருந்து வைத்து உனது தந்தையின் இறுதி ஆசீர்வாதத்தை இன்றே பெற்றுவிடப் போகிறான். நீ முந்திக் கொள்" என்றாள். "கண் பார்வை இல்லா விட்டாலும் என் தந்தைக்கு கோதுமை மணி நிலத்தில் விழுகிற ஓசைகூடத் துல்லியமாகக் கேட்குமே; என் குரலை வைத்து என்னை அறிந்துகொண்டு விட்டால் ஆசீர் வாதமே சாபமாக ஆகிவிடாதா? மேலும் எனது உடலைத் தடவிப்பார்த்தால் நான் தப் பவே முடியாதே" என்றான்!

"நீ முதலில் விருந்துக்கு ஏற்பாடு செய்; மற்ற வற்றை நான் பார்த்துக் கொள்ளுகிறேன்" என் றாள் ரெபேக்கா. உள்ளத்து உறுதியால் சொற் கள் சுருங்கின. யாக்கோபு அவசரம் அவசர மாகப் பச்சைப்புல்லில் விழுந்த வெள்ளைக் கைக்குட்டையைப் போலக் கிடந்த ஆட்டுக் குட்டியைக் கொண்டு வந்து தாயாரிடம் தந் தான். அவளோ என்றுமில்லாத விருந்தொன் றைப் படைத்தாள். பிறகு ஏசாவின் உன்னத மான உடைகளால் யாக்கோபுவைப் போர்த்தி னாள். அவனது கைகளையும், கழுத்தையும் ஆடுகளின் தோலுக்குள் புதைத்தாள். பிறகு ரெபேக்கா சொன்னபடியே அவள் படைத்த விருந்தை எடுத்துக் கொண்டு தந்தையின் முன்பாகச் சென்றான் யாக்கோபு.

"தந்தையே" என்று அழைத்தான். "என் மகனே நீ..." என்று இழுத்தார் ஈசாக். "நான் தான் உங்கள் மூத்த மகன் ஏசா" என்றான். பிடிபட்டு விடுவோமா என்கிற பயம் அவனது பிடறியில் நின்று ஆடியது. "அப்பா நீங்கள் விரும்பியபடியே விருந்து படைத்து விட்டேன். உண்டு முடிந்தபிறகு என்னை நீங்கள் ஆசீர் வதிக்க வேண்டும்" என்றான். "அதுசரி; இவ் வளவு விரைவாக எப்படி நீ விருந்து தயாரித் தாய்?" என்று தந்தை கேட்டார். "எல்லாம் இறைவன் இறக்கி வைத்தது" என்று உதடு களை விரிக்காமலேயே உச்சரித்து முடித்தான் யாக்கோபு.

அப்போது ஈசாக், "மகனே! என் அருகே வா! நீ எனது மூத்தமகன் ஏசாதானா என்ப தைத் தடவிப் பார்த்தாவது நான் தெரிந்து கொள்ள வேண்டும்" என்றார். ஈசாக்கின் கலப் பைக் கைகள் யாக்கோபுவின் உடல் முழுவதும் உழுதன. "குரலோ யாக்கோபுவின் குரலாக இருக்கிறது; உடம்பு மாத்திரம் ஏசாவின் உடம்பாக இருக்கிறதே" என்றார் ஈசாக். வெள் ளைத்தாடிக்குள்ளிருந்து எட்டிப் பார்த்த ஈசாக் கின் உதடுகள் "நீ உண்மையிலேயே என் மூத்த மகன் ஏசாதானா?" என்று விரிந்தன. அதற்கு யாக்கோபு "ஆம், நான் உமது மகன் ஏசாவே" என்றான். ஆகவே ஈசாக்கு அவனைத் தனது செல்லமகன் ஏசா என்று கருதி உச்சிமுகர்ந்து உள்ளன்போடு ஆசீர்வதித்தார்.

"உட்கட்சி தேர்தல் நடத்தணும்னு தலை வர்கிட்டே சொன்னது தப்பா போச்சு."

"ஏன்?"

"கட்சி விரோத நடவடிக்கையில ஈடு பட்டதா கூறி என்னைக் கட்சியை விட்டு நீக்கிட்டாரு."

– சேத்தூர் அன்பழகன்

ஏசா, தகப்பனின் ஆசீர்வாதத்தைப் பறி கொடுத்தான். அருகிலிருந்த ஆட்டுக்குட்டியை அடித்து வேட்டைக்கறி மாதிரியே செய்தவன் வெற்றி பெற்றான். மூளையால் முன்னேறிய வன் அருளை அபகரித்துக் கொண்டான். இதயத்தால் இடம் பெயர்ந்த ஏசா, 'ஓ'வென்று அழுதான். அவன் கன்னமேடுகளில் உப்பு வண்டிகள் ஊர்வலம் புறப்பட்டன. வண்ண மயமான வடிவ உலகம் ஒரே நிமிடத்தில் அப் பளப் பூக் கொம்புளத்தைப் போல நொறுங்கிப் போனதை அவன் உணர்ந்தான். ஈசாக்கும் தான் ஏமாற்றப்பட்டதை உணர்ந்தார். அவரது உடல் நடுங்கிற்று. எவ்வளவோ மன்றாடிப் பார்த்தும் ஏசாவிற்கு அப்பாவின் ஆசி கிட்ட வில்லை.

முதலில் தனது சொத்துரிமையைப் பசியின் நிமித்தமாக இழந்து போன ஏசா, தனது தந்தையின் ஆசீர்வாதத்தையும் இப்போது இழந்து கோபத்தின் கொதிநிலைக்குப் போனான். தம்பியைக் கொன்றுபோட ஏசா எத்தனித்தான்.

ஏசாவின் மனவானத்தில் நெருப்பு மேகங் கள் நீச்சலடிப்பதைப் புரிந்து கொண்ட தாய் ரபேக்காள் யாக்கோபுவைப் 'பதான் அராம்' என்ற நகரத்தில் உள்ள அவளது தந்தையின் இல்லத்திற்கு அனுப்பி வைத்தாள். யாக்கோபு வருகிற வழியில் ஒரு கிணற்றுக்கருகில் வன தேவதையைப் போன்ற ஓர் இளம்பெண் தனது ஆடுகளை ஓட்டி வருவதைப் பார்த் தான். பேச்சுக் கொடுத்தபோதுதான் அவள் யாக்கோபுவின் மாமன் லாபானின் மகள் ராக்கேல் என்பதை அறிந்தான். தன்னை இன் னார் என்று அறிமுகப்படுத்திய யாக்கோபு அவளை முத்தமிட்டான். அவளோ வால்



குருவி காற்றைக் கத்திகரித்துப் போவது போல ஊர் நோக்கி ஓடினாள். சற்றைக்கெல்லாம் வந்து சேர்ந்த யாக்கோபுவை ரெபேக்காளின் வீட்டார் அனைவரும் வரவேற்றனர். எல்லைப்பட்டணம் வரைக்கும் யாக்கோபுவின் வருகை இன்ப அதிர்வுகளை உருவாக்கியது.

யாக்கோபு வயலை உழுதான், கிடைகளைப் பராமரித்தான். "என் உறவினன் என்பதற்காக ஒன்றும் வாங்காமல் நீ உழைப்பதை நாங்கள் ஒப்புவதற்கில்லை; உன் சம்பளத்தை நீ பெற்றுக் கொள்ளலாம்" என்றான் லாபன். தனது ஊதியத்திற்கு ஈடாக ராக்கேலைத் தந்துவிட வேண்டுமென்று யாக்கோபு கேட்டான். அப்படியே ஏழு ஆண்டுகள் வியர்வை சிந்தி உழைத்து ராக்கேலைத் தனக்கு மனைவியாக்குகிற நாளுக்கு யாக்கோபு காத்திருந்தான். அவள் மீது அவன் வைத்திருந்த மையலின் காரணமாக ஏழு ஆண்டுகளும் ஏழு நாட்களாகவே தோன்றின.

திருமணத்தன்று விருந்தெல்லாம் முடிந்த பிறகு இரவு விசிறிக் கொண்டே அந்த நிலத்தில் விழுந்து கிடந்தது. லாபான் தனது மகளை யாக்கோபுவிடம் அனுப்பினார். விடியற்காலம் ஆனபோது தன்னோடு மகிழ்ந்திருந்த பெண் ராக்கேல் அல்ல; மூத்த மகள் லேயா என்பதை யாக்கோபு அறிந்தான். ''ராக்கேலுக்காக அல்லவோ ஏழு ஆண்டுகள் வியர்வை சிந்தினேன்; அப்படியிருக்க, நான் விரும்பாத லேயாவை நீர் எப்படி எனக்கு மனைவியாக்கலாம்?'' என்று யாக்கோபு லாபானைக் கேட்டான். அதற்கு அவர், ''மூத்தவள் இருக்கும் போது, இளையவளை மணம் முடித்துக் கொடுப்பது எங்கள் ஊரில் வழக்கம் இல்லை'' என்றார்.

பிறகு ஏழு ஆண்டுகள் தமது வியர்வையால் லாபானின் காடு, கரம்பலை யாக்கோபு பசுமையாக்கினான். அவனது கிடைகளையும் பல்கிப் பெருகச் செய்தான். ஏழாவது ஆண்டின் முடிவில், யாக்கோபுவின் மனமஞ்சத்தை அதுவரை ஆட்சி செய்துவந்த ராக்கேலை அவன் ஆளத் தொடங்கினான். இப்போது லேயாவிற்குக் குழந்தைப் பேற்றை அருளினார்.

பின்பு கடவுள் ராக்கேலை நினைவு கூர்ந்தார். அவளுக்கு யோசேப்பு என்ற ஒரு மகன் பிறந்தான். அவளது மனமாடத்தில் ஆயிரம் ஆசைப்புறாக்கள் ஒருசேர சிறகசைத்தன. லேயாவிற்கும், ராக்கேலுக்கும், பிள்ளைப் பேறுகள் இல்லாதபோது அந்தச் சமுதாய வழக்கப்படி பணிப்பெண்கள் வாயிலாகவும் மொத்தம் 12 குழந்தைகள் யாக்கோபுவிற்குப் பிறந்தனர். இன்னமும் ஏழு ஆண்டுகள் ஆயின. அக்காள் தங்கைக்குள் குழந்தைகள் பெறும் போட்டாபோட்டி முதுமையின் காரணமாக ஒரு முடிவுக்கு வந்தது. லாபானோடு யாக்கோபுவிற்கு முரண்பாடுகள் முளைவிட்டன. யாக்கோபு, இறைவனது ஆணையால் தனது தந்தையின் கானான் தேசத்திற்குத் தனது மனைவி, மக்கள், பரிவாரங்களோடு புறப்பட்டான். வழிப் பயணத்தில் தனது சகோதரன் 'ஏசா' அனைவரையும் கொன்றுவிடுவான் என்றும், அவனது கரங்களிலிருந்து தங்களைக் காப்பாற்ற வேண்டும் என்றும் கடவுளிடம் யாக்கோபு வேண்டினான். கலக்கமுற்ற அவனுக்கு முன்பாக ஆண்டவரின் தூதர் தோன்றி, "இனி நீ யாக்கோபு என்று அழைக்கப்படமாட்டாய்; இசுரவேல் என்றே அழைக்கப்படுவாய்" என்று அச்சத்தை அகற்றப் பார்த்தார்.

யாக்கோபுவின் அருகில் கடவுளே நின்று அவருக்குத் தைரியத்தை வரவழைத்தபோதும், தனது மூத்த சகோதரன் தன்னை முடித்து விடுவதாக எடுத்த சபதம் அவரை அச்சுறுத்தின. மனைவி மக்களிடத்திலும் மற்றும் வேலைக்காரர்களிடத்திலும் 'நாம் எல்லோரும் ஏசாவின் அடிமைகள், கன்று காலிகளில் பெரும்பகுதி அவருக்கான பரிசுப் பொருட்கள்' என்றே சொல்லி வந்தார். காலை ஆனதும் இதுவே நமது கடைசி நாள் என்று தீர்மானித்தவாறு யாக்கோபு நிலைகுலைந்து நடந்தபோது ஏசா எதிர்ப்பட்டான். நெற்றி தரையில்பட யாக்கோபுவும் அவரது வம்சா வழியினரும் ஏசாவை வணங்கி நின்றனர். ''இவர்களெல்லாம் யார்?'' என்று ஏசா கேட்டான். அதற்கு யாக்கோபு, ''இவர்கள் உமது அடிமைகள் எஜமானே! இந்தக் கன்று, காலி, கழுதை, ஒட்டகத் தொகுதிகள் அனைத்தும் உமக்கே'' என்றான்.

யாக்கோபு தன்னை அண்ணன் என்று அன்பொழுக அழைக்காமல் எஜமானனே என்று அச்சத்தோடு அரற்றியது ஏசாவின் கண் மதகுகளைத் திறந்தது. அவன் ஆனந்தக் கண்ணீர் வடித்து, ''உனது கன்றுகாலிகளை நீயே வைத்துக் கொள்; ஆண்டவர் எனக்கு அபரிமிதமாகத் தந்துள்ளார்'' என்று தனது தம்பி யாக்கோபுவைக் கட்டியணைத்து கண்ணீர்ப்பூக்களைச் சொரிந்தான். யாக்கோபுவின் மனைவிமார்களும், குழந்தை குட்டிகளும் குதூகலித்தனர்.

(வளரும்)

# மலட்டுத்தன்மை.

# பிள்ளைப்பேறின்மை.

# எய்ட்ஸ்.

# மரணம்.

சரியான நேரத்தில் வீ.டி./எஸ்.டி.டி.யை

குணப்படுத்தவில்லை என்றால்

சில விபரீதங்களை

நீங்களாகவே வாங்கக்கூடும்.

பெண்கள் பிள்ளைப்பேறின்மையை அடைகின்றனர். கருப்பையின் வாயில் ஏற்படும் புற்றுநோயால் பலர் இறந்துவிடுகின்றனர். ஆண்களோ மலட்டுத் தன்மையைப் பெறுகின்றனர். குழந்தைகள் குருடாகப் பிறக்கின்றன. சிலருக்கு கருச்சிதைவு ஏற்படுகிறது. இன்னும் சிலர் மேகநோயைப் பெறுகின்றனர். வீ.டி./எஸ்.டி.டி. கொண்டவர்கள், மருத்துவரை அணுகி தகுந்த சிகிச்சை பெற்றுக்கொள்ளாமையே அத்தனை விபரீதங்களுக்கும் காரணம் - சாதாரண மனிதரைக் காட்டிலும் வீ.டி./எஸ்.டி.டி. கொண்டவர்கள் எய்ட்ஸ் நோய்க்கிருமிகளால் பாதிக்கப்படுவதற்கான வாய்ப்பு 10 மடங்கு அதிகமாக உள்ளது.

எனவே, நீங்கள் மேற்கொண்டு விபரங்கள் அறிய விரும்பினாலோ, வீ.டி./எஸ்.டி.டி. அறிகுறிகளில் ஏதேனும் உங்களிடம் இருப்பதாக சந்தேகித்தாலோ உடனடியாக மருத்துவரை அணுகத் தயங்காதீர்கள். துரிதமாக சிகிச்சை பெற்றால், வீ.டி./எஸ்.டி.டி. நோய்களை நிச்சயமாக குணப்படுத்திவிடலாம்.

நீங்கள் மருத்துவரிடம் செல்லும்போது, உங்கள் வாழ்க்கைத் துணையையும் உங்களுடன் அழைத்துச் செல்வது மிக முக்கியம். உங்கள் வாழ்க்கைத் துணை வீ.டி./எஸ்.டி.டி. நோய்களிலிருந்து குணப்படுத்தப்படவில்லையென்றால், உங்கள் நிலையும் அதுதான் என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஏனென்றால், நீங்கள் இருவரும் உடலுறவு கொள்ளும்போது, எய்ட்ஸ் நோய்க்கிருமிகளை மீண்டும் நீங்கள் பெறக்கூடும்.

வீ.டி./எஸ்.டி.டி. நோய்களை அலட்சியப்படுத்தாதீர்கள். அது உங்கள் வாழ்வையே அழிக்கக்கூடும்.

**எய்ட்ஸ் நோய்க்கிருமிகளை நீங்கள் பெறுவதற்கான அபாயத்தை வீ.டி. / எஸ்.டி.டி. அதிகரிக்கிறது.**

**வீ.டி./எஸ்.டி.டி. மற்றும் எய்ட்ஸிலிருந்து ஆணுறைகள் உங்களை பாதுகாக்கும்.**

மேலும் விவரங்களுக்கு:
**தமிழ்நாடு எய்ட்ஸ் கட்டுப்பாட்டு அமைப்பு**
417, பாந்தியன் சாலை, எழும்பூர், சென்னை 600 008.
போன் : 8255261 / 8255467 / 8254917
24 மணிநேரமும் இயங்கும் ஹாட் லைன்:8256882 / 8256884








1997 மே 4
ஈசுவர சித்திரை 21
மலர் : 55
இதழ் : 40

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## தி.மு.க. ஆட்சிக்கு முதல் குட்டு!

தி.மு.க. ஆட்சிக்கு முதல் குட்டு விழுந்திருக்கிறது - சென்னை உயர்நீதி மன்றத்தின் பலமான குட்டு!

'வெள்ள நிவாரணப் பணிகளின் கீழ், சாலை சீரமைப்பு மேற்கொள்ளப்பட்டபோது டெண்டர்களை முறையாகக் கோரிப் பெறவில்லை; ஒருசிலரை 'நியமித்து' அவர்களை டெண்டர் கொடுக்குமாறு அதிகாரிகள் கேட்டுக் கொண்டு, தொகையையும் நிர்ணயித்திருக்கிறார்கள். திறந்த டெண்டர் முறை காற்றில் பறக்கவிடப்பட்டிருக்கிறது! இது மிகவும் ஆட்சேபணைக்குரியது.' - நீதிமன்றத்தில் மனு கொடுத்த கான்ட்ராக்டர் ஜெயபாலன் தரப்பு வாதம் இது.

இதனை ஆராய்ந்து பார்த்து, புகார்களுக்கு ஆதாரம் இருப்பதை உச்சநீதிமன்றம் உறுதிசெய்திருக்கிறது. தமிழக அரசைக் கண்டித்து எச்சரித்திருக்கிறது.

'வெள்ள நிவாரணப் பணிகளை விரைவாக மேற்கொள்ள வேண்டியிருந்ததால் திறந்த டெண்டருக்கான அறிவிப்பு செய்து, பரிசீலித்துச் செயல்பட நேரமில்லை' என்பது அரசுத் தரப்பு வாதம்.

'உடனடியாகச் சாலைகள் சீர்செய்யப்பட வேண்டும் என்ற நோக்கில் டெண்டர் முறையை மாற்றினோம்' என்று கூறியிருக்கிறது தமிழக அரசு.

நீதிமன்றம், இந்த விளக்கத்தை ஏற்க மறுத்ததுடன் அப்பட்டமான தவறுகள் நடந்துள்ளதையும் கட்டிக்காட்டியிருக்கிறது :




'அவசரமாகப் பணிகள் மேற்கொள்ளப்பட்டதாகத் தெரியவில்லை. பருவ மழை அக்டோபர் நவம்பரில் பெய்திருக்க, நிவாரணப் பணிக்கான அரசு ஆணை ஜனவரியில்தான் பிறப்பிக்கப் பட்டிருக்கிறது. சுமார் 3.5 முதல் 5 கோடி ரூபாய் பெறுமானமுள்ள பணிகள்தான் ஒவ்வொரு பிரிவிலும் சாதாரணமாக நடைபெறும். ஆனால், ஒவ்வொரு பிரிவுக்கும் பெறப்பட்டுள்ள டெண்டர் களோ 12.5 கோடி ரூபாய் மதிப்பு! என்னதான் வெள்ள நிவாரணப் பணியென்றாலும் தொகையை வழக்கத்தை விட மூன்று மடங்கு அதிகரிப்பதை ஏற்க முடியாது. இந்த அசாதாரண அதிகரிப்பே அதிகாரிகளுக்கும் டெண்டர்தாரருக்குமிடையே உள்ள 'நெருக்கத்தை' உணர்த்துகிறது!'

- ஊழல் நடந்துள்ளதை உயர்நீதி மன்றம் இவ்வாறு பிட்டு வைத்து விட்டது!

ஜெயலலிதா ஆட்சிக் காலத்தில் டெண்டர் முறை என்பதை அடியோடு கைவிட்டு, முக்கியஸ்தர் களின் பினாமிகளுக்கோ, சொந்தக்காரர்களுக்கோ கான்ட்ராக்டுகள் வெளிப்படையாக அளிக்கப் பட்டு வந்தன. கருணாநிதி முதல்வரானதுமே இந்த முறை மாற்றப்படும் என்று அறிவித்தார். இனி 'திறந்த டெண்டர்' முறையே மேற்கொள்ளப்படும் என்றார்.

இந்த அறிவிப்பு வெள்ள நிவாரணப் பணி விஷயத்தில் செயலாக்கப்படவில்லை என்பது வெளிச்சத்துக்கு வந்துள்ளது. இதே போன்ற முறைகேடுகள் வேறு துறைகளிலும் நடந்திருக் கக்கூடுமோ என்கிற நியாயமான சந்தேகம் மக்கள் மனத்தில் எழும். எதிர்காலத்தில் இந்த முறைகேடு தொடரும் அபாயம் உள்ளது என்பதையும் முதல்வர் உள்பட அனைவருமே அறிவார்கள்.

சென்னை உயர்நீதி மன்ற நீதிபதி பத்மனாபனின் கண்டனமும் அவ்வாறே தொனிக்கிறது :

'தேர்ந்தெடுத்த சில நபர்களிடம் மட்டும் பணி மனு பெற்றுக் கொள்வது என்பது டெண்டர் முறையைக் கேலிக்கூத்தாக்கும் செயல். இதுவரை வழக்கிலில்லாத இந்த அதிர்ச்சியூட்டும் முறைகேடுக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட வேண்டும்' என்று கூறியுள்ளார் நீதிபதி.

'சிறந்த நிர்வாகம் தர வேண்டும்; சட்ட ஒழுங்கை கட்டுக்குள் வைக்க வேண்டும்' என்கிற முதல்வரின் நல்லெண்ணம் பல சந்தர்ப்பங்களில் வெளிப்படத்தான் செய்கிறது.




மதுரை கவுன்சிலர் கொலை விஷயத்தில் 'கட்சி நோக்குகளைக் கடந்து சட்டம் செயல்படும்' என்று உத்தரவாதம் தருகிறார் கருணாநிதி.

மயிலை இளைஞர் மரணத்தில், 'காவல் துறைக்குத் தொடர்பு' இருந்தால் உரிய நடவடிக்கை எடுக்கப்படும்' என்கிறார்.

நடுநிலைமை காப்பதில் முனைப்புக் காட்டுவதை அவ்வப்போது அவர் உணர்த்தி வந்தாலும், அதே அளவுக்குக் கட்சி உடன்பிறப்புகளும் அரசு அதிகாரிகளும் மக்கள் நலனை முதன்மையாகக் கருதுவதில்லை. தவறுகளும் குற்றங்களும் நிகழ்கின்றன.

இதைப் போன்ற கரும்புள்ளிகள் தொடராமல் இருக்க வேண்டுமானால் அதிகாரிகள் நேர்மையாளர்களாக இருப்பதோடு அரசின் கொள்கைகளும் விதிமுறைகளும் செம்மையாகவும் எளிமையாகவும் இருக்க வேண்டும்.

ஆனால், துரதிர்ஷ்டவசமாக, லஞ்சம் என்பது அரசியல்வாதிகள் மட்டுமின்றி, அரசுத் துறை பணியாளர்களும் அனுபவிக்கும் 'சிறப்பு உரிமை' என்னும் அளவுக்கு நிலைமை முற்றிப் போயிருக்கிறது! தனிநபர் நேர்மை தொலைந்துபோய்விட்டதால், யார் ஆட்சிக்கு வந்தாலும் ஊழலற்ற நிர்வாகத்தை உத்தரவாதம் செய்வது சாத்தியமில்லை என்கிற நிலை மாற்றியமைக்கப்பட வேண்டும். இதற்கு, தகவல் பெறும் உரிமைச் சட்டம் பெரிதும் உதவக்கூடும். இச்சட்டம் அமுலானால் லஞ்ச - ஊழல் கட்டுப்படும் என்பது எதிர்பார்ப்பு. ஆனால் இந்தச் சட்ட முன்வடிவை ஆழ்ந்து ஆராய்ந்து வரும் நிபுணர்கள், அதிலுள்ள ஓட்டைகள் ஏராளம் என்கின்றனர்.

உண்மையிலேயே ஊழலற்ற ஆட்சி மலர வேண்டும் என்று முதல்வர் விரும்பினால், பலதரப்பு நிபுணர்கள் அடங்கிய குழுவைக் கொண்டு, தகவல் பெறும் உரிமைச் சட்டத்திற்கு, நடைமுறைக்கு உதவக்கூடிய வகையில் சிறப்பான இறுதி வடிவம் கொடுக்கலாம். அது விரைவில் அமுலாகவும் வழிசெய்யலாம்.



# குஜ்ரால்

# தில்லி நியூஸ்

கல்லூரிப் பேராசிரியையாக இருந்த ஷீலா, இந்தியிலும் ஆங்கிலத்திலும் ஏராளமான கவிதைகள் எழுதியிருக்கிறார். கொரியாவுக்குப் போய், அவருக்கு அளிக்கப்பட இருந்த பரிசு ஒன்றை வாங்கிக் கொண்டு, அப்படியே ஜப்பானுக்கும் போவதாக இருந்தார் ஷீலா. கணவர் பெயர் பிரதமர் பதவிக்கு அடிபட ஆரம்பித்ததும், பிரயாணத்தை ரத்து செய்து விட்டார். எல்லாரையும் போல, சஸ்பென்ஸ் நிறைந்த பிரதமர் 'தேர்தலில்' மூழ்கிப் போய் விட்டார்! குஜ்ரால் பிரதமராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவுடன், ஷீலா குஜ்ரால் சொன்னது : "அவர் திறமையில் எனக்கு முழு நம்பிக்கை இருக்கிறது."

● மகாராணி பாக் சாலையில், குஜ்ரால் வீட்டுக்கு அடுத்த வீட்டுக்காரர் ஜே.சி. கபூர். குஜ்ராலுடன் பள்ளியிலும், கல்லூரியிலும் ஒன்றாகப் படித்தவர் கூட. "மிக மென்மையான சுபாவம் உள்ள குஜ்ராலுக்கு, இன்றைய அரசியல் சூழ்நிலை அதிகச் சுமையைத் தரப் போகிறதே என்றுதான் கவலைப்படுகிறேன்!" என்கிறார்.

● புகழ்பெற்ற ஓவியசகோதரர் சதீஷ் குஜ்ரால் உட்பட குடும்பத்தினர் அனைவரும் வீட்டில் கூடியிருந்தனர். அந்த நேரத்தில் டெல்லி முழுவதிலுமே பஞ்சாபியர் சந்தோஷக் கூத்தாடினார்கள். குஜ்ரால் ஐக்கிய முன்னணி தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட செய்தியை ஒன்றுசேர்ந்து கேட்டதும் உற்சாக ஆரவாரம்



• குடும்பத்துடன் குஜ்ரால்

செய்து ஊரையே கலக்கினர்!

● பிரதமர் நன்றாக ஓவியம் வரையக்கூடியவர். கவிதைகளும் எழுதுவார். இசைப் பிரியர். பி.எச்.டி. மற்றும் டிலிட் பெற்றவர். ஆனால் தவறிக்கூட ஒருமுறையும் தம் பெயருக்கு முன்னால் டாக்டர் பட்டத்தைப் போட்டுக் கொண்டதில்லை!

## இது 'தில்லி நியூஸ்'தாங்க!

மூளைப் பகுதியில் ட்யூமர் கட்டி இருந்தால், அறுவைச் சிகிச்சை மூலம் நீக்கும் முறைதான் இதுவரை இருந்தது.

தில்லி ஆல் இந்தியா இன்ஸ்டிட்யூட் ஆஃப் மெடிகல் சயன்ஸில், கத்தி இல்லாமலே கட்டியை அகற்றும் கம்மா (Gamma) சிகிச்சை முறையை முதன் முதலாக அறிமுகப்படுத்தியிருக்கிறார்கள்.

நோயாளியின் தலையில் முதலில் ஒரு ஸ்டீரியோடாக்டிக் கிரீடத்தைப் பொருத்தி, ஸிடி ஸ்கான், எம்.ஆர்.ஐ. ஸ்கான், ஆஞ்சியோகிராம் எல்லாம் எடுத்துப் பார்த்துவிட்டு, கம்மா கத்தியை (கத்தி அல்ல கதிர்கள்தான்!) செலுத்துகிறார்கள். இருபதிலிருந்து முப்பது நிமிடங்களில் சிகிச்சை முடிந்து விடுகிறது! லோக்கல் அனஸ்தீஸியா மட்டுமே கொடுக்கப்படுவதால், மறுநாளே எழுந்து வீட்டுக்குப் போய்விடலாம். கத்தி வைத்தால்தானே காயம், குணமாவதற்கு டயம் எல்லாம்? மறுநாளே ஆபீசுக்குக் கூடப் போய் வேலையைப் பார்க்கலாமாம்!

AIIMS இயக்குநர் டாக்டர் பி.கே.தவே, "வழக்கமான மைக்ரோ நியூரோ சர்ஜரியிலிருந்து விடுதலை மட்டுமல்ல; பத்து நாள் ஆஸ்பத்திரி வாசமும் மிச்சம்!" என்கிறார்.

— நியூஸ்வாலா

## ஜூனியர் அமைச்சர்களின் புலம்பல்!

அரசு ஊழியர்கள் பணிக்காலத்தில் இறந்துவிட்டால் அவர்களது வாரிசுகளுக்குக் கருணை அடிப்படையில் வேலை கொடுப்பதென்பது அரசாங்கத்தில் காலம் காலமாய் நடந்து வரும் விஷயம். இப்படிப்பட்டவர்களின் வாரிசுகளுக்குக் கருணை காட்டுவதில் வயதுவரம்பெல்லாம் கிடையாது என்றெல்லாம் முதல்வரே சட்டசபையில் அறிவித்தும் இருக்கிறார். ஆனால், காவல்துறை விஷயத்தில் நேர்மாறாக இருக்கிறது. பணிக் காலத்தில் மரணமடைந்துவிட்ட 380 பேரின் வாரிசுகளுக்கு வேலை கொடுப்பதில் மிகவும் தாமதம் ஆகிறதாம். சந்தன வீரப்பனைப் பிடிப்பதில் போராடி உயிரை விட்டவர்கள், தீவிரவாதிகள் மற்றும் விடுதலைப்புலிகளுடன் மோதல் ஆகியவற்றால் மரணம் அடைந்தவர்களின் வாரிசுகளுக்கு இன்னும் வேலை கொடுக்கப்படவில்லையாம். டி.ஜி.பி அலுவலகத்தில் கேட்டால் முதல்வரிடம் கோப்பு இருக்கிறது என்கிறார்களாம். முட்டி மோதி முதல்வர் அலுவலகத்தை மோப்பம் பிடித்துப் பார்த்தால், உள்துறையில் கோப்பு நிற்கிறது என்று சொல்கிறார்களாம். குடும்பத் தலைவர்களை இழந்து சோகத்திலும், வறுமையிலும் இருக்கும் குடும்பத்தினரின் வாட்டத்தைப் போக்குவாரா முதல்வர்?

சமீபத்தில் ஜூனியர் அமைச்சர்கள் சிலர் கலைஞரிடம் சென்று 'எங்களை அதிகாரிகள் மதிப்பதே இல்லை!' என்று புலம்பியிருக்கிறார்கள். ஒரு வருட காலம் அமைச்சராக இருந்தும் அரசாங்க நடைமுறைகளையும், செயல்பாடுகளையும் இன்னும் புரிந்து கொள்ளாமல் இருக்கிறார்களாம் இந்த அமைச்சர்கள். 'மானியக் கோரிக்கையை நிறைவேற்றித் தர வேண்டும்' என்பதற்குப் பதிலாக 'மசோதாவை நிறைவேற்றித் தர வேண்டும்' என்று சமீபத்தில் ஓர் அமைச்சர் சட்டமன்றத்தில் சொன்னார். "கார், பங்களா, ஆட்கள் என்று அனுபவிக்கிறார்களே தவிர, வகிக்கும் பதவிகளுக்குக் கொஞ்சமும் நியாயம் செய்வதாகத் தெரியவில்லை!" என்று சொன்னார் கோட்டை அதிகாரி ஒருவர்.

முறைகேடாக ஆடம்பர லெக்ஸஸ் காரை இறக்குமதி செய்ததற்காக நடராஜனும், பாஸ்கரனும் மாட்டிக் கொண்டுள்ளார்கள் அல்லவா! இப்போது வேறு ஒரு சங்கதியும் அம்பலத்துக்கு வந்திருக்கிறதாம். லெக்ஸஸ் போலவே B.M.W (British Motor Works) என்ற கார்களும் மிகவும் விலை உயர்ந்தவை. இது போன்ற மூன்று கார்களை சம்பந்தப்பட்ட கோஷ்டியினர் பினாமிகள் மூலம் இறக்குமதி செய்திருக்கிறார்கள். மத்திய அரசும் அப்போது இறக்குமதித் தீர்வை போடுவதில் பெரும் சலுகை காட்டியிருக்கிறதாம். இப்போது B.M.W கார்களைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள் அதிகாரிகள். எந்த கொடவுனில் ஒளித்து வைக்கப்பட்டிருக்கிறதோ!

— தில்லப்பா

# கல்கி கன்ஸல்டன்ஸி



• அம்பானி

**பங்கு மார்க்கெட் மிகவும் சோர்ந்த நிலைக்குப் போயிருக்கிறது. புதிய திட்டங்களுக்கோ தொழில்களுக்கோ பொது மக்களிடமிருந்து தாராளமாக முதலீடு பெற, நிறுவனங்களால் முடியவில்லை.**

# 65 சதவிகித அம்பானி!

மார்ச் 31– பிஸினஸ்காரர்களும் முதலீட்டாளர்களும் ஆவலுடன் எதிர்நோக்கும் தேதி. ஒரு நிதியாண்டுக்கான கணக்கு முடிந்து, டிவிடண்ட் அறிவிக்கப்படும் சமயம்.

1996 மார்ச் 31-இல் முடிவுற்ற நிதியாண்டில் அனேகமாக எல்லா முன்னணி நிறுவனங்களுமே சிறப்பாகச் செயலாற்றி நல்ல லாபம் சம்பாதித்தன. அதன் அடிப்படையில் நாட்டின் மொத்த உற்பத்தி GDP எனப்படும் Gross Domestic Product சுமார் ஏழு சதவிகித வளர்ச்சி கண்டதாக அறிவிக்கப்பட்டது.

ஆனால் கடந்த நிதியாண்டில் ('96-97) அதே அளவு சுபிட்சம் இல்லை. தொழில் வளர்ச்சி குன்றியதை ஏற்கெனவே குறிப்பிட்டேன்.

இதன் விளைவாக பங்கு மார்க்கெட் மிகவும் சோர்ந்த நிலைக்குப் போயிருக்கிறது. புதிய திட்டங்களுக்கோ தொழில்களுக்கோ பொது மக்களிடமிருந்து தாராளமாக முதலீடு பெற, நிறுவனங்களால் முடியவில்லை.

இந்தியாவின் மிகப் பெரிய கம்பெனி என்று அங்கீகரிக்கப்பட்ட ரிலையன்ஸ் மட்டும் இத்தனை கஷ்டத்துக்கிடையிலும் அதிரடி அறிவிப்பு செய்திருக்கிறது. 95–96 ஆம் ஆண்டு 60 சதவிகிதம் டிவிடண்ட் கொடுத்தது ரிலையன்ஸ். 96–97 இலோ 65 சதவிகிதம் டிவிடண்ட் அறிவிக்கப்பட்டுள்ளது!

26 லட்சம் பங்குதாரர்களைக் கொண்ட நிறுவனம்; ரிலையன்ஸ் தயாரிப்புகள் மட்டும் போன ஆண்டைக் காட்டிலும் இந்த ஆண்டு 12 சதவிகிதம் கூடுதலாக விற்றுள்ளன. அதன் மூலம் 9000 கோடி ரூபாயாக வருமானம் அதிகரித்திருக்கிறது. லாபமும் 1396 கோடியிலிருந்து 1410 கோடியாக உயர்ந்திருக்கிறது...

இவ்வளவையும் பார்க்க, 65 சதவிகித டிவிடண்ட் அறிவிக்கப்படுவதில் என்ன ஆச்சர்யம்...? என்று கேட்கலாம்.

ரிலையன்ஸ் பங்குதாரர்கள் நிச்சயமாக மகிழ்ச்சியின் உச்சத்தில் இருப்பார்கள். அவர்கள் மட்டுமல்ல... மற்றவர்களும் ஒரு விஷயத்தை யோசித்துப் பார்க்க வேண்டும்.

போன நிதியாண்டில் நிலவிய பண வீக்கம் சுமார் 12 சதவிகிதம் என்பது நிபுணர்களின் கணிப்பு.

பணவீக்கம் என்றால் ரூபாயின் மதிப்பு குறைந்து போகும் நிலை என்பது நமக்குத் தெரியும்.

அதாவது போன வருஷம் நூறு ரூபாய்க்கு வாங்கிய ஒரு பொருளுக்கு இந்த ஆண்டு பணவீக்கம் காரணமாக 112 ரூபாய் கொடுக்க வேண்டி வரும்.

ரிலையன்ஸ் தயாரிப்புகளின் விலையும் இந்தப் பண வீக்கத்தால் பாதிப்புக்குள்ளாகும் அல்லவா...? எனவே, ரிலையன்ஸ் இவ்வாண்டு பெற்றுள்ள கூடுதல் வருமானத்தில் கணிசமான பகுதி பண வீக்கத்தினால் விளைந்ததுதான்! இது ஒரு வகையான செயற்கை வருமானம்தான். உற்பத்திப் பெருக்கத்தினால் வருமானம் கூடி, லாபமும் அதிகரிக்கும் போதுதான் ஆரோக்கியமான பொருளாதார வளர்ச்சி அடைந்திருப்பதாகக் கொள்ளலாம். இதை நாம் மறந்துவிடலாகாது.

ஆனால் ஒன்று. அந்தப் பன்னிரண்டு சதவிகித பணவீக்க 'வருமானத்தை'த் தோராயமாகக் கழித்து விட்டுப் பார்த்தால் கூட, ரிலையன்ஸின் செயல்பாடு சிறப்பானதாகவே தெரிகிறது. அதற்காக திருபாய் அம்பானியைப் பாராட்டத்தான் வேண்டும்.

(அடுத்த வாரம்)

**வி. கோபாலன்**

# தீ! தீ!

**ஹஜ் யாத்திரிகர் அப்துல் ஜபார், திகிலூட்டிய, அந்தப் பெரும் தீ விபத்தில் சிக்கிய அனுபவத்தை விவரிக்கிறார் :**



• தீயில் எரிகிற கூடாரங்கள்

• அப்துல் ஜபார்

ஏப்ரல் பதினைந்தாம் தேதி. மெக்கா நகரிலிருந்து ஒன்பது கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள மினா என்ற இடத்தில் இருந்தோம். பிரம்மாண்டமான திடலில், இருபதுக்கு இருபது அளவில் சுமார் ஒன்னே கால் லட்சம் கூடாரங்கள்! அதில் ஒன்றில்தான் நான், என் மனைவி, என் அண்ணன், அவர் மனைவி, என் நண்பர் மற்றும் அவர் மனைவி ஆகிய ஆறு பேரும் தங்கியிருந்தோம்.

பகல் பன்னிரெண்டு மணி. நான் சற்றே அசதியாய்ப் படுத்திருந்தேன். திடீரென்று கூக்குரல்கள்! என்ன என்று பார்க்கச் சொன்னேன். வெளியே சென்று திரும்பியவர்கள் பதற்றத்துடன், "ஐயோ! பெரும் தீ! உடனே இடத்தை காலி செய்யுங்கள்!" என்று அலறினார்கள்.

முக்கியமான சாமான்களை மட்டும் எடுத்துக் கொண்டு, கூடாரத்தை விட்டு வெளியேறி, ஓட ஆரம்பித்தோம்.

சில நிமிடங்களில் வானம் முழுக்கப் புகைமண்டலம்! நானும், என் மனைவியும் மட்டும் இருக்க, மற்றவர்கள் என்ன ஆனார்கள் என்றே தெரியவில்லை!

எந்தப் பக்கம் பார்த்தாலும் தலைதெறிக்க ஓடும் மனிதக் கூட்டம்! ஓடும்போது, என் மனைவி கீழே விழுந்து விட, நான் அவளைக் கைப்பிடித்து தூக்க முயல, நானும் நிலைதடுமாறிப் போனேன். என்னையும், என் மனைவியையும் மிதித்துக்கொண்டு ஓடினார்கள்! ஒரு பாகிஸ்தானியர் கைகொடுத்தார். "பாய்! உயிர்தான் முக்கியம்! மற்ற பொருட்களைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம்!" என்று கூறினார். நானும், மனைவியும் தடுமாறி எழுந்து, மறுபடி ஓட ஆரம்பித்தோம். ஒருவழியாய் பல கிலோ மீட்டர்கள் ஓடி, பாதுகாப்பான இடத்தை அடைந்தோம்.

தீயை அணைக்க, உடனடியாய் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. ஹெலிகாப்டரிலிருந்து தண்ணீர் பீச்சப்பட்டது. விளக்குக் கம்பங்களில் பைப் பொருத்தி, இதுபோன்ற எமர்ஜென்ஸி நேரத்தில் தண்ணீர் பீய்ச்சியடிக்க ஏற்பாடு செய்யப்பட் டிருந்ததால், அங்கிருந்து தண்ணீர் வெளிப்பட்டு, நெருப்பை அணைத்தது!

தவிர, தீயணைப்புப் படையினரது தீவிரப் போராட்டம். பிற்பகல் மூன்றரை மணிக்கு, சுமார் எண்பத்தையாயிரம் கூடாரங்களை சுபளீகரம் செய்து, பல உயிர்களை பலிவாங்கிய தீ அணைக்கப்பட்டது!

தீ அணைக்கப்பட்டபின், விபத்து நடந்த இடத்தில் சுமார் ஓரடி உயரம் தண்ணீர் தேங்கியிருந்தது!

அண்ணன் மற்றும், நண்பர் தம்பதிகள் என்ன ஆனார்கள் என்று தெரியாமல் திண்டாடினோம். ஊருக்கு டெலிபோன் செய்து தகவல் சொல்லவும் முடியவில்லை. மூன்று நாட்கள் பல இடங்களிலும் தேடிக் களைத்தோம்!

மூன்றாவது நாள், மெக்காவில் நாங்கள் தங்குவதற்காக எடுத்திருந்த விடுதிக்குப் போனபோது, அங்கே அவர்கள் எங்களுக்காகக் காத்திருந்தார்கள்! நிம்மதிப் பெருமூச்சு விட்டோம்!

சந்திப்பு : **மௌலி**

# ஆஸ்காருக்கா போகிறது அருணாச்சலம்?

## நச்!

"பேர் தெரியாத யார் யாரோட புடைவைங்களையெல்லாம் துவைக்கும்போது, எம் பொண்டாட்டி புடைவையை நான் துவைக்கிறதுல என்ன கேவலம்?" என்ற சலவைத் தொழிலாளியின் பேச்சு 'நச்' சென்று இருந்தது!

கல்தான்பேட்டை, புதுவை கமால்பாட்சா.

## இதம்!

அந்த ஆண்டவனே சொன்னாலும் இந்த 'கல்கி'யின் விமர்சனம் நடுநிலையாகத்தான் இருக்கும் என்பதை மெய்ப்பித்தது உங்களின் 'அருணாச்சலம்' விமர்சனம்!"

மதுரை, பி.எம். வள்ளி.



பெரும் எதிர்பார்ப்புகளுடன் வந்திருக்கும் அருணாச்சலத்தை ஆகா, ஓகோ எனப் பாராட்டாமல், நடுநிலையுடன் நிறைகளைப் போல குறைகளையும் சுட்டிக் காட்டி விமர்சனம் செய்திருந்த விதம் மனதுக்கு இதமாக இருந்தது.

கும்பகோணம், கே.ஆர். ரவிக்குமார்.

## வேடிக்கை!

எந்தப் படத்தில்தான் இன்று சரக்கு இருக்கிறது? அதிலும் ரஜினியின் படங்கள் பக்கா பொழுதுபோக்குப் படங்கள் என்பது உங்களுக்கு நன்றாகத் தெரியும். ரசிகர்களை குதூகலிக்கச் செய்வதுதான் ரஜினியின் நோக்கம். அதனை மிக அழகாக, நேர்த்தியாக, விறுவிறுப்பாக அருணாச்சலத்தில் செய்தும் காட்டியிருக்கிறார். ஆனால் நீங்கள் ஏதோ ஆஸ்கார் அவார்டு பெற அனுப்பப்படும் ஒரு படத்தை அக்குவேறு ஆணிவேராக அலசப் புறப்பட்டதுபோல் விமர்சனம் எழுதியிருக்கிறீர்கள். வேடிக்கைதான்!

மணக்காடு, சி.தெ. ரஜினி அருள்.

## என்று?

கேசரி காங்கிரஸின் சந்தர்ப்பவாதச் சதிகளனைத்தையும் அவிழ்த்தெழுதப்பட்ட தங்களது 'கவிழ்ப்பு அரசியல்!' தலையங்கம் பல உண்மைகளைப் பட்டவர்த்தனமாகப் பிட்டுப்பிட்டு வைக்கிறது! தன்னூரன் பெருக்கற்குத் தான் பிறிதூனுண்ணும் கசாப்புக் கொள்கைகளைக் காங்கிரஸாரும், இதரக் கட்சியினரும் என்று விட்டொழிக்கின்றனரோ, அன்றுதான் ஆரோக்கியமான ஆட்சி இந்தியத் திருநாட்டிற்குக் கிட்டும்!



இனாம் மணியாச்சி, எஸ்.ஏ. கேசவன்.

## கோபத்தின் காரணம் ?

இந்துவின் பேட்டி படிக்கப் படிக்க சுவாரஸ்யமாய் இருந்தது; "நடிகைன்னா படிக்கக் கூடாதா" என்ற அவரின் கோபம் புரிகிறது. ஏனென்றால் அவர்தான் 'பாரதி கண்ணம்மா' வாயிற்றே!

பு.புளியம்பட்டி, அ. கிருஷ்ணகுமார்.

## ஹாட்ஸ் ஆஃப்!

தெருநாய்கள் ஒன்றும் கேவலமில்லை என்ற டாக்டர் மாலதியின் கருத்து எல்லோரையும் சிந்திக்க வைக்கும். மனிதர்களை, மனிதர்களே வெறுக்கும் இக்காலத்தில் தெரு நாய்களிடம் அன்பு செலுத்தும் இவரின் உயர்ந்த குணத்தையும், பணியையும் பாராட்ட வார்த்தைகளே இல்லை.



விபீஷணபுரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

## பளிச்!

உயர்ஜாதி நாய்கள் மட்டுமே வீட்டில் வளர்க்கத் தகுதியுடையவை என்ற பெரிய மனிதர்களுடைய எண்ணத்திற்குப் பெரிய முற்றுப்புள்ளி வைத்து, நாய் எந்த ஜாதி என்பதைவிட நம் மனசு எப்படி என்பதுதான் முக்கியம் என்று உணர வைத்த டாக்டரின் பதில் 'பளிச்' என்றிருந்தது.

மேலப்பாதி, என். ராஜி.

## காணாமல் போகாது!

'காணாமல் போனவர்கள்' கவிதை, நெஞ்சை விட்டு ஒருநாளும் காணாமல் போகாது.

பூதப்பாண்டி, ஆ. அழகேசன்.

• ஜாய் குட்டி

# “என் குழந்தைகளுக்கு நான்தான் ரோல்மாடல்!”

“பார்ட்டி, மீட்டிங், பிசினஸ், டூர் என்பதற்கே நேரம் போதாதபோது, குடும்ப உறவை வலுப்படுத்திக் கொள்வதற்கு நேரம் இருக்கிறதா?” - கியுப்ளக்ஸ் கேபிள்ஸ் நிறுவனத்தின் சேர்மன் - மானேஜிங் டைரக்டரான பி.ஏ. ஜாய் குட்டியிடம் கேட்டோம்.

“நேரத்தை உருவாக்கத்தான் வேண்டும். குடும்பத்தினர் மீது அளவு கடந்த பாசம் காட்டினால் எந்த உரசலும் விரிசலும் ஏற்படாது என்று சொல்வது சுலபம். நடைமுறையில் பெரும் சிக்கலான இந்த வித்தையை என் வாழ்க்கையில் வெற்றிகரமாக சாதிக்க முடிந்திருக்கிறது” என்றார்.

“என் குழந்தைகளுக்கு நான்தான் ரோல் மாடல். அவர்களின் குழந்தைப் பருவத்தில் இருந்தே பலதரப்பட்ட விஷயங்களை அவர்களுக்கு எடுத்துச் சொல்லி, புரிய வைத்தேன்.

“என் மனைவி, குழந்தைகள் எல்லோருமாக இரவில் உறங்கப் போகும் முன் ரொம்ப நேரம் பேசிக் கொண்டிருப்போம். எங்களுக்குள் ஒளிவு மறைவு இல்லை. என் குழந்தைகள் வளர்ந்து கல்லூரிக்குப் போன பிறகும் இந்தப் ‘பேச்சு’ தடை படவில்லை.

“பெரிய மனிதர்கள் எப்படியெல்லாம் தவறான போக்கினால் சரிந்து போனார்கள் என்பதை உணர வைத்தேன். இரவு கூட்டாக பிரேயர் செய்து சாப்பிடுவது, ஞாயிற்றுக்கிழமைகளில் குடும்பத்துடன் சர்ச்சுக்குச் செல்வது போன்ற பழக்கங்களெல்லாம் எங்களுக்குள் ஒரு நெருக்கத்தை ஏற்படுத்தியிருக்கிறது. நான் என் குழந்தைகளிடம் என்ன ஒழுங்கு முறைகளை எதிர்பார்க்கிறேனோ அதை நானும் கடைப்பிடிப்பவன் என்பதும் அவர்களுக்குத் தெரியும்!”

• பிள்ளைகளுடன்....



இப்படி, இவர் நம்மிடம் பேசியபோது, ராணுவ அதிகாரியின் கண்டிப்பும், நீதி

போதனை வகுப்பு நடத்தும் ஆசிரியர் த்வனியும் தென்பட்டதால், ஒரு சந்தேகம் மின்னலடித்தது.

"நீங்கள் சொல்வதையெல்லாம் அவர்கள் கேட்டுக் கொள்கிறார்களா? இளமைப் பருவத்திற்கே உரிய சுதந்தரப் போக்கினால் உங்கள் தலையீட்டை ஒரு தொல்லையாக நினைக்க மாட்டார்களா...?"

"நான் எதையுமே அவர்கள் மீது திணிக்க மாட்டேன். கட்டுப்படுத்தவும் மாட்டேன். கொஞ்சம் விட்டுப் பிடிப்பவன் நான். என் மகன் 'எஸ்டி' பைக் கேட்டான். அவனது உடல்வாகுக்கு அது சிரமமாக இருக்குமே என்று சொன்னேன். விடாப்பிடியாக இருந்தான். வாங்கிக் கொடுத்தேன். அதை ஓட்டும் போது ஒரு சின்ன விபத்தில் மாட்டிக் கொண்டான். 'அப்போதே சொன்னேன்... கேட்டியா' என்ற ரீதியில் ஒரு சின்ன வார்த்தை கூடக் கடுமையாகப் பேசவில்லை. அவன் உடல்நிலை பற்றித்தான் பதறிப் போனேன். 'எஸ்டி' ஆசையை அத்தோடு மறந்து போனான். இப்படிப் பல சம்பவங்கள்!

"என் குழந்தைகள் மீது அதிகம் பாசம் கொண்டவன் நான் என்பதை அவர்கள் புரிந்திருக்கிறார்கள். எப்போதாவது என் இரண்டு மகன்களில் யாராவது நள்ளிரவு ஒரு மணிக்கு வீட்டிற்கு வந்தால் அதுவரை சாப்பிடாமல், தூங்காமல் காத்திருப்பேன். தொழிற்சாலையில், அலுவலகத்தில் ஏகப்பட்ட பிரச்னைகளைச் சந்தித்து வீடு திரும்பும் அப்பாவை இப்படியெல்லாம் வேதனைப்படுத்தக் கூடாது என்பதை அவர்களும் உணர்ந்து கொள்கிறார்கள்!

"பல விஷயங்களை அவர்களுக்குக் கற்றுத் தருகிறேன். என் குழந்தைகளிடமிருந்து பலவற்றைக் கற்றுக் கொள்கிறேன். கம்ப்யூட்டர் வளர்ச்சி, நவீன தொழில்நுட்பங்கள் பற்றியெல்லாம் அவர்கள் எனக்கு விளக்குவார்கள். இதற்காக வெளிநாடுகளில் வசிக்கும் தத்தம் கல்லூரி நண்பர்கள் மற்றும் உறவினர்களிடமிருந்து பலதரப்பட்ட புத்தகங்களை வரவழைப்பார்கள். என் குழந்தைகள் எனக்குச் சொல்லும் பல தகவல்கள் பிஸினஸுக்கு ரொம்ப உதவியாக இருக்கின்றன. என் பெட் ரூமில் தினமும் சுமார் இரண்டு மணி நேரம் எங்கள் 'பேச்சு வார்த்தை' அரட்டை, விவாதம், கலந்துரையாடல் என ஒரு கலவையாக நடைபெறும்!" என்கிறார் ஜாய் குட்டி.

**— மு. சிவலிங்கம்**

# மகத்தான காவியங்கள் அவருக்கு பொக்கிஷம் போல...

டெபாசிட்டுகளை வரவேற்கிறோம்

பழைய மேஜைகள்: சாகா வரம்பெற்ற காவியங்கள்; காலங்காலமாக மனித உறவுப் பிணைப்பு தந்த புத்தகங்கள். உங்கள் பணம் உங்களுக்குக் கவலை தரும் வகையில் இருக்கக் கூடாது. அது பாதுகாப்பைத் தந்து, நல்ல முறையில் வளர்ந்து பெருக வேண்டும். அதற்கு நிபுணர்களின் உதவியை நாடுவதே நல்லது.

இது தவணைக் கொள்முதல் நிதி நிறுவனமாக (Hire Purchase Finance Company) ரிசர்வ் பாங்க் ஆப் இந்தியாவின் ஒப்புதல்பெற்ற வங்கி அல்லாத நிதி நிறுவனம் (Non banking Finance Company) ஆகும் (984/BG (TN) HP (E) 15 ● நிர்ணயிக்கப்பட்டுள்ள குறைந்தபட்ச அளவாகிய 8%-க்கு எதிராக 48.46% மூலதன நிறைவு விகிதத்தைக் (Capital Adequacy Ratio) கொண்டு RBI குறிப்பிட்டுள்ள விவேகமான கணக்கு வைப்பு முறைகளைப் பின்பற்றுவது ● தொடக்க காலம் முதலே லாபம் மற்றும் டிவிடெண்டுகளைப் பொறுத்தவரை நிலையாக ஒரே சீரான சாதனை.

உங்கள் பணத்தைச் சிறந்த முறையில் நிர்வகிக்க வேண்டும். அதற்கு எக்ஸ்பிரஸ் ஃபைனான்ஷியல் எக்ஸ்சேஞ்ச் நிறுவனத்துடன் இன்றே தொடர்பு கொள்ளுங்கள்.

... எக்ஸ்பிரஸ் ஃபைனான்ஷியல் எக்ஸ்சேஞ்சும்தான்.

**EXPRESS**
**FINANCIAL EXCHANGE LTD.**

- Authorised Dealer American Express Bank TRS
- Authorised Dealer Mashreq Bank Visa International
- A Bank of America Associate
- FFMC Licensee of Reserve Bank of India
- SEBI Registered Merchant Banker

**எக்ஸ்பிரஸ் பைனான்சியல் எக்ஸ்சேஞ்ச் லிமிடெட்.**
பதிவு அலுவலகம்: 9, அட்லேஸ் டவர், தெற்கு போக் சாலை, சென்னை-600 017. போன்: 4340325, 4340329, ஃபாக்ஸ்: 4341403,

● டெல்லி ● மும்பை ● பெங்களூர் ● பாண்டிச்சேரி ● இந்தூர் ● ஹைதராபாத் ● விசாகப்பட்டினம் ● விஜயவாடா ● திருச்சி ● கும்பகோணம் ● கோயம்புத்தூர்

Heros Matheson

மந்தா போய்விட்டாள்! தூக்கத்திலேயே உயிர் போய்விட்டிருக்கிறது. விடிய விடிய திண்ணையில் அமர்ந்து கொண்டு இன்னொரு பக்கம் செத்துக் கிடக்கும் தாத்தாவைப் போய்ப் பார்க்கலாமா? வேண்டாமா? என்று ஒரு பட்டிமன்றத்தை பானு நடத்திக் கொண்டிருக்கும்போதே நானும் போகிறேன் என்று கிழவி போய் விட்டாள்.

சுசீலா எதையும் யோசிக்காமல் சொல்ல மாட்டாள்தான். எனவே தாத்தா முகத்தைப் போய்ப் பார்த்து விட்டு வந்து விடுவதுதான் நல்லது என்று காலெடுத்த போதுதான் கிழவியை ஒரு பார்வை பார்க்கும் ஆசை வந்தது.

- போய்ப் பார்த்தபோது விரைத்துக் கிடந்தாள்!

முடிந்து விட்டது. பானுவைப் பொறுத்த மட்டில் ஒரே நேரத்தில் இரண்டு இழப்பு. விடியலில் இப்படி அனாதை உறவு வந்து கட்டி அணைத்துக் கொள்ளும் என்று துளி கூட எதிர் பார்த்திராத அதிர்ச்சியில் காலை முடக்கி முகம் புதைத்துக்கொண்டுவிட்டிருக்கிறாள்.

சுசீலா இருந்தால் ஆறுதல் சொல்லக் கூடும். இப்பொழுதுதானா அவளுக்குத் திருப்பதி ஆசை வர வேண்டும்?

**செத்தவரைத் தூக்கிக் கொண்டு விற்றுவரப் போன கதையாக, கிழவிதான் என்ன கருவாடா? இல்லை பானுதான் அதற்குரிய விலையா? புரியவில்லையே...**

அந்த குச்சு வீட்டில் அவளைச் சுற்றி இப்பொழுது வீதி முகங்கள். போனால் போகட்டும் என்று ரேடியோ பாட்டை நிறுத்தி விட்டிருக்கிறார்கள். கூடிக் கூடிப் பேசுகிறார்கள்.

திட்டமிட்டபடி அம்மன் வைப்பது நடக்குமா?

"அதுபாட்டும் அது... கிழவிய வேகமா தூக்கிட்டா போச்சு. அவளுக்கு என்ன பம்பாய், மெட்ராஸ்னு ஆளுங்க வரணுமா? இந்த பானு பொண்ணு மட்டும் தானே...?"

- முடிவின் எதிரொலி வீட்டைத் தாக்குகிறது.

"ஏம்மா பானு... இப்படி அழுதுக்கிட்டிருந்தா எப்படி? பூஞ்ச உடம்பும்மா. ரொம்ப நேரம் வெச்சிருக்க முடியாது- காட்டுக்குச் சொல்லணும்... அய்யருக்கும் சொல்லணும்... காசு எதாவது வைச்சிருக்கியா?"

"யாருய்யா நீ.. அய்யர் ஆட்டுகுட்டின்னு கிட்டு. காரியம் பாக்க யாருய்யா இருக்கா?

# 17



பானு... அழுவறத நிறுத்திட்டு கொஞ்சம் பேசம்மா... கைல எவ்வளவு வெச்சிருக்கே... வசூல் பண்ணனுமா? நீ சொல்ற பதில்ல தானே இருக்கு எல்லாம்..."

பானு எதுவுமே பேசாமல் அழுது கொண்டே இருக்கிறாள். அவ்வப்போது நிமிர்ந்து, வந்து நிற்பவர்களில் மோகன் ராமை மட்டும் ஒரு தேடு தேடுகிறாள்.

'இவன் என்ன இப்படி மாறிவிட்டான்? அந்த பெண் கனகாவுக்கு இவ்வளவு சக்தியா என்ன?'

கிழவி- காரியம்-என்கிற சகலத்தையும் மீறி அவளுக்குள் இந்தக் கேள்விகளின் ஆளுமை தான்.

"இதென்னடா பேசிக்கிட்டேயிருக்கோம்.... பதில் சொல்லாம அழுதுகிட்டேயிருக்கு? ஏம்மா இப்படி பண்ணா எப்படி? வசூல் பண்ணிடவா?"

கேள்விக்கு அவளிடம் பதில் வரும் முன்பே வீதியில் அவள் வீட்டு முன் துண்டு விரிகிறது.

"மந்தா போய்ட்டாப்பா... பாத்துப் போடுங்க. நமக்கெல்லாம் நாக்குக்கு வக் கணையா இட்லி, தோசை சுட்டுப் போட்ட கிழவி போய்ட்டா. தாராளமா போடுங்க. நல்லபடியா அடக்கம் பண்ணுவோம், போடுங்கப்பா போடுங்க..."

- வரதன் என்னும் ஒரு குடிகாரன் துண்டு விரித்து விட்டான். அன்றைய காலையிலேயே ஒரு ஐந்து ரூபாய்க்காக தாடையைச் சொரிந்த வனுக்கு மந்தா வசமாக மாட்டி விட்டாள். பாதிக்கு பாதி தேட்டையிடலாம். நல்ல வேளை மோகன் ராமும் இல்லை- இருந்தால் முதலில் வசூலே நடக்குமா என்பது சந்தேகம்.

"போடுங்க.... போடுங்க... குறைஞ்ச பட்சம் ஐநூறு ரூவாயாவது வேணும். இன்னும் நூறு கூட தேரலையே..."

'அகப்பட்டதடா சஞ்சீவி பர்வதம்' என்கிற மாதிரி உள் நுழைந்திருந்தான் தாமு!

அவன் நுழைந்த பிறகு எல்லாமே மாறிப் போய் விட்டது.

"எவண்டாவன் நான் இருக்கும் போது வசூல் பண்றது? வாடா இங்க... வசூல் பண்ண காசை எல்லாம் திருப்பிக் கொடு. நான் இருக்கும்போது கிழவி எப்படிடா அனாதை ஆவா? விட்டா துண்டு விரிச்சு ஒரு ஆட்டம் போட்றுவீங்களே...

"டேய் ராமா, போய் ஐயர்க்கு சொல் விட்டுவா. இந்தாடா மணி, மொத பானுவுக்கு காப்பி-டிபனுக்கு ஏற்பாடு செய்...

"ஆமா ஏன் இப்படி மெட்டிகிட்டு மூலைக்கு மூலை வெளியே நிக்கறீங்க. போய் உள்ள உக்காருங்க.

ஏன் தாயி வெளிய நெருப்பு போடறதுக் கென்ன?"

- பரபரக்கிறான். நன்றாகவே விரட்டு கிறான். பைஜாமா குர்தா என்கிற உடுப்பில் ஒரு மார்வாடி தோற்றம். செயல்களில் கொப் பளிக்கும் மனிதாபிமானம்.

யாருக்கும் எதிர்த்துப் பேசும் துணி வில்லை.

ஐயோ ஆட்டுக்குட்டியை பார்த்து ஓநாய் இரக்கப்பட ஆரம்பித்து விட்டதே என்கிற நினைப்பு உள்ளுக்குள் தோன்றினாலும் 'நமக் கெதுக்கு ஊர்வம்பு?' என்கிற இந்திய தேசம் முழுமைக்கும் குத்தகைக்கு எடுத்துக் கொள் ளப்பட்டு விட்ட பிரதான கேள்வி அவர் களைத் தடுத்து விடுகிறது. கொஞ்சம் கூடுத லாக சிந்திக்க முடிந்தவர்கள் 'ஹூம் எல்லாம் அவங்கவங்க தலையெழுத்து' என்று ஒரு அடிஷனையும் சேர்த்துக் கொள்கிறார்கள்.

"கனகா... கொஞ்சம் பாத்துக்கோ. போய் கிழவி வீட்ல தலைகாட்டிட்டு வந்துட் றேன்." மகாலட்சுமி கிளம்புகிறாள்.

"அத்தே அந்தக் கிழவி நமக்கு எதாவது உறவா?"

"அதெல்லாம் ஒண்ணுமில்ல. முப்பது வருஷ பழக்கம்- நல்ல மனுஷி அவ்ளோதான். அனாதையா சாகணும்னு ஆண்டவன் தலைல எழுதிட்டான்."

"ஏன் பேரன் பேத்தின்னு...?"

"ஒருத்தரும் கிடையாது. ஒருபொண்ணு இருந்தா. முஸ்லீமைக் கட்டிக்கிட்டா! அவ பொண்ணுதான் இப்ப இருக்கற பானு. அன் னிக்கு கூட கசிலாங்கறவனுக்கு வக்காலத்து வாங்கிக்கிட்டு வந்தாளே..."

"ஆமா... என்னைக் கூட முறைச்சு முறைச்சு பாத்துகிட்டேயிருந்தா."

---

**"நாளையுடன் ரிடையராகறேன். என் ஆசையை நீதான் நிறைவேற்றி வைக்கணும்!"**

**"சொல்லுங்க ஸார்... நான் என்ன செய்யணும்?"**

**"நாளை மட்டும் கரெக்ட் டயத்துக்கு ஆபீஸ் வந்துடு... போதும்!"**

**- உ. ராஜாஜி**



"அவளேதான்... அவளை நினைச்சா தான் செத்த வயித்தப் பிசையுது. அந்த தாமுக் கடங்காரன் அவளை எதுவும் பண்ணிடாம இருக்கணும்."

"என்ன அத்த சொல்றீங்க?"

"அவன் ஒரு தெருப் பொறுக்கிம்மா. கட்டப் பஞ்சாயத்து, சாராயம், அடிதடி எல்லாத்துலயும் அவனுக்குத் தொடர்புண்டு. அட நம்ம மோகன் தறிக்கு நெருப்பு வைக்கலை..."

- கனகா அகண்ட கரிய விழிகளோடு அனைத்தையும் கேட்டு அதில் மேலும் விரிவைக் கூட்டுகிறாள்.

"அவன் அந்தப் பொண்ணை என்ன பண்ணிடுவான்னு நினைக்கறீங்க?"

"நல்லா கேட்டே போ... இது எல்லாம் உனக்கு தெரிஞ்சு ஆகப் போறதும் ஒண்ணுமில்லே. சனியனைவிடு. அவன் போட்டத யாரால மாத்த முடியும் சொல்லு பாப்போம்..."- மகாலட்சுமி பேசிக் கொண்டே வீதியில் இறங்குகிறாள்.

கனகாவிடம் புழுக்கம். அதிலும் பானுவை உத்தேசித்து நிறையவே புழுக்கம்.

சிந்தனையின் நீட்டத்தில், மோகன்ராம் இருந்தால் என்ன செய்வான் என்கிற கேள்வி எழுகிறது.

காலியாய்க் கிடக்கும் தறிமேடையைப் பார்க்கிறாள்.

ஒரு நோட்டோ புத்தகமோ ஓரமாய் கெண்டைகளோடு கிடக்கிறது. டைரியும். நெருங்கித் தொட்டுப் பிரிக்கிறாள். வரவு செலவுக் கணக்கிலிருந்து எதை எதையோ எழுதி வைத்திருக்கிறான். டைரியை எடுத்து வந்து நடு நடுவே சில வார மாதப் பத்திரிகைகளில் வந்த பழமொழிகளையும், முக்கியச் செய்திகளையும் கூட கட் பண்ணி வைத்திருக்கிறான். வழக்கம் போல் அவனது அபிலாஷைக் குறிப்பும் இருக்கிறது.

'இன்றைய ரேஷன் அனுபவம் சற்று கொடுமையானது. அவளும் உதவ முன் வந்தாள். ஆனால் அவளை மறுக்க முடியாமல் மனதுக்குள் திணறுகிறேன். அவளது புகைப்படமே எனக்குப் பெரிய போதை தருகிறது. எங்கு சென்றாலும் அவள் பார்வை இடிக்கிறது. இந்த நிலையில் வீட்டுக்குள் இருந்து நான் படித்து உருப்படுவது எப்படி? நமக்கெல்லாம் நாம மலைதான் சரி...'

- படித்த வரிகளால் கனகாவின் மனம் நெகிழ்ந்து போகிறது. இவன் கைக்கு எப்படிப் போனது தனது புகைப்படம்? கேள்விப் பந்து எழுகிற நேரத்தில் எட்டிப் பார்க்கிறான் முகுந்தன்.

"மோகன் இல்லியா?"

"இல்லை... இந்தக் குழாய்ப் பாட்டுக்குப் பயந்துகிட்டு நாம மலை பக்கம் படிக்க போய்ட்டார்."

"அடடா... இப்ப நான் அவ்ளோ தூரம் போகணுமா?"

- முணுமுணுப்புடன் திரும்ப நினைத்தவன் சட்டென்று பிரேக்கடித்தான். வீட்டுக்குள் அமீனா கிருஷ்ணா ராவ் நுழைந்து கொண்டிருந்தார்.

ஏதோ கும்பாபிஷேகம் முடிந்து திரும்பும் சாஸ்திரி போல் கைவசம் ஒரு தட்டில் எதையோ மூடி எடுத்தும் வருகிறார்.

"நீ என்ன இங்க பண்றே வயசுப் பொண்ணு இருக்கற இடத்துல...?" என்று முகுந்தனைப் பார்த்துப் பெரிதாய் கேள்வி வேறு. முகுந்தன் பேசவில்லை.

"அம்மாடி... இந்தா பிரசாதம். வீட்ல ஹோமம் செஞ்சேன். அதான் இந்தா..." என்று கனகாவை நோக்கி, தட்டை நீட்டுகிறார் கிருஷ்ணாராவ்.

ஹோமப் பிரசாதம் என்று நீட்டிய தட்டில் மெது வடை, சர்க்கரைப் பொங்கல் என்கிற வகையறாக்கள்!

"சும்மா எடுத்துச் சாப்பிடு... நல்லா இருக்கும். சமையக்கார சர்மாவை வெச்சு பண்ணேன். ஐம்பது பேருக்குச் சாப்பாடும் போட்டு ப்ரீதியும் பண்ணினேன்."

"கிருஷ்ணாராவ், ஒழுங்கா வெளிய போயிடு. உன் பித்தலாட்டத்தை வேற எங்காவது வெச்சுக்கோ. ஹோமம், பிரசாதம்னு யார்கிட்ட கதை விடறே...?" அப்படியே கனகா பக்கமும் திரும்பி "இதோ பாருங்க, இந்த ஆள் ஒரு கிறுக்கன். சதா மாயம் மந்திரம்னு திரியற கேஸ். இவன் மொதல் பொண்டாட்டிய விரதம் இருக்க வெச்சே கொன்னவன்.

"இவன் புதையல் எடுப்பான்னு எந்த ஜோசியக்கார புளுகனோ சொல்லியிருக்கான்.



"அந்த சினிமா டைரக்டர் ரொம்ப புத்திசாலின்னு எப்படிச் சொல்றீங்க?"

"படத்துக்கு பெயர் வைச்சுட்டு கதையை ரகசியமா வைத்திருக்கிறதா சொல்லுவாரு. பத்திரிகையாளர்கள், கதையை ஊகிச்சு எழுதினா, அந்தக் கதையையே படமா எடுத்துடுவாரு."

— வந்தவாசி பா. ஜெயக்குமார்

---

கூடவே ரெண்டு கல்யாணம் நடக்கும்னும் ரீல் விட்டுருக்கான். அதான் யார் சிக்குவான்னு அலையறான். வடைல மருந்து வெச்சாலும் வெச்சிருந்திருப்பான்."

முகுந்தன் பேசப் பேச கிருஷ்ணராவ் முகம் வெளிறுகிறது. கனகாவுக்கு நின்ற இடம் நழுவும் பிரமை.

இப்படி எல்லாம் கூட மனிதர்கள் இருப்பார்களா?

இதெல்லாம் எந்த அளவு நிஜம்?- கேள்விகளின் பிடியில் சிக்கி உதறல் கொள்கிறாள்.

கிருஷ்ணா ராவ் இனி இருந்தால் ஆபத்து என்று நினைத்தாரோ, இல்லை முகுந்தன் சொன்னது உண்மையோ - தட்டுப் பிரசாதத்தோடு விட்டால் போதும் என்று நழுவுகிறார்.

"பாத்தீங்களா.. ஓடிட்டான்!"

"இனி எனக்கு வடையை பார்த்தாலே நீங்க சொன்னது ஞாபகத்துக்கு வரும்." - என்கிறாள். அவன் அதைக் கேட்டு சிரிக்கிறான்.

"ஆமா மோகன் கல்யாண விஷயமா என்ன சொன்னான்?" - சற்று நெருங்கியதால் அந்தரங்கமாகப் பேச ஆரம்பிக்கிறான்.

"முதல்ல படிப்பாம். அப்புறம்தான் மத்த விஷயம்ங்கற மாதிரி இருக்கார்."

"கல்யாணம் பண்ணிக்கிட்டும் படிக்கலாம், தப்பு இல்லைன்னு சொல்லுங்க... நானும் சொல்றேன். வரட்டுமா?"

"ஆமா... அவரை எதுக்கு பாக்க வந்தீங்க... தெரிஞ்சுக்கலாமா?"

"ஒண்ணுமில்லே! இந்த பானு விஷயமாத்தான். கிழவிசாவுல வழக்கம் போல வீதி வேடிக்கை பாக்க ஆரம்பிச்சிடிச்சு. தாமு தர்பார் பண்ண ஆரம்பிச்சுட்டான். அந்தப் பொண்ணு மோகனைப் பாக்கணும்னு தகவல் சொல்லிவிட்டுச்சு... அதான் வந்தேன்... மலைப் பக்கம் போய் பாத்துட்டுப் போறேன். வரட்டுமா?"

---

**"அந்த டூத் பேஸ்ட் விளம்பரத்தைப் பார்த்தீங்களா?"**

**"நேத்துத்தானே அந்த டூத் பேஸ்ட் வாங்கிட்டு வந்தேன்!"**

**"அத யாரு கேட்டா, அந்த மாடல் கட்டிக்கிட்டிருக்கிற பட்டுப் புடைவையைப் பார்த்தீங்களா? அதை எப்ப வாங்கித் தரப் போறீங்க?"**

**- எல். கோபாலகிருஷ்ணன்**



"கோவிந்தா.. கோவிந்தா..."- கூப்பாட்டுடன் மந்தாவின் சடலம் நான்கு பேரின் தோளுக்கு ஏறுகிறது.

ஈரவேட்டி, துண்டு என்று உருமாறி கொள்ளிச்சட்டியும் தூக்கியபடி முன் நடக்கிறான் தாமு.

'வேண்டாம்... நீ யாருடா என் பாட்டிக்கு காரியம் செய்ய?'- என்று பானுவுக்குக் கேட்க ஆசைதான். ஆனாலும் கேட்க முடியவில்லை. வேறு யார்தான் வந்து செய்வதாம்?

- கலங்கியபடி கிழவியின் சடலம் கிடந்த இடத்தில் திரும்பவும் முகம் புதைக்கிறாள் பானு. அந்த துக்கத்துக்கு நடுவில் தாமுவின் முகம் முண்டி முண்டி எழுகிறது. அனைத்தையும் இழந்து விட்ட நிலையில் ஒரே சொத்தாக உடம்போடு கிடக்கும் கன்னிப்புதையல் பயம் காட்ட ஆரம்பிக்கிறது. கழுவிக் கழுவி வைத்துக் கொண்ட செம்மை நிறைந்த அழகு. மனம்தான் சலனப்பட்டு சகதியாக இருக்கிறது.

இட்லிப் பானையும் இரும்பு வாணலியும் தகரப்பொட்டியும் இன்னும் சில அலுமினியச் சாமான்களும் அற்பச் சொத்தாக இருக்க அற்புதச் சொத்தாக இளமை மட்டுமே இருக்கிறது. பெரிய முதல் அது ஒன்றுதான். இனி இதை வைத்துத்தான் பிழைப்பா?

தாமு ஆசைப்பட்ட மாதிரியே அகப்பட்டு, கசிலா போல மெல்லவும் முடியாமல், விழுங்கவும் முடியாமல் போகப் போகிறதோ வாழ்க்கை?

இந்த ஒருதலைக்காதல் வேறு நொண்டிப் பெண் ஒருத்தியோடு போட்டியிட்டு நொண்டிக் கொண்டேயிருக்கிறது.

எங்கும் வெளிச்சம் தெரியவில்லை.

சிந்தித்த புழுக்கத்தில் அந்த சராசரிப் பெண்ணுக்கு சாவது மட்டும்தான் சுலபமான, சரியான முடிவாக இருக்கிறது.

கதவைத் தாழிட்டு தூக்குப் போட்டுக் கொள்வோம். இம்முறை ஞாபகமாக ஜன்னலை மூடிவிட வேண்டும். பாட்டி நில்லு.. நானும் வந்துடறேன். எந்த தைரியத்துல என்னை விட்டுட்டு போனே?

- விருட்டென்று நிமிர்ந்து அதற்கான ஆயத்தத்திற்குத் தயாரானபோது தாமுவின் அடியாள் ஒருவன் அவளது முடிவு தெரிந்த மாதிரி முறைக்கிறான்.

'இந்த மாதிரி நேரத்துல ஒரு பொண்ணு எந்த முடிவுக்கு வருவான்னு தெரியாதா என்ன.. நாங்க எத்தனை பேரை பாத்துருக்கோம்!'

அவளுக்குப் புரியும்படியான பதிலோடு ஒரு சின்னச் சிரிப்பு வேறு சிரிக்கிறான்.

வீதி ரேடியோவில் விவஸ்தையே இல்லாத படி திரும்பவும் பாட்டு.

"ஊர்வசி... ஊர்வசி... டேக் இட் ஈஸி ஊர்வசி...!"

(தொடரும்)

"மீனா...! ரெடியா? நாம போறதுக்குள்ளே முகூர்த்தமே முடிஞ்சிடப் போறது!" மகனுக்கு ஷூவை அணிவித்தவாறு இரைந்தான் கணேஷ்.

"இதோ வந்து விட்டேன்" ஹாண்ட் பாகை தோளில் மாட்டிக் கொண்டு வெளிப்பட்டாள் மீனா. கிளிப்பச்சை நிற பட்டுச் சேலையும், அதே நிற ரவிக்கையும் அவள் பொன் நிறத்திற்கு எடுப்பாகவே இருந்தன.

ரசித்தான் கணேஷ்.

"கல்யாணப் பெண்ணுக்கு போட்டியா?" என்று கேலி வேறு.

"போதும் கிண்டல்" கணவனின் மூக்கைத் திருகினாள் மீனா. "ஏங்க, அங்கு எனக்கு ஒருவரையும் தெரியாது. எல்லாம் உங்கள் அலுவலகக் கூட்டமாக இருக்கும். நீங்கபாட்டுக்கு ஒவ்வொருத்தரோடும் போய் அரட்டை அடித்துக் கொண்டிருந்தால் எனக்கு போர் அடிக்கும். அதனால, பேர்னோமா, உங்க சிநேகிதரை வாழ்த்தினோமா, வந்தோமான்னு இருக்கணும். சரியா?"

"சரிதான்! நம்ம கல்யாணத்தன்று என் அங்கவஸ்திரத்திற்கும் உன் புடைவைக்கும் முடிச்சு போட்டார்களே! அது போல இப்பவே போட்டுக்கலாமா, இல்ல மண்டபத்திற்குப் போன பிறகு போட்டுக்கலாமா?" நையாண்டி செய்தான் கணேஷ்.

"ஜோக் அடிக்கறதா நினைப்பா?"

கதவைப் பூட்டிக் கொண்டு, குழந்தையின் கையைப் பிடித்தவாறு நடந்த கணேஷையும், பின் தொடர்ந்த மீனாவையும், 'நீங்கள் ஏன் இன்னும் ஜோடிப் பொருத்தம் நிகழ்ச்சியில் கலந்து கொள்ளவில்லை?' என்று கேட்கத் தோன்றியது எதிர் வீட்டு கௌசல்யா மாமிக்கு.

பஸ்ஸில் அவ்வளவாக கூட்டம் இல்லை. குழந்தையுடன் டிரைவருக்கு எதிர் ஸீட்டில் அமர்ந்து கொண்டான் கணேஷ். மீனாவிற்கு விரைவில் ஜன்னலோர இருக்கை கிடைத்தது. புடைவை கசங்காத மகிழ்ச்சியில் இருக்கையைத் தட்டி அமர்ந்து கொண்டாள்.

'இவர் எங்கேயோ முன்னால் போய் உட்கார்ந்திருக்காரே! கல்யாண மண்டபம் எங்கே என்று கூடக் கேட்டு வைத்துக் கொள்ளவில்லை... அட, கிளம்புவதற்கு முன் ஹாண்ட் பாகில் வைத்துக் கொள்ளச் சொல்லி பத்திரிகையைக் கொடுத்தாரே. இங்குதான் இருக்கும்' என்று நினைத்தவாறு, ஹாண்ட்பாகினுள் கை விட்டுத் துழாவி, நாலாக மடித்த அந்தத் திருமண அழைப்பிதழை எடுத்தாள் மீனா. 'இப்பொழுதெல்லாம் பத்திரிகையே எவ்வளவு அமர்க்களமாயிருக்கு! பெண் பெரிய இடம் போல் இருக்கு... ம்ம்... பெயர் ரஞ்சிதாவா? நாகரீகமான பெயர்தான். டாக்டர் ஆப் சுந்தரேசன். எம்.டி. ஆர்.கே. இண்டஸ்ட்ரீஸ். என்னது? சுந்தரேசனா? திகைத்துப் போய் மீண்டும் மீண்டும் படித்தாள் மீனா.

# மோகம் என்னும் தீயில்...

**ராதிகா பத்மினி**

அவரேதான்! எப்பொழுதோ பழக்கப்பட்ட பெயர். மறதி நிலைக்குச் சென்றுவிட்ட அந்த ஆஜானுபாகுவான உருவம் கண்முன் வந்து, நினைவுகளைத் துரிதப்படுத்தியது.

சுந்தரேசன்! தங்க ஃப்ரேமிட்ட கண்ணாடிக்குப் பின்னால் பிரகாசிக்கும் அந்த விசாலமான கண்கள். கூர் நாசி. அடர்ந்த மீசை. மடிப்பு கலையாத வெள்ளை பாண்ட்டிலும், வெள்ளை ஷர்ட்டிலும் சொட்டு நீல விளம்பர நாயகன் போல் பளீரென்றிருப்பார். மனதில் இருப்பதை சரளமாகவும், அழுத்தமாகவும் கூறும் கம்பீரம். அலுவலகத்தினுள் அவர் நுழையும்பொழுதே மரியாதை கலந்த அமைதி நிலவும். சிறிது நேரத்திற்கு டைப் ரைட்டர்களின் ஓசை மட்டும் எதிரொலிக்கும்.

"இந்தக் கவிதையைப் படிச்சியா மீனா? இவ்வளவு நுட்பமாக, ஆழமாகக் காதலை வெளிப்படுத்த

முடியுமான்னு ஆச்சரியமாயிருக்கு!" - கண்கள் பனிக்க உணர்ச்சி வசப்படும் சுந்தரேசனின் மற்றொரு பக்கம் மீனா மட்டும் அறிந்தது.

இதில் எது மீனாவைக் கவர்ந்தது? அப்பொழுது புரியவில்லை.

இப்பொழுதுதான்.

காற்று போன போக்கில் செல்லும் படகைப் போல் அலை பாய்ந்து கொண்டிருந்த அவள் மனம், நீர் வீழ்ச்சியூடே, மீளமுடியாத ஆழத்திற்கு விழுந்து விடாமல் தடுத்த அந்த மாலை நேர சந்திப்பும், உயிர்த் தோழி கல்பனாவின் அந்த எதிர்பாராத கேள்வியும் மீனாவிற்கு நினைவில் வந்தன.

"அவருக்குத் தெரியாத விஷயங்களே இல்லை கல்பனா. நான் நினைக்கிறேன், அவரது மனைவியும், வளர்ந்த மகள்களும் கூட அவரை சரியா புரிஞ்சுக்கலேன்னு" - ஞாயிற்றுக்கிழமை தோறும் கழிக்கும் அந்த மாலை நேரக் கடலின் முன் அமர்ந்து கூறினாள் மீனா.

"யாரு? உன் எம்.டியா?"

"எம்.டி?... அ..... ஆமாம். பிஸினஸ்ல யாரும் அவர்கிட்ட கூட வரமுடியாது. அவ்வளவு பெரிய மனிதர். ஆனால் பாரேன். எனக்கு கவிதைகள் பிடிக்கும்னு சொன்னேன். அதனால் இப்பொழுதெல்லாம் இரவு படுக்கப் போகு முன் ஒரு கவிதையாவது படித்து விடுகிறார்" பெருமை பூரிக்கக் கூறினாள் மீனா.

"அதுவும் மேலோட்டமாகப் படிக்க மாட்டார். மறுநாள் என் கூட அமர்ந்து அதை அலசுவார் பாரேன்! சே!! கேட்டுகிட்டே இருக்கலாம். ஹி இஸ் ரியலி க்ரேட்! அவரைப் பார்த்தா நாற்பத்தைந்து வயதானவர்னு யாராவது சொல்வாங்களா? என்ன சுறுசுறுப்பு! என்ன பர்சனாலிட்டி! இது எல்லாத்துக்கும் மேலே அவர்கிட்ட எனக்கு ரொம்பப் பிடித்த விஷயம் என்னன்னா...."

"இரு இரு!" அவசரமாகத் தடுத்தாள் கல்பனா. "என்ன? இன்னிக்கு என்றைக்கும் விட அதிகமாகவே இருக்கு. உன் சுந்தரேசன் புராணம். ஒரு செக்ரட்டரி, எம்.டியைப் பத்தி பேசறா மாதிரி தெரியலையே?"

அதுதான் கல்பனாவின் விசேஷம். சட்டென்று, தலையில் தட்டிய மாதிரி கேள்வி கேட்டு விடுவாள்.

நாணித் தலை குனிந்தாள் மீனா.

"உன் கிட்ட எப்படி சொல்றதுன்னு புரியலை கல்பனா. ஆனால், எனக்கு உன்னைத் தவிர்த்து வேறு யார் கூட டிஸ்கஸ் பண்ண முடியும்? என் அம்மா உன்னிடம் சொல்லியிருப்பாளே. நாளை என்னைப் பெண் பார்க்க வருகிறார்கள். ஆனா நான்... எனக்கு.. நீ புரிஞ்சிப்பேன்னு நினைக்கிறேன்... நான் சுந்தரேசனை விரும்பறேன் கல்பனா."

கல்பனா இடி தாக்கியது போல் அதிர்வாள் என எதிர்பார்த்தால், அவள் அமைதியாக கேட்டுக் கொண்டிருந்தாள். முகத்தில் சலனமேயில்லை. மீனா தொடர்ந்தாள்.

"அவரும் என்னை நேசிக்கிறார். எங்களால இதுலேர்ந்து மீள முடியலை கல்பனா. ஒரு வாரம் ஆபீஸிற்கு லீவு போட்டேன் தெரியுமா? அவர பார்க்காம, அவர் கூட பேசாம, பல்லை கடிச்சுண்டு இருந்தேன். முடியலைடி. பைத்தியம் பிடிப்பது போல் இருந்தது. அந்த ஒரு வாரத்தில் எத்தனை முறை அவர் வீட்டுக்கு ஃபோன் பண்ணி பேச முயற்சித்தார்னு உனக்குத் தெரியாது. ஆபீஸ் திரும்பி வந்த பிறகுதான் தெரிந்தது, என் நிலைமை எவ்வளவோ மேல் என்று. அவரைப் பார்க்கணுமே? பித்து பிடித்தவர் போல் இருந்தார். தாடியும், மீசையுமா, கண்களைச் சுற்றி கருவளையம் இட்டு! நாங்க இரண்டு பேருமே எங்க மனசுல உள்ள உணர்ச்சிகளை வெளிப்படுத்த சந்தர்ப்பம் கிடைக்காம உருகிக்கிட்டிருக்கோம்.

"நாளை பெண் பார்க்க வரும் விஷயத்தை சுந்தரேசனிடம் இன்னிக்கு சொன்னேன். ஆடிப் போயிட்டார். கண்ல தண்ணி தளும்பறது. நல்ல வேளை, அவர் எதுவும் சொல்றதுக்குள்ள பியூன் வந்து ஏதோ மீட்டிங்குக்கு நாழியாயிடுத்துன்னு ஞாபகப்படுத்தினான். இன்னும் சிறிது நேரம் அங்கு இருந்திருந்தேனா, நானே அவர் கண்ணைத் துடைத்து சமாதானப் படுத்தியிருப்பேன். என் கை அப்படி துடிச்சது."

கலங்கிய கண்களை இறுக மூடி தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டாள் மீனா.

"எங்க காதல் மற்ற காதலர்களது போல்

---

**"டாக்டர், என் புருஷனுக்குப் பைத்தியமோன்னு பயமா இருக்கு."**

**"எப்படி சொல்றீங்க?"**

**"சிக்ஸர், சிக்ஸர்ன்னு டி.வி. எதிரே குதிக்கிறார்."**

**"கிரிக்கெட்ல அதிக ஆர்வம் இருக்கிறவங்க இப்படி செய்யறது சகஜம்தானே!"**

**"அது சரி, ஆனா இவர் டி.வியை ஆஃப் பண்ணின பிறகும் அப்படி குதிக்கிறார்?!"**

**— ராதா வாசுதேவன்**





கல்யாணத்துல முடியாது. அது எனக்கு நன்றாகப் புரிகிறது. ஆனாலும், என்னால் அவர் துணை இல்லாத ஒரு வாழ்வை நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லை... என்ன கல்பனா?.... நான் மனசுவிட்டு இவ்வளவு பேசியிருக்கேன். நீ ஒண்ணுமே சொல்லலையே?" ஒரு குழந்தையின் எதிர்பார்ப்புடன் கேட்டாள் மீனா.

"நாளைக்கு உன்னைப் பெண் பார்க்க வரப் போகிறானே. அந்தப் பையனைப் பற்றிப் பேசலாமா?"

கன்னத்தில் யாரோ பளாரென்று அறைந்தது போல் அதிர்ந்தாள் மீனா.

பஸ் பெரும் கிறீச்சலுடன் நின்றது. மீனாவின் நினைவுகளும் தடைப்பட்டன.

தான் அவ்வளவு சொன்ன பிறகும் கல்பனா ஏன் அவ்வாறு கேட்டாள்? தாம் ஏன் மறு பேச்சில்லாமல் திருமணத்திற்கு சம்மதித்தோம் என்று இன்று வரை புரியாமல் இருந்த மீனாவிற்கு, ஏதோ புரிவது போல் இருந்தது.

சுந்தரேசன் இல்லாமல் வாழ்வே இல்லை என்று நினைத்த அவள், இதோ, நான்கு வருடத்திற்குப் பிறகு அவரைப் பார்க்கப் போகிறாள்.

ஆனால் மனத்தில் சிறிதாவது சலனம்...?

ம்ஹூம்!!

சரி! இந்த நான்கு ஆண்டுகளில் எத்தனை முறை அவரை நினைத்துப் பார்த்திருக்கிறாள்?

வெகு நேரம் யோசிக்க வேண்டியிருந்தது.

அந்த 'காதலின்' அபத்தத்தை நினைத்து வாய்விட்டுச் சிரித்தாள் மீனா.

"என்ன மீனு? ஸ்டாப்பிங் வந்தாச்சு. இறங்காமல் என்னவோ சிரிச்சுண்டு இருக்கியே?"

மூவரும் அவசரமாகக் கீழே இறங்கினர்.

"எதுக்குங்க குழந்தை அழறான்?"

"பக்கத்துல இருந்த பையன் ஒருத்தன் கூல் ட்ரிங் குடிச்சான். அதைப் பார்த்ததும் இவனுக்கு தாகம் எடுக்கிறது. அதையே வேணும்னு அடம் பிடிக்கிறான். பஸ்ஸை விட்டு இறங்கினப்புறம் தாகமும் போயிடும். மண்டபம் போனதும் சில்லுனு தண்ணி குடிச்சிட்டா, அப்புறம் கூல்ட்ரிங்க் கொடுத்தாக் கூட வேண்டாம்னு சொல்வான்."

சட்டென்று நின்றாள் மீனா. கணவனையே கூர்ந்து கவனித்தாள்.

"என்ன மீனு?"

"நீங்க சொன்னதைக் கேட்டவுடன் எனக்கு கல்பனா நினைவு வந்ததுங்க. மோகமும் ஒருவகை தாகம்தானே?"

"இப்ப நீ சொல்றதுதான் எனக்குப் புரியலை."

"எனக்கே இப்பதானே புரிந்தது!"

நடையைக் கட்டினாள் மீனா.



பிமல் சாஜர், தில்லிக்காரர். இதய நோய்க்கான பைபாஸ் ஆபரேஷனுக்குப் பதில், எளிய, புதிய சிகிச்சை முறையைக் கண்டுபிடித்திருக்கும் இளைஞர்.

# பைபாஸுக்கு

இதயத்துக்கு இரத்தம் பாய விடாமல், ரத்தக் குழாய்களில் கொழுப்பு அடைத்துக் கொள்ளும்போது, காலிலிருந்து ரத்தக் குழாயை எடுத்து இதயத்துக்கு இரத்தம் பாய மாற்று வழி வைத்துக் கொடுக்கும் சிகிச்சைதான் பைபாஸ் சர்ஜரி. ஒருமுறை பைபாஸ் செய்து கொண்டவரே, மறுபடியும் இன்னொரு அடைப்பு ஏற்பட்டு, மறுபடி பைபாஸ் சர்ஜரி செய்து கொள்ளும் வாய்ப்பு இருக்கிறது.

"முப்பது வயதுக்காரர் ஒருவர் இதய நோய் வந்து ஒரு பைபாஸ் சர்ஜரி செய்து கொண்டார். மறுபடி மூன்று வருஷங்கள் கழித்து இன்னொரு பைபாஸ் சர்ஜரி செய்து கொள்ள வேண்டும் என்று அவருடைய டாக்டர்கள் சொன்னபோது, என் சிகிச்சை பற்றிக் கேள்விப்பட்டு என்னிடம் வந்தார். என்னுடைய சிகிச்சை முறையில் பூரண குணம் அடைந்து ஆரோக்கியமாக இருக்கிறார். ஸ்குவாஷ் ஆடுகிறார் மனிதர்!" என்றார் டாக்டர் பிமல்.

இந்த ஆஞ்சைனா (இதய) வலி ஏன் வருகிறது?

"அதிக அளவு கொலஸ்டரால். தவறான உணவு உட்கொள்ளுதல். அளவுக்கு மீறிய ஸ்ட்ரெஸ். உடற்பயிற்சி எதுவுமே இல்லாத அலட்டிக் கொள்ளாத வாழ்க்கை முறை!"

"உங்கள் சிகிச்சை முறை என்ன?"

"வெஜிடேரியன் உணவு. ஒரு பொட்

டுக்கூட எண்ணெய் கலக்காத உணவு! கொலஸ்டரால் வராமல் தடுப்பது. 'ஸ்ட்ரெஸ்'ஸை அடக்கி ஆளுவது. ஏனென்றால் ஸ்ட்ரெஸ்தான் இதய நோய்க்கு முக்கியக் காரணம். அப்புறம் யோகா மற்றும் தியானம். அடைத்துக் கொண்டு விட்ட ஆர்ட்டரிகளைத் திறக்கச் செய்யும் வலிமை இதற்கு உண்டு."

"அது எப்படி முடியும்?"

"சைக்கோ நியூரோ இம்யுனாலஜி சித்தாந்தப்படி, நம்முடைய சிந்தனைகளையும் திட்டங்களையும், மூளையிலிருந்து வெளிப்படும் கெமிக்கல்கள்தான் தீர்மானிக்கின்றன. அவற்றைக் கட்டுப்படுத்தவும், நெறிப்படுத்தவும் பயிற்சி கொடுக்கும்போது அது சாத்தியமாகிவிடும்!"

"நீங்களாக இதைக் கண்டுபிடித்தீர்களா? இல்லை வேறு யாரிடமாவது பயிற்சி பெற்றீர்களா?"

"தில்லி ஆல் இந்தியா மெடிகல் சயன்ஸ் இன்ஸ்டிட்யூட்டில் வேலை பார்த்துக் கொண்டிருந்தபோது என்னிடம் ஓர் இளைஞர் சிகிச்சைக்கு வந்தார். திடீரென்று மார் வலி வருகிறது; அப்புறம் போய் விடுகிறது என்றார். நான் பரிசோதித்துவிட்டு மூன்று மருந்துகளை எழுதிக் கொடுத்தேன். ஒரு மாதம் கழித்து வந்து வலி இப்போது வருவதே இல்லை என்று சொல்லி எனக்கு நன்றி சொன்னார். மூன்று மாதம் கழித்து மறுபடி வரும் போது பழைய கம்ப்ளெயின்ட். கூடவே, படி ஏறும் போது மார்வலி அதிகமாகிறது என்றார். இன்னும் இரண்டு மாத்திரைகள் எழுதிக் கொடுத்தேன். ஒருமாதம் கழித்து, நிறையப் பரிசுகள் கொண்டு வந்து எடுத்துக் கொள்ளத்தான் வேண்டும்

# டாட்டா! இமாலய ஒரு மருத்துவ(ர்) சாதனை!

என்று வற்புறுத்தினார். நான் ஒரே ஒருடையை மட்டும் எடுத்துக்கொண்டு, அவரை அனுப்பி வைத்தேன். மூன்று மாதங்கள் கழித்து அவரது மனைவி அரக்கப் பரக்க ஓடி வந்தாள். கணவருக்கு இதய வலி அதிகமாக இருப்பதாகச் சொன்னாள். உடனே இன்டென்ஸிவ் கேர் யூனிட்டில் சேர்த்துவிட்டு பரிசோதனைகளை ஆரம்பித்தேன். மருந்துகளும் கொடுக்க ஆரம்பித்தேன். ஆனால் பயன் எதுவும் இருக்கவில்லை. அவர் இறந்து போனார்!



• விமல் சாஜர்

"அப்புறம் அவர் பற்றிய தகவல்களைச் சேகரித்தபோதுதான் தெரிந்தது - அவர் அதிகம் சிகரெட் பிடிப்பவர்; எண்ணெய்யும் மசாலாவும் மிகுந்த உணவு வகைகளை ரசித்துச் சாப்பிடுபவர் என்பன போன்ற தகவல்கள். இதுதான் திருப்புமுனை. இதற்குப் பிறகு நான் மற்ற டாக்டர்களைப் போல வெறுமனே மருந்துகள் எழுதிக் கொடுப்பதை நிறுத்தி விட்டு, யோசிக்க ஆரம்பித்தேன். எந்தப் பழக்கங்கள் எல்லாம் இதய நோய்க்குக் காரணமாக இருக்கின்றனவோ அவற்றைத் தவிர்க்கும் முயற்சியில் ஈடுபடாமல், மேலோட்டமாக வலிக்கு மருந்து கொடுக்கும் முறையினால் என்ன பலன் கிடைத்து விடும்?" என்று யோசிக்க ஆரம்பித்தேன். அமெரிக்காவில் டாக்டர் டீன் ஆர்னிஷ் என்கிற மருத்துவர் பைபாஸ் சர்ஜரி செய்யாமலே, நான் மேலே சொன்ன வாழ்க்கை மாற்றியமைப்பு, யோகா, தியானம் முதலிய வழிகளிலேயே ஆஞ்சைனாவைக் குணப்படுத்துகிறார் என்று கேள்விப்பட்டு அவரிடம் சேர்ந்து பயின்றேன். புகழ் பெற்ற பாஸ்டன் மருத்துவக் கல்லூரியில் இருக்கிறார் அவர். ஆனால் அமெரிக்காவில் மட்டும் எட்டு சென்டர்களில் இந்த முறை பயிற்சி நடைபெறுகிறது. இதைப் பற்றி நியூஸ் வீக், யுஎஸ்ஏ டுடே, ரீடர்ஸ் டைஜஸ்ட் ஆகிய பத்திரிகைகளில் நிறையக் கட்டுரைகள் வந்திருக்கின்றன.

"நான் இந்தியாவுக்கு வந்து இதைப் பிரபலப்படுத்திய பிறகு, 78 பத்திரிகைகளில் இது பற்றிய விரிவான கட்டுரைகள் வெளியாகி இருக்கின்றன!"

அமெரிக்காவில் இதயநோய் முற்றி, டாக்டரிடம் போகும் போது அவர்களே சொல்லி விடுகிறார்களாம், 'உங்களுக்கு இரண்டே சாய்ஸ்தான் இருக்கிறது. ஒன்று, பைபாஸ் சர்ஜரி, இன்னொன்று டீன் ஆர்னிஷ் முறை' என்று. இன்ஷூரன்ஸ் கம்பெனிகளும் அதற்குத் தகுந்தாற்போல்தான் பணம் கொடுக்கின்றனவாம்!

ஒருமுறை பைபாஸ் சர்ஜரி செய்து கொள்ள ஒன்றரை அல்லது இரண்டு லட்ச



• பயிற்சி முகாமில்......

ரூபாய் செலவாகிறது.

'இமாமி' தொழிலதிபர் ஆறுமுறை செய்து கொண்டார். "என்னிடம் பணம் இருக்கிறது ஏராளமாக. ஆனால் இதயம் ஒன்றுதானே இருக்கிறது? எத்தனை முறை ஒட்டுப் போட முடியும்?" என்று இவரிடம் வந்து சேர்ந்தபோது சொன்னாராம்!

SCIENCE AND ART OF LIVING என்பதன் சுருக்கமாக SAAOL (ஸாவல்) என்று இந்தச் சிகிச்சை முறைக்குப் பெயர் வைத்திருக்கிறார் டாக்டர் பிமல். 'ஸாவல்' என்றால் திருத்தமாக, முறையாக என்று அர்த்தமாம் ராஜஸ்தானி மொழியில்.

கடந்த இரண்டு வருடங்களில் மட்டும் (அதாவது ஆல் இந்தியா இன்ஸ்டிட்யூட்டை விட்டு வெளியே வந்த பிறகு) 800 முதல் 900 பேர்களைக் குணப்படுத்தியிருக்கிறார்.

98 சதவிகிதம் வெற்றியும் அடைந்திருக்கிறார்.

"எதனால் 2 சதவிகிதத் தோல்வி?"

"என் சிகிச்சை முறையை முழுதுமாகக் கடைபிடிக்காதபோது உண்டாகிற தோல்வி அது!"

மருந்து உட்கொண்டு வரும் நோயாளிகளுக்குக் கொஞ்ச காலம் மருந்தும் கொடுக்கிறார். சட்டென்று நிறுத்திவிடுவதில்லை. நோயை ஓரளவு வசப்படுத்திக் கட்டுப்பாட்டில் கொண்டு வந்த பிறகு மருந்தை நிறுத்தி விடுகிறார்.

தில்லியில், ஊருக்கு வெளியே அமைதியான இடத்தைத் தேர்ந்தெடுத்து, அங்குதான் பயிற்சி அளிக்கிறார். உணவு முக்கியமான இடம் வகிப்பதால், நோயாளியுடன் அவர் மனைவியோ, உதவியாளரோ அவசியம் இருக்க வேண்டுமாம்!

இரண்டு முறை பைபாஸ் செய்துகொண்ட நோயாளிகளை, டாக்டர்களே இவரிடம் அனுப்பி வைத்து விடுகிறார்கள்.

50 சதவிகித நகரத்து நோயாளிகள் 40 முதல் 45 வயதுக்காரர்கள். நகர வாழ்க்கையின் கெடுபிடிகளில் வரும் ஸ்ட்ரெஸ்தான் இவர்களது ஆஞ்சைனாவுக்குக் காரணமாம்.

பம்பாயில் மாதம் ஒருமுறை போய் முகாம் நடத்துகிறார்.

இப்போது முதன்முறையாகச் சென்னையில் மூன்று நாட்கள் நடக்கப் போகிறது - பார்க் ஷெரடன் ஓட்டலில். ஆனால் சமையல்காரர் பிரத்தியேகமாக தில்லியிலிருந்து வந்திருக்கிறார்!

தமிழ்நாட்டு பேஷன்ட்டுகள் தவிர, கேரளா, ஸ்ரீலங்காக்காரர்களும் இவரிடம் வருகிறார்கள்.

தில்லியிலும், பம்பாயிலும் இவர் சிகிச்சைக்காக 16000 ரூபாய் வாங்குகிறார். (நோயாளிக்கும், மனைவி அல்லது உதவியாளருக்கும் சேர்த்து).

சென்னையில் மட்டும் 10,000 ரூபாய்தான்.

"பைபாஸ் சர்ஜரிக்கு ஆகும் செலவில் இது பத்தில் ஒரு பங்குதான்!" என்கிறார் டாக்டர் பிமல்.

ஏராளமானோர் பதிவு செய்து கொண்டிருப்பதைப் பார்த்து, இந்தியாவில் இந்த வகை நோயாளிகள் சுமார் எத்தனை பேர் இருப்பார்கள் டாக்டர்?" என்று கேட்டோம்.

"சுமார் ஒன்றரைக் கோடிப் பேர்!" என்று டாக்டர் பிமல் சொன்னதும் தூக்கி வாரிப் போட்டது.

— சாருகே

# பிதர்களுக்கு சிராத்தம் ஏன்? அவசியம் செய்ய வேண்டும்



சிராத்தம் போன்ற சடங்குகள் உண்மையில் பிராண ஜீவனுக்காகவே செய்யப்படுகின்றன. ஜீவனுடைய பிராண அதிர்வுகள் அதைப் பிராண லோகங்களுடன் அல்லது பூலோகத்துடன் தளைப்படுத்துகின்றன. அந்த அதிர்வுகளை நீக்குவதற்கு இந்த சடங்குகள் ஜீவனுக்கு உதவுகின்றன. இதனால் ஜீவன் சைத்திய சாந்தத்தில் ஓய்வெடுக்க விரைவாகச் செல்வது இயலும்.

—ஆதாரம் வைகறை 1991-92



இத்துடன்
கிராண்ட் ஸ்வீட்ஸ்
வாங்கி
நல்லோர்களுக்கு
விநியோகம் செய்யவும்.

*திருமண வைபவங்களுக்கு:*

சீர் முறுக்கு, சீர் அதிரசம், திரட்டுப் பால், முள்ளு தேன்குழல், பருப்புத் தேங்காய், அப்பம் வகைகள் முதலியவைச் செய்துத் தரப்படும்.

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

நெ. 24, 2வது
மெயின் ரோடு
காந்தி நகர்
அடையாறு
சென்னை - 20
போன்: 4915662
4914213

# குறையொன்றுமில்லை

4

'எட்டினால் எல்லாமே கிட்டி நிற்கும்; எட்டினால் எட்டாததே கிடையாது' என்கிறார் சுவாமி தேசிகன்.

எட்டு என்பது பகவான் நாமாவான ஓம் நமோ நாராயணாய என்பதைக் குறிக்கிறது. எதையெல்லாம் அது தருகிறது என்று கேட்டால்,

> நல்ல குலம் என்றால் என்ன? சில கெட்ட குலங்கள் உண்டு என்று ஆழ்வார் சொல்ல வருகிறாரா? அவருக்குக் குல துவேஷமா?

குலம் தரும் செல்வம்
தந்திடும்
அடியார்படுதுயர்
ஆயினவெல்லாம்
நிலம் தரம் செய்யும்
நீள்விசும்பருளும்
அருளொடு
பெருநிலமளிக்கும்
தனம் தரும் மற்றும்
தந்திடும்
பெற்றதாயினும்
ஆயின செய்யும்
நலம் தரும் சொல்லை
நான்
கண்டுகொண்டேன்
நாராயணா என்னும்
நாமம்.

எல்லோருக்கும் நலத்தைக் கொடுக்கும்படியான சொல் நாராயணா என்னும் நாமம். அதை நான் இன்று கண்டு கொண்டேன். அன்று தெரியாமல் இருந்ததை இன்று தெரிந்து கொண்டேன். இனிமேல் உன்னை விடுவேனா... சிக்கெனப் பிடித்துக் கொள்ள மாட்டேனோ...? என்று கேட்கிறார் ஆழ்வார்.

இதற்கு அர்த்தம் என்ன...? இத்தனை நாள் பிறர்க்கே உழைத்து ஏழையானேன். 'தாயே, தந்தை என்னும் தாரமே... கிளை மக்கள் என்னும் நோயே பட்டொழிந்தேன்... தெரியேன்; பாலகனாய் பல தீமைகள் செய்து விட்டேன். பெரியேனாயின பின்னும் பிறர்க்கே உழைத்து ஏழையானேன்...' என்கிறார்.

'ஐயோ! ஜன்மம் மொத்தம் வீணாகப் போய்விட்டதே!' என்பது ஆழ்வாருடைய அனுபவம்.

'இப்போது சொல்லலாம், பகவான் நாமாவை' என்றால், ஒரு வார்த்தை பேச முடியவில்லை. பல் ஒவ்வொன்றாகக் கீழே விழுகிற காலம்! 'இந்தக் கண் என்னுடையதில்லை என்று ஆகிவிட்டதே! இத்தனை நாட்களாக இதை அபிமானித்துக் கொண்டிருந்தேனே... இந்தக் கண்ணை எவ்வளவு போற்றிப் புகழ்ந்தேன்! இந்த சிரஸ் இப்படிப் போய்விட்டதே; காது துளியும் கேட்கவில்லையே... இந்த செவி என்னுடையது என்று எவ்வளவு மமகாரமாய் இருந்தேன்! இந்த வார்த்தை நம்முடையது என்று எத்தனை மமகாரம்! இப்போது எதுவுமே நாம் சொல்வதைக் கேட்கலையே... இத்தனைப் புலன்களும் நம்முடையதில்லையென்றல்லவா ஆகிவிட்டது!

இதைப் புரிந்து கொள்வதற்குள் ஜன்மாவே அல்லவா முடிந்து போய்விட்டது!' - இத்தனையும் உத்தேசித்துத்தான் சொன்னார்! 'பிறர்க்கே உழைத்து ஏழையானேன்!'

பிறர்க்கே என்ற சொல்லின் ஏகாரத்துக்கு ஏகப்பட்ட பொருள்!

சுகபிரும்ம மஹரிஷி, பரீக்ஷித் மகாராஜாவுக்கு இதை ரொம்ப அழகாக எடுத்துச் சொல்கிறார்.

கொம்புக்கெல்லாம் வர்ணம் அடித்து, தொப்பு போட்டு, சலங்கை மாட்டி, அழகான எருது. எத்தனை அழகாய் ஓடுகிறது! ஏரிலோ, வண்டியிலோ பூட்டி பலவாறாக வேலை வாங்கி, வேலை வாங்கி, இப்போது வேலையே செய்ய முடியாமல் ஓடாகத் தேய்ந்து போன நிலை!

எருதின் கன்னத்தில் பெரிதாகக் குழி விழுந்திருக்கிறது. கண் இரண்டும் ஒதுங்கி நிற்கிறது. வாயிலிருந்து நுரையாகக் கொட்டுகிறது! விலா

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

எலும்பெல்லாம் தெரிகிறது. அதன் பின்னங் கால்கள் தட்டுகின்றன. வண்டியிலே கொண்டு போய் அதைப் பூட்டினால், அதால் இழுக்க முடியவில்லை. அப்படியே படுத்துவிட்டது.

'சரி, இனிமேல் இந்த எருதினால் பிரயோஜனமில்லை' என்று கொட்டகைக்கு அப்பால் உள்ள இடத்திலே கொண்டு கட்டி வைக்கிறான் அதன் சொந்தக்காரன்.

அவன் கட்டிய இடத்திலே வெயில் கொளுத்துகிறது! இத்தனை நாளாக நிழலில் நின்ற பிராணி வெயிலில் காய்கிறது. அதற்குத் தீனி என்று ஒன்றுமே போடுவதில்லை. எப்போதாவது தோன்றினால் ஒரு பிடி புல்லைக் கொண்டு போய் போடுவான். ஜலத்துக்காக அது கத்தும். அவஸ்தைப்படும். ஆனால் அதனால் இனிமேல் பிரயோசனமில்லை என்று அவன் தீர்மானம் பண்ணி விட்டான்! தகாத இடத்திலே அதை விற்றான். அநியாயமாக அடிபட்டு மாண்டு போனது அது!

இத்தனை சிரமப்பட்டு அவனுக்கு உழைத்த எருது கடைசியில் இப்படி ஒன்றும் இல்லாமல் போயிற்றே!

**சு**கபிரும்ம மஹரிஷி சொன்ன இந்தக் கதையைக் கேட்டு பரீக்ஷித் மஹாராஜாவுக்குக் கண்ணிலே ஜலம் வந்ததாம்.

"ஒரு எருதின் கதை இப்படியிருக்கிறதே!" என்று வருந்தினான் ராஜா.






உடனே சுகபிரும்ம மகரிஷி, "இது எருதின் கதையில்லையப்பா.... நம் கதைதான்" என்கிறார்!

நரம்புகள் முறுக்கேறி மிடுக்குடன் இருக்கிற சமயத்திலே ஏகப்பட்ட காரியங்கள் பண்ணுகிறோம். எல்லோரும் நம் உழைப்பை ஏற்றுக்கொள்கிறார்கள். கடைசியில் சுவாஸம் மேல் மூச்சு, கீழ் மூச்சு வாங்குகிறது. உட்கார முடியவில்லை, எழுந்திருக்க முடியவில்லை. வீட்டில் இருப்பவர்கள் ''என்னத்திற்கு இப்படி அலைகிறீர்கள்?" என்று கேட்கிறார்கள்!

இந்தக் கேள்வி, எருதைக் கொண்டு போய் வெயிலில் கட்டியதற்குச் சமம்! 'இத்தனை நாட்களாக அவர் அலைந்ததால்தானே இப்போது நாம் சௌக்யமாயிருக்கிறோம்' என்பது மறந்து போய்விடுகிறது. பெரியவரை உட்கார வைத்து விடுகிறார்கள்.

அவர் சாப்பிட உள்ளே வருகிறார், பாவம்!

''நாங்க அங்கே கொண்டு தர மாட்டோமா?" என்று கேட்கிறார்கள். எல்லாம் அவருக்கு அங்கேயே வர ஆரம்பிக்கிறது... அந்த சமயத்தில் சுற்றியிருப்பவர்கள் நாட்களை எண்ண ஆரம்பிக்கிறார்களாம்.... 'இவர் எப்போது போய்ச் சேருவார்...?' என்று.

இந்த மாதிரி ஒரு நிலை நமக்கு அந்திமக் காலத்திலே வருகிறதே என்று நாம் யோசிக்க வேண்டாமா?

இந்த நிலையை உத்தேசித்துத்தான் ஆழ்வார் பிறர்க்கே என்று ஏகாரத்தை இழுத்துச் சொன்னார்!

'மனைவி மக்களுக்கும் உற்றார் உறவினருக்கும் உழைத்தேன்' என்பது சாமான்ய அர்த்தம்.

'நாமில்லாத நம் உடம்பிற்கே உழைத்தோம்' என்பது மெய்யான அர்த்தம்.

ஆத்மாவுக்காக உழைப்பது அர்த்தமான காரியம். ஆத்மா இல்லாத இந்த சரீரத்துக்கே உழைத்து வீண் போகிறோம் நாம்.

"சுவாமி, உடல் நலமா? திருமேனி பாங்கா? என்ன இப்படி இளைத்து விட்டீர்கள்?" என்றெல்லாம் கேட்கிறோமே... இது மொத்தமும் என்ன விசாரம்?

சரீர விசாரம்தான்!

ஆத்ம விசாரம் யார் பண்ணுகிறார்கள் உலகத்தில்? யாரும் பண்ணுவதில்லை.

நாம் அல்லாத ஒரு வஸ்துவுக்கு ஏகப்பட்ட அலங்காரம், ஏகப்பட்ட விசாரம், ஏகப்பட்ட காரியங்கள். உடம்பைப் பேணி வளர்ப்பதிலேயே நாள் போய்விட்டது!

ஆதி சங்கரர் சொன்னதை நாம் அப்படியே மனத்திலே எழுதிக் கொள்ள வேண்டும். யார் மோக்ஷத்துக்கே அதிகாரி என்று ஒரு கேள்வி கேட்டார்.

கேட்டவர் பதிலும் சொல்கிறார்:

''எவனொருவன் உயிரோடு இருக்கும்போதே தன் சரீரத்தைப் பிணமாக நினைக்கிறானோ, அவனே மோக்ஷத்துக்கு அதிகாரி!"

ஆகையினாலேதான் ஆழ்வார் அப்படிப் பாடினார். கதறி அழுதவர், எம்பெருமான் அனுக்கிரஹத்தினாலே என்ன தெரிந்து கொண்டார்?

பகவான் பெயரைக் காலத்தே சொல்வதால் உயர்ந்த பலன் கிடைக்கும்.

என்ன பலன்?

நலம் தரும் - நல்ல குலத்தைக் கொடுக்கும். நல்ல குலம் என்றால் என்ன? சில கெட்ட குலங்கள் உண்டு என்று ஆழ்வார் சொல்ல வருகிறாரா? அவருக்குக் குல துவேஷமா? என்றெல்லாம் சந்தேகம் வரும்.

'குலம் தரும்' என்று மனிதர்கள் உண்டாக்கியிருக்கிற சாமான்ய குலத்தை அவர் சொல்லவில்லை. பின்னே குலம் என்றால் எது...? என்ன...?

அடியார்கள் என்ற குலத்தைச் சொல்கிறார் ஆழ்வார்.

தாஸர்கள் என்கிற நிலையிலே நாம் எல்லோருமே பொது. அவனுக்கு நாம் எல்லோருமே சமம். அவன் திருவடியை நாம் அடி பணிந்து விட்டோமானால், அடிபணிந்தவர்களிடையே அவன் வித்தியாசமே பாராட்டுவதில்லை. எல்லோரையும் சம நோக்கு கொண்டு பார்க்கிறான்.

கீதையிலே இதைச் சொல்கிறான் பகவான்.

## அருள்வாக்கு

மரயானைப் பொம்மையைப் பார்த்தால் குழந்தை அது யானை என்றே எண்ணுகிறது. பெரியவர்களுக்கு அது யானை மாதிரி இருந்தாலும் மரம்தான் என்று தெரிகிறது. குழந்தைக்கு மரம் மறைந்து யானை தெரிகிறது; பெரியவர்களுக்கு யானை மறைந்து மரம் தெரிகிறது. இப்படியே பார் (உலகம்) முதலாக பஞ்ச பூதங்களும் பரமாத்மா என்ற மரத்தால் பண்ணின பொம்மைதான். பரமாத்மாதான் இத்தனையும் என்று நாம் பார்க்க வேண்டும்.

மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தில் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதல் பூதம்

அதைப் படித்துவிட்டு ஒருத்தர் விபரீத அர்த்தம் பண்ணிக் கொள்கிறார்.

எப்படி அர்த்தம் பண்ணிக் கொள்கிறார்...? அனுஷ்டானம் உள்ளவரும் இல்லாதவரும் சமம் என்று!

ஒருத்தர் அதிகாலை மூன்று மணிக்கு எழுந்து கொள்கிறார். பிரும்ம முஹூர்த்தம். அந்த நேரத்தில் எழுந்து, கர்மானுஷ்டானத்தை முடித்துக் கொண்டு, சூரியன் வருவதற்கு முன்னால் சித்தமாக கையிலே அர்க்கியத்தை ஏந்தி நிற்கிறார். இப்படி சூர்யோதயத்தைக் கண்டு வணங்க அதிகாலை மூன்று மணிக்கே ஹரி நாம சங்கீர்த்தனம் பண்ணியபடி எழுந்து கொள்ள வேண்டும் என்பது சாஸ்திரம்.

அப்படி எழுந்து கொள்பவர் ஐந்து வேளை பாராயணம், நாள் முழுவதும் விசேஷ பூஜை, பகவத் ஆராதனை, பகவத் கதா ச்ரவணம், உயர்ந்த புராணங்களின் பாராயணம் என்று மாலை வரை ஈடுபட்டு, ஒன்பது மணிக்கே யோகம் என்கிற திசையிலே நோக்கி, பகவானுடைய திருவடியை சிரஸிலே நினைத்துக்கொண்டு நிற்கிறார். அந்தத் திருவடியிலிருந்து அமிர்த தாரை வந்து சிரஸிலே விழுவதாக நினைத்து "மாதவா மாதவா" என்று சொல்லிக் கொண்டே தூங்கிப் போகிறார்...

- இப்படி ஒருத்தர் செய்து கொண்டிருக்க, இன்னொருத்தர் காலை 11.30க்குத்தான் எழுந்திருக்கிறார். எழுந்தவுடனே சாப்பிடுகிறார். சாப்பிட்டுவிட்டு மறுபடியும் படுத்துத் தூங்குகிறார்! அன்னம், நித்திரை என்று மாற்றி மாற்றி இப்படியே பொழுது போகிறது!

இப்படி இரண்டு பேர் இருந்தால், இந்த இரண்டு பேரையும் பகவான் சமமாகப் பார்ப்பான் என்றா நினைப்பது..? "அதுதான் அவனே கீதையில் சொல்லியிருக்கிறானே..." என்று அனுஷ்டானக்காரரையும் அனுஷ்டானமே இல்லாதவரையும் சமமாக்குவதா?

அப்படிச் செய்தால், அனுஷ்டானம் காக்கிறவனுக்கு என்ன ஏற்றம்? அதைப் பண்ணாதவருக்கு என்ன தாழ்வு?...

கீதையைத் தவறாக எண்ணிக் கொள்ளக் கூடாது. பகவானுடைய திருவுள்ளம் என்னவென்று கேட்டால்.... அதற்கு ஒரு விளக்கம் எழுதியிருக்கிறார் ராமானுஜர்.

"ஹே அர்ஜுனா! என் திருவடியைப் பற்றினவரிடையிலே நான் வித்தியாசம் பாராட்டுவதில்லை..." என்று பகவான் சொன்னதாக விளக்கம்.

அப்படியானால் திருவடியைப் பற்றாதவர்களுக்கு அந்த அருள்நோக்கு இல்லை என்று ஆகிறது அல்லவா?

ஆகவே, பகவான் நாமம் நமக்குக் குலம் தரும் என்றால் - நல்ல குலத்திலே நம்மைச் சேர்க்கும். நல்ல குலம் என்பது அவனுடைய தாஸர்களின் குலம்.

திருப்பதியிலே கபிஸ்தலம் சுவாமிகள் என்பவர் எழுந்தருளியிருந்தார். அவரிடத்தில் எல்லாரும் பிரும்ம சூத்திர பாஷ்யம் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

அப்போது ஒரு வௌவால் ரொம்ப துடிதுடித்த நிலையில் அவர் திருவடியில் வந்து விழுந்தது. உடனே அவர் பெருமாளை தியானம் பண்ணி 'நீ இந்த ஆத்மாவை ஏற்கணும்' என்றார். வௌவால் பலம் பெற்று பறந்து போய்விட்டது!

அங்கே இருந்தவர்கள் பார்த்தார்கள்... 'நாங்களும் 25 வருடமாக காலக்ஷேபம் செய்கிறோம். ஒருநாள் இந்த பாக்யம் எங்களுக்குக் கிடைக்கவில்லையே...' என்று வருந்தினார்கள்.

அவ்வளவு சுலபமா மோக்ஷம் என்பது...? அவன் திருவடி பற்றினவர்களுக்கே அது சித்திக்கிறது!

எம்பெருமான் பெருமையை உணர்ந்த பக்ஷி, ஜந்துக்கள்கூட மோக்ஷத்தை அடைகின்றனவே... நமக்கு அவன் அறிவையும் கொடுத்து ஆசார்யரையும் தந்திருக்கிறான்... அவனைச் சரணாகதி பண்ண வேண்டும் என்கிற அறிவு நமக்கு இருக்க வேண்டாமா...?

அந்த அறிவுதான் தாஸன் என்கிற குலத்தில் நம்மைக் கொண்டு சேர்க்கும்.

(தொடரும்)



என்று திருமூலர் சொன்னபடி, பஞ்ச பூதங்களையே பார்த்துக் கொண்டு, அதன் காரணமான பரமாத்மாவை மறந்திருப்பதை விட்டு, இவற்றால் பரமாத்மா மறைந்து போக விடாமல், இவற்றிலும் வியாபித்திருப்பது பரமாத்மா தான் என்று, அனைத்தையும் ஈச்வர வியாபகமாகப் பார்க்க வேண்டும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

**ஒளிமயமான எதிர்காலத்துக்கு உங்களை வழி நடத்த, இதோ நிரஞ்சன் பாதாள அறையிலிருந்து படி ஏறி வந்து கொண்டிருக்கிறான்...**

# ஏட்சகன்

இரா. முருகன்

மொத்தம் தொண்ணூற்று ஏழு பெட்டி. மூச்சைப் பிடித்துக் கொண்டு இரண்டு தடவை எண்ணியாகி விட்டது.

'போய்யா... புண்ணாக்கு! தொண்ணூற்று எட்டு' என்று கடுகடுக்கிறது நிரஞ்சன் கையில் பிடித்திருந்த பட்டியல்.

வந்து சேராதது எது? கீ போர்டா? மானிட்டரா? இல்லை கம்ப்யூட்டரே தானா?

"உடனே தில்லிக்குக் கிளம்பி லஜ்பத்நகர் கிளையில் கம்ப்யூட்டர் போட்டு விட்டு வா... டோட்டல் ஆட்டோமேஷன்... சகலமானதுக்கும் கம்ப்யூட்டரை உபயோகிக்க, சகலருக்கும் பயிற்சி தரணும்... ஒண்ணாம் தேதிக்கு அப்புறம் அங்கே யாராவது பேனாவால் எழுதி வேலை செய்தால் உனக்குத்தான் மெமோ தருவோம்..."

தலைமை அலுவலகத்தால் விரட்டப்பட்டு டிசம்பர் குளிரில் நிரஞ்சன் காலையில்தான் தில்லியில் தரை இறங்கினான். டிப்டாப் த்ரீ-பீஸ் உடையில் உள்ளூர்க்காரர்களான ஊழியர்களும், செயற்கைக் கம்பளி அமுக்கு ஸ்வெட்டர்களோடு, உத்தியோக உயர்வில் வந்த் நம்மூர் நபர்களுமாகப் படுசுறுசுறுப்பாக இயங்கும் லஜ்பத்நகர் கிளை.

நிரஞ்சன் தலை தட்டுப்பட்டதுமே கிளை நிர்வாகி தரதரவென்று கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு பாதாள அறைக்குப் போனார்.

"இன்னிக்கு அஷ்டமி... சூரியன் அஸ்தமிச்சதும் வேலையை ஆரம்பிக்கலாம்... லைன் எல்லாம் இழுத்து தயாரா இருக்கு... போன வாரம்தான் ஒரு கோஷ்டி வந்து இண்டு இடுக்கு விடாமே சாக்கெட் மாட்டி நம்பர் போட்டுது. மெயின் சிஸ்டம் வைக்க கேபின் கூட டாய்லெட்டைத் தடுத்துப் போட்டாச்சு... கம்ப்யூட்டர் எல்லாம் இதோ இருக்கு..."

சுவருக்கு அந்தப் பக்கம் யாராரோ அற்ப சங்கைக்கு ஒதுங்கிக் கொண்டிருக்க, இந்தப் பக்கம் இருபத்தொண்ணாம் நூற்றாண்டுக்குப் போய்க் கொண்டு... நிரஞ்சன் மனசேயில்லாமல் பெட்டிகளைப் பிரிக்க முற்பட்டபோது மேனேஜர் இரும்புத் தடையுத்தரவு போட்டார்.

"வேண்டாம்... கொழுத்த ராகு காலம்... பிரிச்சு பணால் ஆயிட்டா கஷ்டம். ஆறு மணிக்கு ஆள் அனுப்பறேன். பிரிக்க, தூக்க, மேலே எடுத்துப் போக ஒத்தாசையா இருக்கும்."

கம்ப்யூட்டர் கம்பெனி ஆசாமிகளைத் தொலைபேசியில் அழைத்து சாயந்திரம் வரச் சொன்னால் வெள்ளைக்காரத்தனமாக நாளை பத்து மணிக்கு என்று கறார் வார்த்தை.. அவர்களுக்கு என்ன போச்சு...

"மயூர்விஹார்லே போன வருஷம் கம்ப்யூட்டர் போட்டபோது நாப்பத்தெட்டு மெகா பைட் கூடுதல் மெமரி போர்ட் கூரியர்லே அனுப்பியிருந்ததை யாரோ வாங்கி எங்கேயோ வைக்க... கட்டுட்டான் வேறெவனோ ஒருத்தன்... பண நஷ்டம்... போலீஸ்... எப்.ஐ.ஆர்... பேஜாராயிடுத்து."

மத்தியானம் காண்மன் ரொட்டியை உடுப்பி ஓட்டல் ஊத்தப்பமாக பாவித்து சுவைக்க முயன்று முடியாமல், எல்லாக் கோபத்தோடும் அரைத்து அரைத்து உள்ளே இறக்கிக்

கொண்டிருந்தபோது சென்னையிலிருந்து ஃபோனில் கூப்பிட்டுப் பயமுறுத்தி ஏப்பம் விட்டார்கள். உண்டு முடித்தவர்கள்.

கம்ப்யூட்டர் கம்பெனி இன்வாய்ஸைக் கையில் பிடித்தபடி பாதாள உலகத்துக்குப் பாய்ந்த நிரஞ்சன், இன்னும் அங்கேயே தான்.

"இன்னும் ஒரு மணி நேரம் பொறு... எடுத்து வச்சுடலாம்... பசங்க ஓவர் டைமுக்காக தகராறு செய்யறாங்க... அக்கவுண்டண்ட் வேறே லீவுலே போய்ட்டான். இத்தனை நேரம் மிரட்டி வேலை செய்ய வச்சுட்டேன்..."

படி இறங்கி வந்த மேனேஜர் சொல்லிக் கொண்டிருந்தபோதே பக்கத்தில் டெலிபோன் மணி. இங்கே ஏன்?

"வாடிக்கையாளர்களோட பாதுகாப்புப் பெட்டகமும் இங்கே இருக்கறதாலே ஃபோன் வைக்கச் சொல்லிட்டாரு ஜி.எம். ஃபோன் பண்ண வரானா, பொருளை வைக்க வரானா... யார் கேக்க?"

சலித்துக் கொண்டபடியே தொலை பேசி விட்டு வந்தவர் முகத்தில் பாப்



கார்ன் வெடித்தது.

"ஜி.எம் தான். உடனே ரீஜனல் ஆபீஸுக்கு வரச் சொல்றார். கம்ப்யூட்டர் கேபின்ஸ் போடறதுக்காக வாங்கிட்டு நான் காண்ட்ராக்ட் கொடுத்தேன்னு மொட்டை பெட்டிஷன் வந்திருக்காம்... என்ன எழவுக்கு எனக்கு கம்ப்யூட்டரும் மண்ணாங்கட்டியும் தெருப் புழுதியும்?"

ஜி.எம்மாகவும் தெருப்பு புழுதியாகவும், மொட்டை பெட்டிஷன்காரனாகவும் நிரஞ்சனைப் பார்த்த அவர் பார்வையில் சிநேகிதம் இல்லை.

"சார்... இங்கே தொண்ணூற்று எட்டு..."

நிரஞ்சன் முடிப்பதற்குள் அவர் படி ஏறி இருந்தார்.

நிலவறையை முழுக்கப் பார்த்தால் தொலைந்த பெட்டி தட்டுப்படலாம். எங்கேயாவது ஓரமாகப் போட்டு வைத்து மறந்திருப்பார்கள்...

நிரஞ்சன் மெல்ல நடக்க, வரிசையாகப் பாதுகாப்புப் பெட்டகங்கள் அடுக்கிய பிரம்மாண்டமான அறை. ஓரமாக கண்ணாடி. டிரஸ்ஸிங் டேபிள். பெட்டகத்தில் வைத்து எடுத்த நகையைப் போட்டு அழகு பார்க்க...

டிரஸ்ஸிங் டேபிள் பக்கம் தரையில் கிடந்த பூப்போட்ட கைக்குட்டையைக் குனிந்து எடுத்தான் நிரஞ்சன். பவுடர் வாடையோடு அதை மறந்து விட்டுப் போனது யாரோ?

மேஜைக்குப் பின்னால், பெட்டகத்துக்குக் கீழே, அறைக்கோடி வாட்டர் கூலர் மேல், பெடஸ்டல் ஃபேன் பக்கம்... தொண்ணூற்றெட்டாவது பெட்டியைக் காணவே இல்லை.

அறைக்கோடி, சிறிய கழிவறையில் முடிந்தது. பினாயில் பாட்டில், பிளாஸ்டிக் வாளி. மொறிச்சென்று சுத்தமாக... யாருக்கு வேண்டும். பெட்டியை எங்கேய்யா போட்டீங்க?

போகிறது... இனியும் தேடிக் கொண்டு நேரம் கடத்தக் கூடாது. சடசடவென்று எடுத்து வைத்து விட வேண்டியதுதான். பிரதிஷ்டை செய்து, இணைப்பு கொடுத்து சரி பார்த்து. பரிவார தேவதைகளாக மோடம், ஸ்கேனர், பணவழங்கி, மல்ட்டி-மீடியா உதவி எல்லாம் இணைத்து இயக்க வைத்து...

நிரஞ்சனுக்குத் தலையைச் சுற்றியது. ஒண்ணாம் தேதி முதல் ஒருத்தன் கையிலும் பேனா இருக்கக் கூடாதாம். இங்கே எத்தனை பேர் கம்ப்யூட்டருக்குப் பத்து செண்டிமீட்டர் தூரத்தில் நின்று சுவாசித்திருக்கிறார்கள்? கம்ப்யூட்டர் வாசனை பிடிக்கத் தயாராக இப்போது எத்தனை பேர் மேலே உட்கார்ந்து கொண்டு இருக்கிறீர்கள்? வாருங்கள் ஐயா... வாருங்கள் அம்மா... ஒரு கை கொடுங்கள்... உங்கள் மேஜையில் பரத்திய தூசி படிந்த பேரேடுகளைப் புறங்கையால் ஒதுக்கித் தள்ளிவிட்டு கம்ப்யூட்டரை

உட்கார்த்தி வையுங்கள். காதோரம் செருகிய ரீபில்களையும் நடுவிரலில் மை கசியும் பேனாக்களையும் தூக்கி எறியுங்கள். ஒளிமயமான எதிர்காலத்துக்கு உங்களை வழி நடத்த, இதோ நிரஞ்சன் பாதாள அறையிலிருந்து படி ஏறி வந்து கொண்டிருக்க....

மேலே கதவு பூட்டியிருந்தது.

நாலு யானை பலம் கொண்ட இரும்புக் கதவு அது.

"ஹலோ... கதவைத் திறங்கப்பா."

நிரஞ்சன் குரல் அவனுக்கே பரிதாபமாக, சோனியாக இழுபட்டது. வெளியே யாருமே இல்லையா?

வயிற்றில் பயம் கவ்விப் பிடித்து ஜில்லென மேலெழும்பிக் காது மடலில் உஷ்ணமாக வடிந்தது.

"ஹலோ.. ஹலோ... ஹலோ..."

கதவில் திரும்பத்திரும்ப மோதிய கைகள் வலித்துச் சிவந்தன.

என்ன கண்றாவி இது? நல்ல குளிர் நாளில் இப்படி ஒரு பழக்கமில்லாத ஊரில் தரைக்கடியில் சிறைப்பட்டு... சாப்பாடு காலை முதலே பிரச்னை. இந்தியன் ஏர்லைன்ஸில், தேசிய ஒற்றுமையை வலியுறுத்தக் கமிட்டி போட்டு சமைத்து வைத்த ஏதோ பன்மொழிப் பதார்த்தம். மதியம் முக்கால் சுக்கா ரொட்டி. ராஜ்மா என்ற பெயரில் ஐந்து பெரிய மொச்சைப் பயிறு... அவ்வளவுதான். ஒரு டீக்குக்கூட வழியில்லாமல்.

டீ கிடக்கட்டும். வெளியே போகிற வழியைப் பார் என்று நிரஞ்சனுக்குள் யாரோ கட்டளை இட்டார்கள். சென்னையில் தினம் பஸ்ஸில் கூட வந்து டி.எம்.எஸ்ஸில் இறங்கும் பருத்திப் புடைவை அழகியா அது? பிழைத்துக் கிடந்து, அவளும் கன்னிதான் என்று உறுதியானால்...

நேரங்கெட்ட நேரத்தில் மனசு ஏறி வந்தவனை வலுக்கட்டாயமாக இறக்கி விட்டு மேல் படியில், கதவில் சாய்ந்தபடி உட்கார்ந்தான் நிரஞ்சன்.

நாளைக்குக் காலையில் பத்து மணி சுமாருக்கு இந்தப் பிரகஸ்பதிகள் வந்து கதவு திறக்கும் வரையில் இப்படியே உட்கார்ந்து கொண்டு இருக்க வேண்டியதுதானா?

பார்வை அறைக்கோடி டெலிபோனின் மேல் பட்டது.

யாருக்காவது ஃபோன் செய்து விஷயத்தைச் சொல்லலாமா? யாருக்கு? போன் பக்கம் நடந்தபடி யோசித்தான்.

டூ-த்ரி போர்-பைவ் - சிக்ஸ்-டூ சே... அது சென்னையில் 'வாமனன்' ஆபீஸ். கடைசித் தம்பி வேலை பார்க்கிறான். ஜூன் ஒண்ணாந் தேதி அவன் காதல் கண்ணாலம். அதற்குள் விடுதலையாகி விடுவோமா?

நாலு... ஆறு... ரெண்டு... நெல்லையில் சங்கரன் பிள்ளை சார் வீடு. முந்தாநாள் எழுபத்து மூணாவது பிறந்தநாள். வாழ்த்துச் சொல்ல போன் செய்தால், ரிப்போர்...

இது நெல்லை இல்லை... தில்லி, யாரைத் தெரியும்?

நூறு? வேண்டாம். உள்ளூர் போலீஸ் ஸ்டேஷனுக்கே போன அனுபவம் இல்லை. காக்கி உடுத்தி இந்தியில் இரைகிற போலீஸ்காரர்கள் இந்தி சினிமா கடைசிக் காட்சியில் வந்தால் பொறுத்துக் கொள்ளலாம். பூட்ஸ் காலோடு பாதாள அறையில் தடதடவென்று ஓடி வந்து... சாரி... ராங் நம்பர். மதியம் ஃபோன் செய்த கம்ப்யூட்டர் கம்பெனி நம்பர்? நினைவு இல்லை.

கை போன போக்கில் எண்களை அழுத்த, 'நீங்கள் டயல் செய்த எண்ணை சரி பாருங்கள்' என்று ஆங்கிலத்தில் அன்புக் கட்டளையிடும் இயந்திரக் குரல்.

நிறுத்தி நிதானமாக எண்களை மறுபடி மாற்றி அழுத்த, மறுமுனையில் மணிச்சத்தம். அப்பாடா....

"அல்லோ... கோன் போல்த்தே ஹை?" கரகரப்பான ஆண் குரல்.

நிரஞ்சன் அவசரமாகத் தொண்டையைச் செருமிக் கனைத்து, ஜாக்கிரதையான ஆங்கிலத்தில் லஜ்பத்நகர் பாதாள அறையில் ஆரம்பித்தான்.

"அரே... க்யா சாஹ்யே தும்கோ... கோன் ஹை தும்?"

மறுமுனை இந்தியில் சலிப்பும் அவசரமும்.

"யோவ்... வச்சுடாதே... உயிர்ப் பிரச்னை...." நிரஞ்சன் தமிழில் தன்னையறியாமல் அலற, ஒரு வினாடி நிசப்தம்.

"என்னப்பா... தமிழா? என்ன வேணும் சொல்லு...."

அட்சர சுத்தமான தமிழ். கடவுள் தொலைபேசியாக இருக்கிறார்.

"சார்.... சார்... நான் நிரஞ்சன்."

பேச முடியாமல் குரல் தடுமாறியது.

"மெல்ல... மெல்ல.... பதட்டப்படாதே. நான் மேஜர் ஹர்சரண் சிங் ராணா... உனக்கு என்ன உதவி வேணும் சொல்லு...."

தமிழ் பேசும் சர்தார்ஜி. நம்பள்... நிம்பள் சேட் இல்லை...

ஒரு ஆசுவாசத்தோடு சொல்லி முடித்தான் நிரஞ்சன்.

"கேட்க கஷ்டமா இருக்கு அப்பா... நான் ஜனக்புரியிலே இருக்கறவன். நீ இருக்கறதோ பதினஞ்சு இருபது கிலோ மீட்டர் தள்ளி..."

"எடை மிஷின்ல ஏறி நின்னியே, டிக்கெட்ல என்ன எழுதி இருக்கு?"

"எடை அதிகம் — இன்னொரு ரூபாயைப் போடவும்னு!"

— பர்வதவர்த்தினி

"சார் நீங்க வேறே எதுவும் செய்ய வேண்டாம். உங்க கிட்டே டெலிபோன் டைரக்டரி இருக்குமே... அதிலே இந்த ஆபீஸ் மேனேஜர் வீட்டு போன் நம்பரைப் பிடிச்சு எனக்குச் சொன்னாப் போதும்..."

சர்தார்ஜி சிரித்தார். நிரஞ்சனுக்குக் கஷ்டமாக இருந்தது.

"ஏ பாய் முகுந்தன்...."

"முகுந்தன் இல்லே சார்... நிரஞ்சன்... ஆர்.பி. நிரஞ்சன்."

"சரிப்பா. நிரஞ்சன். என்கிட்டேயும் டைரக்டரி கிடையாது. என் தம்பி வந்தா பக்கத்துலே எங்கேயாவது வாங்கி வருவான்..."

நீங்க போக முடியாதா சர்தார்ஜி?

"சார் தயவு பண்ணுங்க. இல்லேன்னா நாளைக் காலை வரை நான் இங்கேயே கிடந்தாகணும்."

சர்தார்ஜி இன்னொரு வெடிச் சிரிப்பு சிரித்தார்.

"உனக்கு விஷயம் தெரியாதா..... நாளைக்கு விடுமுறை. சாயந்திரம் அறிவிச்சாங்க. பழைய பிரதமர் போய்ட்டாராம்...."

செத்தேன். நிரஞ்சனுக்குக் கை நடுங்கியது. நாளை விடுமுறை. நாளை மறுநாள் ஞாயிற்றுக் கிழமை. மூன்று நாள் இந்த குகைக்குள்ளா?

"ஐயையோ.... சார். சர்தார் சாஹேப்... உங்களை விட்டா எனக்கு கதியில்லை... போனை வச்சுடாதீங்க." நிரஞ்சன் முகம் தெரியாத சர்தார்ஜியோடு மன்றாடினான்.

"தைரியமா இரு பையா.... ஒண்ணும் ஆகாது. பெரிய ரூம்தானே நீ இருக்கறது?"

"ஆமா சார். ஆனா சாப்பாடு..."

"தண்ணி இருக்கா?"

"இருக்கு சார்." நிரஞ்சன் தன்னிச்சையாக ஓரத்தில் நிறுத்தியிருந்த வாட்டர் கூலரைப் பார்த்தான்.

"அப்புறம் என்ன... ஒரு வாரம் தள்ளலாம்..." படு காஷுவலாக வந்த எதிர்க்குரல்.

"சார்... ஒரு வாரமா?"

"நான் இருந்திருக்கேம்ப்பா.... சியாச்சின்லே ஒரு பங்கர்லே ஏழு நாள் சாப்பாடு, தண்ணி, தூக்கம் இல்லாமே...."

"சார் நீங்க இருக்கலாம்..."

"ஏம்ப்பா... எனக்கு என்ன தலைப்பாக் குள்ளே கொம்பா முளைச்சிருக்கு?"

"அதில்லே சார்... நீங்க பெரியவங்க..." நிரஞ்சன் சமாதானமாகச் சொன்னான். பகைத்துக் கொள்ளக் கூடாது... முதலுக்கே மோசமாகி விடும்.

"என் தம்பி ஜலந்தர் போயிருக்கான். ஐஎஸ்.பி.டியிலே பஸ் இறங்கி வர ராத்திரி ரெண்டு மணியாயிடும்... பொறு...."

தம்பி சர்தார்ஜி சீக்கிரமாக வர வேண்டும். அவன் வருகிற பஸ்ஸோ ரயிலோ, தடங்கலோ விபத்தோ ஏற்படாமல் வந்து சேர வேண்டும். எல்லாக் கடவுளையும் வேண்டினான் நிரஞ்சன்.

"சார்... நீங்க உங்க பிரண்ட் யாருக்காவது ஃபோன் செய்து...."

"நடக்கற காரியமில்லே அதெல்லாம். என் ரூம் போன், எக்ஸ்டென்ஷன்தான்...."

"சார்... நீங்க சாப்பிட்டாச்சா?" நிரஞ்சன் கேட்டான்.

"நிச்சயம் சாப்பிட மாட்டேன். நீ பாவம் பசியா அடைஞ்சு கிடக்கே, போனை வச்சுட்டு நான் சாப்பிட்டா ஆண்டவனுக்கே பொறுக்காது."

நிரஞ்சனுக்குக் கண்கலங்கியது. இதுவரை சொல்லிச் சிரித்த சர்தார்ஜி ஜோக்குகளுக்காக மானசீக மன்னிப்பு கேட்டுக் கொண்டான்.

"சார்... ரொம்ப தாகமா இருக்கு...."

"போய்த் தண்ணி குடிச்சுட்டு வா..."

"போனை வச்சுட மாட்டீங்களே...."

"நம்பிக்கை இல்லியா நிரஞ்சன். நான் என் நம்பர் சொல்றேன்... வேணுமானா குறிச்சுக்கோ... அட்ரஸ் கூடத் தர்றேன்...."

"இப்ப எனக்கு அதெல்லாம் எதுக்கு சார். ஒரு நிமிஷம் நினைச்சா பயமா இருக்கு. நீங்க பயப்பட மாட்டீங்களா சார்?"

"சொன்னேனே... சியாச்சின்லே... ஒரு வாரம் சோறு தண்ணி இல்லாம சுத்தியும் எதிரிகள்.. ஒரு வழியாப் பிடிச்சுட்டாங்க."

"அப்புறம் சார்?"

"சொல்றேன்... நீ தண்ணி குடிச்சுட்டு வா...."

அவசரமாகக் குடித்ததில் புரை ஏறி இருமல்.

"என்னப்பா... மூக்காலே தண்ணி குடிச்சியா?"

"நீங்க ஜோக் அடிக்கலாம் சார். என் பக்கம் சிரிக்க, சந்தோஷப்பட தேறுதா... போறாத காலம் இல்லியா இது...."

"எத்தனை நல்ல விஷயம் இருக்கு... உனக்குப் புலப்படலியா...."

"என்ன எல்லாம் சார் இருக்கு?"

"வெளியே அஞ்சு டிகிரி குளிர்... ரஜாய்க் குள்ளேயே குளிர்றது... உனக்கு?"

"லேசாப் புழுக்கமா இருக்கு.. பாதாள அறை...."

"ஃபேன் போட்டுக்கோ. அப்புறம் மின்சாரம்... போர்முனையிலே என்னை மாதிரி இருட்டுலே கிடக்கலியே... சுத்தி எதிரி யாரும்



இல்லே... ஒரு புது கிழட்டு நண்பன்... நான் தான்.. மாட்டி இருக்கேன். உன்னே போன் இருக்கு. தண்ணி இருக்கு. ஏம்ப்பா... டாய் லெட்?"

"இருக்கு சார்..."

"சாப்பாடுதான் இல்லே. அதானே..."

கம்ப்யூட்டரைத் தின்ன முடியாது. கர்ச்சீப் பைச் சாப்பிட முடியாது.

சர்தார்ஜி இன்னும் பத்து சதவிகிதம் அதிகக் கருணை காட்டினால் இன்னேரம் வெளியே போய்ச் சாப்பிட்டிருக்கலாம். தம்பி வரவேண்டும் என்று என்ன பிடிவாதமோ.....

"சார் உங்ககிட்டே கார் இருக்கா?"

"இருந்தது. தங்கச்சிக்கு கொடுத்திட்டேன். எதுக்குக் கேக்கறே..."

"ஒண்ணும் இல்லே சார். சும்மாதான்."

"ஆர்மியிலே எல்லா வண்டியும் ஓட்டியிருக் கேன் தம்பி. மெட்ராஸ் லயோலாவுலே படிக் கறபோது காலேஜ்லேயே முதல் மோட்டார் சைக்கிள் என்னுதுதான்."

ஆக, சர்தார்ஜிக்குத் தமிழ் வந்த வழி சென்னை நுங்கம்பாக்கம்... நிரஞ்சன் வாயைக் கிண்டினான். தம்பி சர்தார் வரும் வரை இவரைப் பிடித்து வைக்க வேண்டியிருக்கிறது.

"மெட்றாஸ் இல்லே... திருச்சியிலே எங் கப்பா செட்டில் ஆகி பவுண்டரி வச்சிருந்தார். நான் படிச்சது திருச்சி, மெட்றாஸ்... இங்கே வந்து இருபது வருஷமாச்சு..."

"உங்க தம்பி என்ன செய்யறார்?"

"பெட்ரோல் பங்க் வச்சிருக்கான்... தமா ஷான மனுஷன்."

அவர் சொல்லிக் கொண்டிருக்கும் போதே வேறு ஏதோ சத்தம்...

"வந்துட்டாம்ப்பா. உன்னோட அதிர்ஷ் டம்... பிரண்ட்டோட கார்லே வந்து இருக்கான். தாங்க்யூ முசாபர் அலி. இந்த மடையனை எப்படி சகிச்சுக்கிட்டே.... நிரஞ்சன்... முசாபர் அலி பேமிலி பிரண்ட். ஜலந்தர்லே பக்கத்து வீடு..."

முசாபர் சௌக்கியமாக ஜீவிக்கட்டும். நிரஞ்சன் விடுதலை என்ன ஆச்சு?

யாரோ உரக்க விசும்பும் சத்தம். உரத்த குரலில் தேற்றும் சத்தம். அடுத்த வினாடி தொலைபேசி இணைப்பு துண்டிக்கப்பட்டது.

கடவுளே... இப்படி வழியைக் காட்டி அடைத்து விட்டாயே... நியாயம்தானா?

உடல் முழுக்கச் சோர்வு பொங்கி வழிய, நிரஞ்சன் தொலைபேசியை வைத்துவிட்டுத் தரையில் அசதியாகச் சாய்ந்தபோது, தொலைபேசி வைத்த முக்காலிக்கு அடியில் தொண்ணூற்று எட்டாவது பெட்டி. கீ போர்ட் வைத்த அந்தச் சதுரப் பெட்டியைப் பார்த்த படி கண்ணயர்ந்ததுதான் தெரியும்.

**க**ண் விழித்த போது ஹோட்டல் அறை. பக்கத்தில் கையைப் பிடித்துக் கொண்டு ஆயிரத்தோரு தடவை 'சாரி' சொன்ன லஜ்பத் நகர் கிளை மேனேஜர். பாதி ராத்திரி நேரத் திலும் டையோடு நிற்கிற ரீஜனல் மேனேஜர், எழுந்திருக்கப் போனவனைத் தோளை அழுத்திப் படுக்க வைத்தார்.

"ரிலாக்ஸ் மை பாய்... உன் அதிர்ஷ்டம் மேஜர் ராணாவைப் பிடித்து விட்டாய்... அற் புதமான மனுஷர்..."

ஒன்றாம் தேதி கம்ப்யூட்டர்களை நிறுவிப் பேனாக்களைத் தூர எறியும் வரை அந்த அற்புதமான மனிதர் கண்ணில் படவில்லை. இரண்டாம் தேதி பகல். சேமிப்புக் கணக்கு அதிகாரிக்கு, ஸ்கேன் செய்த கையெழுத்தைக் கம்ப்யூட்டரில் பார்த்து காசோலையை 'பாஸ்' செய்யச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்த போது கவுண்டரின் அந்தப் பக்கம் பெரிய சத்தம்.

"அலேக் நிரஞ்சன்!"

வெளியே வர, இரண்டு தலையோடு விநோதமான சர்தார்ஜி.

பக்கத்தில் போனதும் தெரிந்தது, இரண்டு காலும் ஒருகையும் இல்லாத வயதான சர்தார் ஜியை நடுத்தர வயசுக்காரன் குழந்தை போல தூக்கிப் பிடித்தபடி நிற்கிறான்.

"மேஜர் ஹர்சரண்சிங் ராணா...." இருந்த ஒற்றைக் கை நீண்டு நிரஞ்சனின் கரத்தை வலு வாகப் பற்றிக் குலுக்கியது. அதிலும் மூன்றே விரல்தான்.

"மிச்சமெல்லாம் லேண்ட்மைன் வெடிச் சதுலே அம்பேல்" மேஜர் சிரித்தார். நிரஞ் சனின் கண்கள் பனித்தன.

"மறுநாளே வந்திருப்பேன். ஜலந்தர்லே எங் கம்மா இறந்து போய்ட்டா ...இந்த மடையன் தான் போய் பொதச்சிட்டு வந்தான்... நீ இங்கே மாட்டிக்கிட்ட ராத்திரி..."

என்ன மகத்தான மனுஷர் இவர். மிகப் பெரிய சோகங்களைச் சுமந்தபடி, அடுத்த வனின் சின்னத் துக்கத்தில் பங்கெடுத்தபடி... கூட்டல் குறியைப் பெரிதாக்கி, கழித்தலைப் புறம் தள்ளி...

"சார்... சார்..." வார்த்தை வராமல் அரற்றி னான் நிரஞ்சன்.

•"ஐடி கல்லு துசி கஹ்ரஹே ஹோ... மெண்ணு சுனாயி நய் தித்தா...."

தெய்வம் பஞ்சாபியில் பேசினாலும் புரியும்.

• நீ சொல்றது என் காதுலே விழலே....


• இந்திப்பட கேஸட்களுக்கு ஏராள ஆதரவு!

# கழுத்தை நெரிக்கும் கேளிக்கை வரி!

ஹிந்தி, தமிழ்ப் படங்கள் சக்கை போடு போடுகின்றன. தெலுங்கு, மலையாளம், ஆங்கிலம், உருது மொழிப் படங்களெல்லாம் கூட வெற்றிகரமாக ஓடுகின்றன. ஆனால் கன்னடப் படங்கள் மட்டும் பெங்களூர் தியேட்டர்களில் சரியாக ஓடுவதேயில்லை! கன்னட சினிமா தயாரிப்பாளர்களுக்கு ஒரே அதிருப்தி!

பார்த்தது கர்நாடக அரசு. வருடத்தில் சில நாட்களாவது ஒவ்வொரு பெங்களூர் தியேட்டரிலும் கன்னடப் படம் திரையிடுவதைக் கட்டாயமாக்கியது!

அப்படியும் பலனில்லை. மற்ற படங்கள் ஹவுஸ் ஃபுல்லாக ஓட, கன்னடப் படங்களுக்குக் கூட்டத்தைக் கொண்டு வந்து குவிக்க முடியவில்லை. இதனால் அடுத்த கட்டமாகக் கன்னடப் படங்களுக்குக் கேளிக்கை வரியைக் குறைத்துக் கொண்டே வந்து கடைசியில் வரியே இல்லாமல் ஒழித்து விட்டது அரசு.

நூறு சதவிகிதம் வரிவிலக்கு இருந்தும் வசூலில் எந்த முன்னேற்றமும் இல்லை!

திரைப்படத் துறையினரும் கன்னட சங்கங்களும் குறிப்பாக ராஜ்குமார் ரசிகர் மன்றமும், இதற்கெல்லாம் காரணம், மற்ற மொழிப் படங்களின் ஆக்கிரமிப்புதான். அந்தப் படங்களைக் கட்டுப்படுத்தினால் கன்னடப் படங்களின் வசூல் உயரும் என்று சொல்ல ஆரம்பித்தார்கள்!

இவர்களின் கூற்றை அப்படியே ஏற்றுக் கொண்ட அரசாங்கம், கேளிக்கை வரி என்ற பெயரில் மற்ற மொழிப் படங்களுக்கு சம்மட்டி அடிகொடுக்க முடிவெடுத்தது. அதன்படி கன்னடம் அல்லாத பிறமொழிப் படங்கள் அத்தனைக்கும் கேளிக்கை வரி நூற்றுப் பத்து சதவீதம் என்று ஓர் அவசர உத்தரவு போட்டது. அதனால் சாதாரண அரங்குகளில் எட்டு ரூபாய், பன்னிரெண்டு ரூபாய், பதினாறு ரூபாய் என்றிருந்த டிக்கெட்டுகள் பதினெட்டு ரூபாய், இருபத்தாறு ரூபாய், முப்பத்தெட்டு ரூபாய் என்று எகிறின. பால்கனி டிக்கெட் இருபத்து நான்கு ரூபாய் என்றிருந்த தியேட்டர்களில் ஐம்பத்தோரு ரூபாய் ஆனது.

விளைவு? மறுநாளே தியேட்டர்கள் ஈ ஓட்டத் துவங்கின. பிறமொழிப் படங்களை வெளியிடும் விநியோகஸ்தர்களும் திரையரங்கு உரிமையாளர்களும் அரசின் உத்தரவுக்கெதிராகப் போராடத் தீர்மானித்து ஒருங்கிணைப்புப் போராட்டக் குழு அமைத்துள்ளனர். "உலகில் எங்கேயுமே இதுபோல சினிமாவுக்கு கேளிக்கை வரி விதிக்கப்பட்டதில்லை.

அரசாங்கம் தனது முடிவை மாற்றிக் கொள்ளாவிட்டால் தியேட்டர்கள் அத்தனையையும் இடித்துவிட்டு ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ் கட்டுவதுதான் ஒரே வழி" - என்கிறார்கள் போராட்டக் கமிட்டியினர்.

இதற்கிடையில் கேபிள் டீவி. வரவால் பிசினஸ் படுத்துக் கிடந்த காசெட் கடைக்காரர்கள் இனிமேல் நம்முடையதுதான் பிசினஸ் என்ற எண்ணத்தில் ஏராளமான இந்திப் பட காசெட்டுகளுக்கு மும்பையில் ஆர்டர் பண்ணியிருப்பதாகத் தகவல்!

## கௌடாவுடன் டூ?

தேவே கௌடாவுக்குப் பிரதமர் பதவி பறிபோன அடுத்த வினாடியே கர்நாடகத்திலுள்ள ஜே.எச். பட்டேலின் அரசு என்னவாகும் என்கிற யூகங்கள் கிளம்பி விட்டன. காரணம், பட்டேல், ஹெக்டேவின் ஆள் என்பதுதான். கௌடா பிரதமராக இருந்ததால்தான் வேறு வழியில்லாமல் கௌடாவின் விசுவாசி போல் காட்டிக் கொள்வதற்காக ஹெக்டேவை மறைமுகமாகத் தாக்கிப் பேசவும் செய்தார். இப்போதுதான் கௌடாவுக்குப் பதவியில்லையே! இந்த நிலையில் அவருக்கு விசுவாசி போல் காட்டிக் கொள்வதில் என்ன பயன்?

"காங்கிரஸ் தனது ஆதரவை விலக்கிக் கொண்டதுமே கௌடா ராஜினாமா செய்திருக்க வேண்டும். அப்படிச் செய்திருந்தால் அடுத்த பிரதமரைத் தேர்ந்தெடுப்பதில் இத்தனை சிக்கல்கள் தோன்றியிருக்காது. காரியத்தைக் கெடுத்தவர் கௌடாதான்!" என்று கர்நாடக ஜனதாதள எம்.பிக்களில் ஒருவரான கோதண்டராமய்யா அறிக்கை விட்டதன் மூலம் கௌடாவுக்கு எதிரான முதல் அம்பை எடுத்து வீசியிருக்கிறார்.

இதன் தொடர்ச்சியாக ஜே.எச். பட்டேல் தமது மொத்த எம்.எல்.ஏக்களையும் கூட்டி, 'நாங்கள் ஜனதா தளத்திலிருந்து விலகி ஹெக்டேவின் 'லோக் சக்தி'யில் சேருகிறோம்!' என்று அறிவித்து, தமது அரசியல் குருவான ஹெக்டேவுடன் சேர்ந்து விடுவார் என்று சொல்லப்படுகிறது!

- பெர்ணான்டஸ்

• கௌடா



• ஜே.எச். பாட்டில்

## மூலம் : டேனியல் ஸ்டீல்

பிலிப் ஒயின் கொண்டு வரச் சொன்னவுடன் ஆலிஸன் திகைத்ததற்குக் காரணம், அவள் அதிகமாய் ஒயின் சாப்பிட்டது கிடையாது. கிறிஸ்துமஸின்போது மட்டும் சிறிது ஷாம்பேய்ன் அருந்த அவள் பெற்றோர் அனுமதித்தது உண்டு. இரண்டொரு முறை பீர் சாப்பிட்டிருக்கிறாள். ஆனால் அது அவளுக்குக் கொஞ்சமும் பிடித்ததில்லை.

ஒயின் சாப்பிடுவதற்கான வயதை அடைந்தவர்கள் என்பதைக் காட்டும் 'ஐடி கார்டு' - அடையாள அட்டை அவர்கள் வைத்திருக்க வேண்டும். அது அவர்களிடம் இல்லை. கேட்டால் காட்டுவதற்காகப் போலிக் கார்டு வைத்திருந்தார்கள்.

ஆனால் சர்வர் எதுவும் கேட்கவில்லை. பிலிப் ஆர்டர் தந்தபடி ஒயின் கொண்டு வந்து கொடுத்து விட்டுப் போய் விட்டார்.

எல்லாருக்கும் ஒயின் வரவழைத்தானே தவிர, பிலிப் அதை உடனே அருந்தி விடவில்லை. ஆலிஸன் அவனைக் கவனித்துக் கொண்டுதான் இருந்தாள். அவளும் க்ளோவும் ஒயின் சாப்பிட்டு முடித்த பின்னரும் அவன் மிச்சம் வைத்திருந்தான். மற்றச் சாப்பாட்டு வகைகளின் நடுநடுவே சிறிது அருந்தியவன், இரண்டு கப் ஸ்டிராங்கான காப்பி வரவழைத்துக் குடித்தான். அதுவும் கூடப் பால் இல்லாத வெறும் டிகாக்ஷன் காப்பி.

“உனக்கு ஒயின் அதிகமாய்ப் பிடிக்காதா?” என்று ஆலிஸன் கேட்டாள்.

“அடிக்கடி சாப்பிட மாட்டேன். ஆனால் மனசு சந்தோஷமாயிருக்கும்போது சாப்பிடுவேன்,” என்று புன்னகையுடன் சொன்னான் பிலிப். “வீட்டில் அப்பா அம்மாவுடன் இருக்கும்போது கொஞ்சம் குடிப்பேன். அவர்களுடன் ஓட்டலுக்குச் சாப்பிடப் போனால், 'பரவாயில்லை, ஒயின் சாப்பிடு' என்று என் அப்பா சொல்வார்.”

அது உண்மைதான். ஆனால் 'இதுபோல, இரண்டுங்






**அவள் சொல்லாமலே பல விஷயங்களை அவன் புரிந்துகொள்கிறவனாக இருந்தான். அதனாலேயே அவனிடம் பேசப் பேச அவளுக்குப் பிரியம் அதிகரித்தது.**



# 4

கெட்டான் வயதுப் பெண்களை ஓட்டலுக்கு அழைத்துப் போய், போலி அடையாள அட்டைகளுடன், ஒயின் ஆர்டர் பண்ண அப்பாவும் அம்மாவும் அனுமதித்திருப்பார்களா?' என்று அவன் தன்னைத் தானே கேட்டுக் கொண்டான். நிச்சயமாய் அனுமதித்திருக்க மாட்டார்கள். அதுவும் ஒயின் குடித்த பிறகு அவன் கார் ஓட்ட வேண்டும் என்றால்? குறுக்கே விழுந்து தடுத்திருப்பார்கள்! ஆனால் இப்போது பக்கத்தில் இரண்டு அழகான பெண்கள் இருந்ததால் அவனுக்குத் துணிச்சல் ஏற்பட்டு விட்டது.

"திரும்பிப் போகும் போது நீ கார் ஓட்ட வேண்டியிருக்குமே! பரவாயில்லையா?" என்று மறுபடியும் கேட்டான் ஆலிஸன்.

"சே, சே! அந்த அளவுக்கு நான் குடிக்கவில்லை. கவலைப்படாதே!" என்று பிலிப் உறுதியாகப் பதில் சொன்னான்.

"ஒரே ஒரு கிளாஸ்தான் குடித்தேன். கூடவே இரண்டு கப் டிகாக்ஷன் காப்பியும் சாப்பிட்டேன். அதற்கு அது சரியாகிவிடும். நீ கவனிக்கவில்லை?"

"கவனித்தேன், கவனித்தேன். நீ ஜாக்கிரதையாயிருப்பதைப் பார்க்கச் சந்தோஷமாயிருக்கிறது." என்றாள் ஆலிஸன். வயதிலும் அறிவிலும் அவனைக் காட்டிலும் அவள் பெரியவள். அழகான இளைஞன். என்றாலும் அவனுடன் பேசுவதில் அவனுக்குக் கூச்சம் ஏற்பட

தமிழில் : ரா.கி. ரங்கராஜன்

வில்லை. மனசில் படுவதை ஒளிக்காமல் அவளால் பேச முடிந்தது. அவள் அப்படிப் பேசுவது அவனுக்கும் பிடித்திருந்தது.

"நான் ஒயின் சாப்பிட்டதைப் பற்றி ரொம்பக் கவலைப்பட்டு விட்டாயா, என்ன?" என்றான் அவன்.

அவள் புன்னகை செய்தாள். "ரொம்ப இல்லை. கொஞ்சம்."

"அது கூட வேண்டாம்."

அவனும் பதிலுக்குப் புன்னகை செய்து, மேஜை மீது நீண்டிருந்த அவள் கையை மெதுவே அழுத்தினான். இருவர் கண்களும் ஒன்றையொன்று சந்தித்தன. சில வினாடிகள். பிறகு பார்வையைத் தாழ்த்திக் கொண்டார்கள். ஆலிஸனின் இருதயத்துக்குள் ஒரு பரவசம் புகுந்து கொண்டது. இந்த மாதிரி அனுபவம் அவளுக்கு இதற்கு முன் ஏற்பட்டது கிடையாது.

ஜேம்ஸும் க்ளோவும் என்ன செய்கிறார்கள் என்பதைக் கவனித்தாள். சான்பிரான்ஸிஸ்கோ நடனப் பள்ளியில் தான் சேர்ந்திருப்பதைப் பற்றி க்ளோ சொல்லிக் கொண்டிருந்தாள். தன் தங்கையுடன் ஒருநாள் அந்தப் பள்ளிக்கு வந்தபோது அவள் ஆடுவதைப் பார்த்ததாக ஜேம்ஸ் சொல்லிக் கொண்டிருந்தான்.

"நீ நன்றாக ஆடினாய்!" என்று ஜேம்ஸ் சொன்னதும் க்ளோவுக்கு ஆனந்தம் தாளவில்லை. அவளுக்கு அவனிடம் எக்கச்சக்கமான கிளுகிளுப்பு ஏற்பட்டு விட்டது. "உனக்கு டான்ஸ் பிடிக்குமா?" என்றாள்.

"கொஞ்சம் கூடப் பிடிக்காது" என்று சொல்லி அவன் சிரித்தான். "ஆனால் நீ பிரமாதமாய் ஆடுகிறாய் என்று மட்டும் தெரிந்தது. என் தங்கை கூட அப்படித்தான் சொன்னாள்."

"உன் தங்கையும் நன்றாய்த்தான் டான்ஸ் ஆடினாள். திடீரென்று விட்டு விட்டாள்."

"அவள் உன் மாதிரி இல்லை. சரியான சோம்பேறி."

"அப்படியில்லை... டான்ஸ் கற்றுக் கொள்வது ரொம்பக் கஷ்டம். எனக்கு டான்ஸ் பிடித்திருக்கிறது. அதனால் தொடர்ந்து கற்றுக் கொள்கிறேன்."

"நீச்சல் கூட அப்படித்தான். நமக்குப் பிடித்திருந்தாலொழியக் கஷ்டம்," என்று பிலிப் குறுக்கிட்டுச் சொன்னான். "சரி, நாம் எல்லாரும் யூனியன் ஸ்ட்ரீட்டுக்குப் போனால் என்ன? அங்கே காரை நிறுத்தி விட்டுக் கொஞ்ச தூரம் நடக்கலாம். பிறகு காப்பி சாப்பிடலாம்."

"ஓ," என்றான் ஜேம்ஸ். க்ளோவும் உற்சாகமாக ஆமோதித்தாள். ஆலிஸனுக்கு மட்டும் சற்றுத் தயக்கமாக இருந்தது. யூனியன் ஸ்ட்ரீட்டுக்குப் போவதைப் பற்றி அதுவரை யாரும் பேசாமல் இருந்து விட்டு, இப்போது திடீரென்று சொல்கிறார்களே என்று நினைத்தாள். ஆனால் அதனால் என்ன? யூனியன் ஸ்ட்ரீட் அமைதியான இடம். அங்கே போவதால் குடி முழுகி விடாது. அங்கே போய்க் காப்பி சாப்பிடுவதிலும் ஒன்றும் ஆபத்து இல்லை...

"பதினொன்றரை மணிக்கு நான் வீடு திரும்பி விட வேண்டும். அவ்வளவுதான்," என்றாள். ஆனால் தான் கவலைப்படுவதாக அவர்களுக்குத் தோன்றி விடக் கூடாதென்று குரலை ஜாக்கிரதையாக அமைதிப்படுத்திக் கொண்டு சொன்னாள்.

"அப்புறம் என்ன? புறப்படலாம்," என்ற பிலிப், பில்லுடன் தாராளமாக டிப்ஸும் வைத்து விட்டு எழுந்து கொண்டான்.

ஓட்டல் வாசலில் அவனுடைய கார் நின்றிருந்தது. எல்லாரும் மறுபடி ஏறிக் கொண்டார்கள்.

"இது என் அம்மாவின் கார். எனக்கென்று ஒரு வண்டி இருக்கிறது. நான் வெளியே போவதென்றால் அதைத்தான் எடுத்துக் கொண்டு போக வேண்டும். ஆனால் அது ரொம்பக் கர்நாடகமான பழைய வண்டி. சனி ஞாயிறு விடுமுறைக்காக என் அம்மாவும் அப்பாவும் வெளியூர் போயிருக்கிறார்கள். அதனால் அம்மாவின் காரை எடுத்து வந்தேன். இது மெர்ஸிடிஸ் கார். வாங்கிப் பதினைந்து வருடமாகிறது," என்றான் பிலிப்.

கோல்டன் கேட் பாலத்தில் போய் உரிய கட்டணம் செலுத்திவிட்டு, முதலில் கிழக்குப் பாதையிலும், பிறகு தெற்குப் பாதையிலும் சென்று யூனியன் ஸ்ட்ரீட்டை அடைந்தார்கள். சுற்றிச் சுற்றித் தேடித்தான் காரை நிறுத்த இடம் கிடைத்தது.

கடைகளிலும் ரெஸ்டாரண்டுகளிலும் நல்ல கூட்டம். வேடிக்கை பார்த்தபடி சிரித்துப் பேசிக் கொண்டு நால்வரும் நடந்தார்கள். குளிர் இல்லாத அந்த இரவு நேரம் மிக இனிமையாக இருந்தது ஆலிஸனுக்கு.

பிலிப் அவள் தோளை அணைத்தவாறு நடந்தான். செப்டம்பர் மாதம் அவன் கல்லூரிக்குப் போகப் போகிறானாம். அதைப் பற்றி உற்சாகமாக விவரித்தான். "எனக்கு யேல் யூனிவர்ஸிடியில் சேர வேண்டும் என்று ஆசை. ஆனால் என் அப்பா அம்மாவுக்கு வயசாகிறது. என்னை ரொம்பத் தூரம் அனுப்பப் பிரியப்படவில்லை. நான் ஒரே பிள்ளையாச்சே! அதனால் பக்கத்து ஊரில் சேரச் சொல்லியிருக்கிறார்கள்" என்று சிரித்தவன், "செப்டம்பர் மாதம் நீ என் ஹாஸ்டலுக்கு வருகிறாயா? தமாஷாகப் பொழுது போகும்," என்றான்.

அந்த அழைப்பே ஆலிஸனுக்குக் கிளு



# யாரைப்போலப் பிறக்க ஆசை?

## எழுத்தாளர் இந்துமதி:

'எதிலும் உன்னை ஐக்கியப்படுத்திக் கொள்ளாமல், பார்வையாளனாக இருந்து பார்' என்று சொல்லுவார் தத்துவ ஞானி ஜே. கிருஷ்ணமூர்த்தி. அதைப்போல, எதிலுமே எமோஷனலாக இன்வால்வ் ஆகாமல் இருக்க நான் விரும்புகிறேன். ஆனால் அது எனக்கு சாத்தியப்படவில்லை.



அத்தகைய ஆத்ம ஞான நிலையில் வாழ்ந்தவர்களான ரமண மகரிஷி, காஞ்சி பரமாச்சாரியார் இருவரையும் குறிப்பிடலாம். எனக்கு மறுபிறவியிலாவது அவர்களைப்போல, ஆத்ம ஞான நிலையில் வாழும் ஒருவராய்ப் பிறக்க ஆசை!

பேட்டி: மௌலி





இவர்களைப் போலத்தான்

---

கிளுப்பாக இருந்தது. ஆனால் அவள் அப்படியெல்லாம் தனியே வெளியூர் போக வீட்டில் விட மாட்டார்கள். அதை நினைத்து, "சரிதான்!" என்று கேலியாகச் சிரித்தாள்.

"புரிகிறது. உன் வீட்டில் உன்னை அனுப்ப மாட்டார்கள்," என்றான் பிலிப். அவள் சொல்லாமலே பல விஷயங்களை அவன் புரிந்து கொள்கிறவனாக இருந்தான். அதனாலேயே அவனிடம் பேசப் பேச அவளுக்குப் பிரியம் அதிகரித்தது. ஒருமுறை அவன் அவளை மிகவும் நெருங்கி ஏதோ சொன்னபோது இருவர் உதடுகளும் கிட்டத்தட்ட உரசிக் கொண்டன. ஜேம்ஸும் க்ளோவும் அருகில் இருக்கிறார்கள் என்பதே மறந்து விட்ட மாதிரி இருந்தது அவர்களுக்கு.

ஜேம்ஸுக்கும் க்ளோவுக்கும் கூட அப்படித்தான். அவர்களுடைய உலகத்தில் அவர்கள் மெய்மறந்திருந்தார்கள்.

ரெஸ்டாரென்ட்டில் ஒயின் எதுவும் அவர்கள் சாப்பிடவில்லை. காப்பி மட்டுமே குடித்தார்கள். மணி பதினொன்று அடிக்க ஐந்து நிமிடம் இருந்தது.

வீட்டுக்குத் திரும்பத் தயாராக ஒவ்வொருவராய்க் காரில் ஏறிக் கொண்டார்கள். இந்த நேரத்தில் சாலைகளில் கூட்டம் குறைந்திருக்கும். அம்மாவுக்குக் கொடுத்த வாக்குத் தவறாமல் பதினொன்றரைக்குள் வீட்டை அடைந்து விட முடியும் என்று ஆலிஸன் நினைத்துக் கொண்டாள்.

காரில் பிலிப்பின் அருகே உட்கார்ந்து சீட் பெல்ட்டை மாட்டிக் கொண்டாள். "ரொம்ப ஜோராய்ப் பொழுதுபோயிற்று," என்றாள் மெல்லிய குரலில்.

"எனக்கும்தான்," என்றான் பிலிப்.

ஓரக் கண்ணால் அவனைப் பார்த்தாள் ஆலிஸன். பையனாக இல்லாமல் வயது வந்த வாலிபனாக அவன் தோற்றமளித்தான். சின்னப் பெண்ணான தன்னை இன்னொரு முறை இவன் வெளியே அழைத்துப் போவானா? அல்லது இந்த ஒரு தடவையோடு சரியா?

அவளால் ஊகிக்க முடியவில்லை. ஆனால் அவனுடன் நெருக்கமாகப் பழக வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது.

அவன் அமைதியாகவும் நிதானமாகவும் காரை ஓட்டினான். கோல்டன் கேட் பாலம் சமீபித்துக் கொண்டிருந்தது.

மனத்தை மயக்கும் இரவு நேரம். வானத்தில் அத்தனை நட்சத்திரங்களும் வெளியே வந்து கண்சிமிட்டின. விளக்குகள் வெகு பிரகாசமாக ஒளியை உமிழ்ந்தன. வெளிச்சத்தில் ஆற்று நீர் ஜொலித்தது. பாலத்தின் காற்று கதகதப்பாயும் மென்மையாயும் வீசியது. சான் பிரான்ஸிஸ்கோவின் வாடிக்கையான மூடுபனி அடியோடு மறைந்து விட்டது. இப்படியொரு இரவு வேளையை ஆலிஸன் அனுபவித்ததே இல்லை.

பாலத்தின் மீது கார் ஓடத் தொடங்கியது. "ரொம்பப் பிரமாதமாயிருக்கிறது," என்று தனக்குத் தானே பேசிக் கொள்கிற மாதிரி கிசுகிசுப்பான குரலில் சொன்னான்.

பின் ஸீட்டில் க்னோவும் ஜேம்ஸூம் ரகசியமாகச் சிரித்துக் கொண்டிருக்கும் ஒலி கேட்டது.

"இரண்டு பேரும் ஸீட் பெல்ட் மாட்டிக் கொண்டிருக்கிறீர்களா?" என்று பிலிப் ஸீரியஸாகக் கேட்டான்.

"நீ உன் வேலையைப் பாருப்பா!" என்று ஜேம்ஸ் சிரித்தான்.

"பெல்ட் போட்டுக் கொள்ளவில்லை என்றால் பாலத்தைத் தாண்டியதும் காரை 'நிறுத்தி விடுவேன்!" என்று மீண்டும் பிலிப் எச்சரித்தான். ஆனால் 'பக்கிள்' பொருத்திக் கொள்ளும் ஓசை எதுவும் கேட்கவில்லை. மாறாக நிசப்தம் நிலவியது. திரும்பிப் பார்க்க ஆலிஸனுக்குக் கூச்சமாக இருந்தது. பிலிப்பை நோக்கிப் புன்னகை செய்தாள்.

"நாளை ராத்திரி உனக்கு ஏதாவது வேலை இருக்கிறதா?" என்றான் பிலிப்.

"வந்து... தெரியாது... ஆனால் ஞாயிற்றுக் கிழமை ராத்திரிகளில் நான் வெளியே போக என் வீட்டில் அனுமதிப்பது கிடையாது...."

பதினைந்து வயதுதான் ஆவதால் வீட்டில் தனக்குக் கட்டுப்பாடுகள் உண்டு என்பதை அவள் மறைக்கத் தயாராயில்லை. அவனிடம் நேர்மையாகப் பேச வேண்டும் என்றே தோன்றியது.

வீட்டுக்கு வந்து அம்மா அப்பாவுடன் பிலிப் பேசிப் பழகட்டும் முதலில். பிறகு அவர்களே அனுமதிப்பார்கள் அவனுடன் வெளியே செல்ல.

அவள் வயது என்னவென்று பிலிப்புக்குத் தெரியும். ஆகவே அவளுக்குள்ள கட்டுப்பாடுகளைப் புரிந்து கொண்டான். எனினும் அவளுடைய அழகும் புத்திசாலித்தனமும் அவனைக் கவர்ந்தன. அவளுடைய நட்பை மேலும் மேலும் பெற வேண்டுமென்று அவன் விரும்பினான்.

"நாளை பிற்பகல் எனக்கு நீச்சல் வகுப்பு இருக்கிறது. அது முடிந்ததும், உனக்கு ஆட்சேபம் இல்லையென்றால் உன் வீட்டுக்கு வருகிறேன். உன் அப்பா அம்மாவைப் பார்த்த மாதிரி இருக்கும். என்ன சொல்கிறாய்?" என்றான்.

"ஓ! அருமையான ஐடியா!" என்று ஆலிஸன் உற்சாகமாய்க் கூறினாள். "நிச்சயமாய் வருவாயா?"

ஆமாம் என்கிற மாதிரி தலையை அசைத்து ஓரக்கண்ணால் அவளைப் பார்த்தான் பிலிப். அந்தப் பார்வையில் ஆலிஸன் உருகிப் போனாள்.

"இன்றைக்கு என்னோடு வெளியே போவதாக உன் வீட்டில் சொல்லவில்லை என்று நினைக்கிறேன். சொன்னாயா என்ன?"

"ஐயோ, சொல்லவில்லை!" என்றாள் ஆலிஸன். "என் அம்மாவுக்கும் அப்பாவுக்கும் தெரிந்தால் என்னைக் கொலையே பண்ணி விடுவார்கள்!"

"என் அம்மாவும்தான்! அவளுடைய காரை நான் திருட்டுத்தனமாக எடுத்து வந்தது தெரிந்தால்...!" என்றான் பிலிப்.

இருவரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்; களங்கமற்ற சந்தோஷத்துடன். ஜாலியாகப் பொழுது போக்கினோம் என்பதைத் தவிர எந்தத் தப்பும் பண்ணிவிடவில்லை என்பதை எண்ணியபோது அவர்கள் மனம் சுமையற்று லேசாக இருந்தது.

பின் ஸீட்டில ஜேம்ஸூம் க்னோவும் கிசுகிசுவென்று சிரிப்பதும் தாழ்ந்த குரலில் பேசுவதுமாக இருந்தார்கள்.

ஆலிஸனைத் தன் பக்கம் மெல்ல இழுத்துக் கொண்டான் பிலிப். ஸீட் பெல்ட் இறுக்கமாயிருந்ததால் அதைக் கழற்றி விட முயன்றாள் ஆலிஸன். வேண்டாமென்று தடுத்து விட்டு அவளையே பார்த்தான் பிலிப்.

அவன் பார்வை பாதையிலிருந்து விலகி, அவள் முகத்தின் மீது லயித்தது.

ஒரு வினாடி - ஒரே ஒரு வினாடி நேரம்தான். அதற்குள் எதிரே -

(தொடரும்)

**ஞாபகமிருக்கு, இல்லீங்களா?**

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டிக்கு கதை அனுப்ப லாஸ்ட் டேட் ஜூன் 15. ஃபுல் டீடெயில்ஸ் வேணும்னா அடுத்த இஷ்யூ பாருங்க.



# சங்கீதாவுக்கு ஒரு சினிமா குவிஸ்!

சினிமாவில் நடிக்கவரும் ஒரு புதுமுகம், திரையுலகைப் பற்றி எந்த அளவு அறிந்திருக்கிறார்? குறைந்தபட்சம் பத்திரிகைகளில் அடிபடும் செய்திகளையாவது தெரிந்து வைத்திருக்கிறாரா? சந்தேகத்தைப் போக்கிக் கொள்ள விறுவிறுவென்று சங்கீதா-IIIயை அணுகினோம். புண்ணியவதி படத்தில் அறிமுக ஹீரோயின். (ரஜினியோடு "என் கண்மணி உன் காதலி" பாடிய சங்கீதா இன்னமும் அம்மா வேடத்தில் தலைகாட்டிக் கொண்டிருக்க, "அவருக்கும் எனக்கும் எந்தத் தொடர்பும் இல்லை" என்று பார்த்திபன் சத்தியம் செய்யும் 'சரிகமபதநி' சங்கீதா வேறு இருப்பதால் இவர் சங்கீதா-III)

"ஷங்கரின் தற்போதைய படத்தின் ஹீரோயின் யார்?" என்று திரையுலக ஜி.கே. கேள்விகளில் முதலாவதை நாம் கேட்டு முடிக்கும் முன்பே பட்டென்று பதில் வந்தது. "ஐஸ்வர்யா ராய். கொள்ளை அழகு அவங்க. அதுவும் கண்கள் ரொம்ப அருமை. இருவர் படத்திலே பிரமாதமா நடிச்சிருந்தாங்க."

"ஷ்யாம் பெனகல் பற்றி நீங்க கேள்விப்பட்டிருக்கலாம்"-இப்படி ஒரு பீடிகையைப் போட்ட உடனேயே, கண்களை எல்லா திசைகளிலும் உருள விட்டு சங்கடமாகச் சிரித்தார். புரிந்து போயிற்று. உறுதிசெய்யும் விதமாக "யார் அவரு?" என்றார். "மேக்கிங் ஆஃப் எ மகாத்மா" என்று அவர் காந்தி பற்றி எடுத்த படத்தைப் பற்றிக் கேட்க நினைத்ததை அப்படியே விழுங்கிக் கொண்டோம்.

"சென்ற ஆண்டின் சிறந்த படமாக தேசிய விருது பெற்ற படம் எது?" - கேள்வியை முடித்த பத்து நொடிகளுக்குப் பிறகு "அது ஒரு மலையாளப் படம்" என்று ஒரு க்ளூ கொடுத்தோம். உடனே பிரகாசமான முகத்துடன் பளிச் சென்று பதில் வந்தது - "எனக்கு மலையாளப் படத்தைப் பற்றியெல்லாம் எதுவும் தெரியாது சார்."

"அவரைத் தொட்டுப் பார்க்க வேண்டும் என்று ஆசையாக இருக்கிறது" - தமிழ்த் திரையுலகத்தைச் சேர்ந்த ஒருவரைப் பற்றி சமீபத்திய பேட்டி ஒன்றில் ஷாருக்கான் இப்படிக் குறிப்பிட்டிருக்கிறார். யார் அவர்?"

குஷ்பூ என்றார். தவறென்று அறிந்ததும் உதடுகளைப் பிதுக்கினார். முந்தைய கேள்விக்கு விடையாக "கதா புருஷன்" என்று கூறியதைப் போல், இந்தக் கேள்விக்கு விடை "கமல்ஹாசன்" என்பதையும் குறிப்பிட்டோம்.

"கே. பாலசந்தர் எடுத்துக் கொண்டிருக்கும் படத்தின் பெயர் என்ன?"

"விடுகதை. கே. பி. சார் தயாரிப்பிலே அகத்தியன் இயக்கும் படம்" என்றார். நாம் கேட்ட கேள்வியில்தான் குழப்பமோ?

"பாலசந்தர் இயக்கிக் கொண்டிருக்கும் படம் எது?" என்று கேட்டுவிட்டு (சங்கீதாவின் மௌனத்தின் காரணமாக) "தில்லானா தில்லானா" என்று நாமே பதிலளித்தோம்.

"செந்தில்குமார்" என்ற சரியான விடையை எதிர்பார்த்து, "அருணாச்சலம் படத்தின் ஒளிப்பதிவாளர்?" என்றோம். "இசையமைப்பாளர் தேவான்னு தெரியும். ஒளிப்பதிவாளர்...? தங்கர் பச்சான்." - சொதப்பல்ஸ்!

"காதல் தேசம் தபு யாரைத் திருமணம் செய்து கொள்ள இருக்கிறார்?"

"நாகார்ஜுனாவையா? இல்லையே. அவர் குஷ்பூ - சே. சே. குஷ்பூ - கந்தராச்சே." தன் முயற்சியில் தோற்றுவிட்டு வருத்தப்பட்டவரிடம் "சஜித் நதியத்வாலா என்ற இந்திப் பட தயாரிப்பாளர்" என்றோம். "நடிகர் இல்லையா?" என்றார் சற்றே அசுவாரசியமாக.

நடிகர் சங்கத்திலிருந்து சமீபத்தில் விலகிய நடிகர் யார்? அகிரா குரசேவா எந்த நாட்டு டைரக்டர்? என்ற கேள்விகளுக்கு தலையை மட்டும் இடவலமாக ஆட்டினார். (வி.கே. ராமசாமி, ஜப்பான்).

ஸ்ரீதேவி நடித்து, சென்னையில் லேட்டஸ்டாக ரிலீஸாகியிருக்கும் படம் எது என்று கேட்டு முடிப்பதற்குள் "ஜுடாயி. அவரது கணவர் போனி கபூர் இயக்கியது. ஜோடி அனில்கபூர்" என்றார் பட்டபட் என்று.

"எந்தத் துறையில் ஆர்வத்தோடு நுழைகிறோமோ அதைப் பற்றி அறிந்திருக்க வேண்டியது அவசியம்," "ஒரு நடிகைக்கு நடிப்புத் திறமையும் தோற்றமும் இருந்தால் போதும். மற்றவை அனாவசியம். இரண்டில் எது சரி?" சங்கீதாவிடமே கேட்டோம்.

"ரொம்ப பிஸியான நடிகைகளுக்கு இதையெல்லாம் தெரிஞ்சுக்க நேரமிருக்காது. என்னை மாதிரி வளரும் நடிகைகள் பத்திரிகைகள், டீவி மூலமா இதைப் பற்றி எல்லாம் தெரிஞ்சிக்கறது நல்லது. நீங்க கேட்ட சில கேள்விகளுக்கு எனக்கு பதில் தெரியும். ஆனா டக்குனு ஞாபகத்துக்கு வரலே."

"அதனாலென்ன, ஆல் தி பெஸ்ட்!" என்று வாழ்த்தி விட்டு நடையைக் கட்டினோம்!

- ஜி.எஸ்.எஸ்.

அட்டை வண்ணப்படம் : பிரவீண்குமார்

கடலூர் ஜெயிலில் இருக்கிறவர்களுக்கு நாகராஜ் என்றால் தெரியும். மாதாமாதம் விசாரணைக்காக சைதாப்பேட்டை கோர்ட்டுக்குக் கொண்டு வரப்படுகிற கைதி. நாகராஜின் பூர்வீகம் மைலாப்பூர். அந்தப் பகுதியில் 'டப்ஸா கண்ணு' என்று அவருக்கு ஒரு செல்லப் பெயர் உண்டு.

மாதா மாதம் சைதாப்பேட்டை கோர்ட்டுக்கு வருகிறவர், இரண்டு கான்ஸ்டபிள்கள் 'துணையுடன்' ஓர் ஆட்டோவில் மந்தைவெளி மார்க்கெட்டில் வலம் வருவது வழக்கம். கடைகள் வாசலில் ஆட்டோ நிற்க, கான்ஸ்டபிள்கள் இறங்கி உள்ளே சென்று, "ஐயா வந்திருக்காரு" என்று பவ்யமாக அறிவிக்க, யாரோ உயர் போலீஸ் அதிகாரி போலும் என்று கடைக்காரர் பரபரத்து ஓடி வருவார்.

ஆட்டோவில் ஒயிலாக அமர்ந்திருக்கும் 'டப்ஸா கண்ணு', "என்னய்யா, ஜெயிலுக்குப் பூட்டேன். இனி வரமாட்டேன்னு பார்த்தியா. ஒழுங்கா மாமூலை எடு!'' என்று மிரட்டி, வாங்கிப் போவது வழக்கம்.

இன்று நேற்றல்ல; கடந்த மூன்று மாதங்களாக இதுதான் நிலை என்கிறார்கள், மந்தைவெளி வியாபாரிகள்.

## அதிர்ச்சி ரிப்போர்ட்!

களஞ்சியம் என்றொரு ஆசாமி. அரசியல் பெரும் புள்ளிகளோடு மிக நெருக்கமானவன். சென்ற அம்மா ஆட்சியில் இவனது லூட்டிகளுக்கு அளவே இல்லை. 'சின்னம்மாவோடு வெகு நெருக்கம்' என்று பயத்துடன் குறிப்பிடுகிறார்கள் மக்கள். எப்போதும் போலீஸ் உயர் அதிகாரி போல மிடுக்கான காக்கி உடையில், ஜீப்பில் வலம் வந்து 'வேட்டை'யாடுவது இவர் வழக்கம்.

"ஆட்சி மாறியதும் கிரிமினல்களும் ரவுடிகளும் சட்டென்று ஆளுங்கட்சிக்கு மாறி, ஆளுங்கட்சிப் பிரமுகர்களுடன் நெருக்கமாகி விட்டார்கள்" என்றார் ஒரு போலீஸ் அதிகாரி.

"பெரும்பாலும் ரவுடிகளை ஊட்டி வளர்ப்பவர்கள் அந்தந்தப் பகுதி வட்டிக் கடைக்காரர்கள்தாம். இவர்கள் தம் எதிரிகளை வீழ்த்த, ரவுடிகளைக் கருவிகளாக உபயோகிக்கிறார்கள். அதுமட்டுமல்ல; சட்டமன்ற உறுப்பினர்கள் பலரிடமும் இத்தகைய ரவுடிகள் அடைக்கலமாகி இருக்கிறார்கள். தென் சென்னை தி.மு.க. எம்.எல்.ஏ. ஒருவரிடமும் மத்திய சென்னை த.மா.கா. எம்.எல்.ஏ. ஒருவரிடமும் கணிசமாக ரவுடிகள் பட்டாளம் உள்ளது. இவர்களது அராஜகத்தையும் கட்டைப் பஞ்சாயத்தையும் தட்டிக் கேட்க ஆளில்லை" என்றார் ஒரு சமூக சேவகர்.

வடசென்னையைச் சேர்ந்த பாக்ஸர் வடிவேலு இப்போது தி.மு.க. விசுவாசி ஆகி விட்டார்! கேட்டால், "என் குடும்பமே எப்போதும் தி.மு.க. ஆதரவுக் குடும்பம்தான்" என்கிறாராம். நொச்சிக்குப்பம், நடுக்குப்பம் பகுதிகளில் முன்பு 'வீரமணி' என்றாலே மக்கள் நடுநடுங்குவார்கள். இப்போது வீரமணியின் இடத்தைப் பிடித்திருப்பவர் காமராஜ். மெரீனா கடற்கரைப் பகுதியில் இவரது ஆட்களின் கைவரிசை காணக் கிடைக்கும். செயின், வாட்ச், பர்ஸ் என்று பறிகொடுத்தவர்களின் பட்டியல், அனுமார் வால் நீளம்!



ஆமாம், ஆசைத்தம்பி, கபிலன் போன்ற பிரபல ரவுடிகள் சுட்டுக் கொல்லப்பட்டதும், குண்டர் தடுப்புச் சட்டத்தின் கீழ் பலர் கைதானதும் சென்னையில் ரவுடிகள் ராஜ்ஜியம் நிர்மூலமாகி விட்டதாகச் சொல்லப்படுவது பொய்யா?

தென்சென்னைக்குட்பட்ட சில போலீஸ் அதிகாரிகளிடம் இது குறித்துப் பேசினோம்.

"இப்போதெல்லாம் ரவுடிகள் அட்டகாசம் குறைந்து விட்டது என்பது உண்மை. ஆனால் ஒயிட் காலர் கிரிமினல்கள் எனப்படும் கண்ணியவான் போர்வையில் கடைந்தெடுத்த அயோக்கியர்களின் நடமாட்டம்தான் அதிகமாகி விட்டது" என்று அதிர்ச்சித் தகவல் தந்தார்கள்.

ஒயிட் காலர் கிரிமினல்ஸ்?

"அதாவது, படித்தவர்கள், உயர்ந்த பதவியில் இருப்பவர்கள், டாக்டர்கள், இஞ்சினீயர்கள், வழக்கறிஞர்கள், தொழிலதிபர்கள் போன்றோர், மிக லாகவமாக சட்டத்தின் ஓட்டைகளில் புகுந்து செய்கிற அயோக்கியத்தனங்கள் சொல்லி மாளாது. இவர்களைத்தான்

# சென்னையில் 'நவீன' ரவுடி ராஜ்ஜியம்!

ஒயிட் காலர் கிரிமினல்கள் என்போம்" என்றார் ஒரு போலீஸ் அதிகாரி.

"உண்மையில் குண்டர்களை அடக்குவது எங்களுக்குப் பெரிய விஷயமல்ல. நாலு தட்டு தட்டி அடக்கி விடுவோம். ஆனால் கூர்மதி படைத்த இந்த நவீன கிரிமினல்களைச் சமாளிப்பதுதான் பெரும்பாடாக இருக்கிறது.

"பாருங்கள், பைனான்ஸ் கம்பெனி நடத்தியவர்களில் யாரும் படிக்காத பாமரர்களில்லை. சீட்டுக் கம்பெனி நடத்தி, மோசடி செய்தவர்கள், கவர்ச்சியான விளம்பரங்கள் காட்டி, மட்டமான பொருட்களைக் குறைந்த விலையில் தள்ளி, மக்களை ஏமாற்றுபவர்கள் என்று பல உதாரணங்கள் காட்ட முடியும்.

"ஒரு பிரபல கம்ப்யூட்டர் நிறுவனம், மிகக் குறைந்த விலைக்கு கம்ப்யூட்டர்கள் தருவதாக அறி வித்தது. ஆங்கில தினசரிகளில் விளம்பரம் வரவே, ஆயிரக்கணக்கானோர் மயங்கி, பதிவு செய்து, முன் பணம் கட்டி விட்டார்கள். முப்பது நாட்களில் கம்ப்யூட்டர் டெலிவரி செய்வதாகச் சொன்ன நிறுவனம், செய்யவே இல்லை. ஆறு மாதங்கள் ஆகிவிட்டன. கேட்டால், 'கொஞ்சம் பொறுங்கள்' என்று ஒரே பாட்டைப் பாடுகிறார்கள். இப்படி கலெக்ஷன் செய்யப்பட்ட கோடிக் கணக்கான பணம் வட்டி இல்லாமல் திரட்டிய 'முதல்' ஆகிறது அல்லவா? இது அயோக்கியத் தனமல்லாமல் வேறென்ன?

"சமீபத்தில் போலி சர்ட்டிபிகேட்டுகள் அச்சடித்து, கோடிக்கணக்கில் நடைபெற்ற ஒரு மோசடி மூலம் ஒட்டுமொத்த ஷேர் மார்க்கெட்டும் டல்லாகி விட்டது. ஸ்டாண்டர்ட் சார்டர்ட் பாங்கில் ஒருவர், போலி சர்ட்டிபிகேட்டுகளைக் காட்டி ஐம்பது லட்சம் அபேஸ் செய்துள்ளார்.

"வங்கிக் கணக்கில் பணம் இல்லாமல் செக் தருவது என்பது சர்வசாதாரணமாகி விட்டது. தினமும் இது விஷயத்தில் ஏராள புகார்கள் வந்த வண்ணம் இருக்கின்றன" என்று நீளமாகப் புலம்புகிறார்கள் போலீஸ் அதிகாரிகள்.

**பெ**ரிய மனிதர் போர்வையில் நடமாடும் இத்தகைய கிரிமினல்களின் இன்னொரு அட்டகாசத்தைச் சொன்னார் வேறொரு போலீஸ் அதிகாரி. "பெசன்ட் நகர் கடற்கரைக்கு இரவு ஏழரைக்கு வந்து பாருங்கள். மாருதி, டாட்டா சியரா, பியட், ஃபோர்டு கார்களில் வந்து, கார் விளக்குகளை அணைத்து விட்டு, உள்ளே குடித்து, கும்மாளமிட்டுக் கொண்டிருப்பார்கள்.

"ஐயா இது பொது இடம். மக்கள் வசிக்கிற பகுதி. இதை அனுமதிக்க முடியாது என்று சொல்லிப் பார்த்தால் எடுபடவே படாது! துணிந்து, கேஸ் பதிவு செய்து கூட்டிப் போனால், வழியிலேயே 'செல்போன்' மூலம் 'மேலிடங்களில்' பேசி சுலபமாகத் தப்பித்து விடுவார்கள்! பத்து கேஸ் பதிவு செய்தால் இரண்டு கூடத் தேறாது!" என்று வருத்தப்பட்டார்.

அந்த போலீஸ் அதிகாரி ஒரு சுவாரஸ்யமான சம்பவம் சொன்னார்.

ஒரு நோ பார்க்கிங் ஏரியாவில் ஒரு ஸ்கூட்டர் நின்று கொண்டிருந்ததாம். இவர் அங்கு போனபோது அதன் உரிமையாளர் அருகில் இல்லை. வேறொரு நபர், "நோ பார்க்கிங்கில் வண்டி நிற்கிறது. ஒரு போலீஸ் அதிகாரியான நீங்கள் பார்த்துக் கொண்டு நிற்கலாமா?" என்று கேட்டாராம்.

ஆனால் உரிமையாளர் இல்லாமல் எப்படி அப்புறப்படுத்துவது?

"நீங்கள் இதை உடனே அகற்றாவிட்டால் பலர் வந்து இங்கே பார்க் பண்ணி விடுவார்கள்" என்று அவர் மேலும் வாதிட, வேறு வழியில்லாமல் கான்ஸ்டபிள் உதவியுடன் ஸ்கூட்டரை அப்புறப்படுத்தியிருக்கிறார்.

அந்தச் சமயம் பார்த்து வேறொருவர் வந்து, "நீங்கள் எப்படி உரிமையாளர் இல்லாத நேரத்தில் இதை அப்புறப்படுத்தலாம்? உங்களுக்கு என்ன அதிகாரம் உள்ளது?" என்று மிரட்ட,

"நீங்கள் யார்? இது உங்கள் ஸ்கூட்டரா?"

"நான் யாராயிருந்தாலென்ன? நீங்கள் சட்ட விரோதமாகச் செயல்படுகிறீர்கள். இதனால் சம்பந்தப்பட்டவர் தம் வாகனத்தைத் தேடி மன உளைச்சலுக்கு உள்ளாவார்!" என்று வாதிட்டாராம்!

"ஆக, எப்படியும் தம் சட்ட அறிவால், புத்தி கூர்மையால் போலீஸாரை ஏமாற்றி இந்த கிரிமினல்கள் தப்பித்து விடுகிறார்கள். சொல்லப்போனால் பேட்டை ரவுடிகளைவிட இவர்களது அராஜகம்தான் தாங்கமுடியாததாக இருக்கிறது!" என்று வருத்தத்துடன் குறிப்பிட்டார் அந்த போலீஸ் அதிகாரி!

**— சாவித்திரி கண்ணன்**



# P. R. ஜுவல்லரியில்



**ராசிக்கேற்ற கல் மோதிரம் வாங்கி அணிந்து பயன்பெறுங்கள்**

| | |
|---|---|
| 1. மேஷ ராசி பவழம் | |
| 2. ரிஷப ராசி வைரம் | |
| 3. மிதுன ராசி மரகதபச்சை | |
| 4. கடக ராசி முத்து | |
| 5. சிம்ம ராசி மாணிக்கம் | |
| 6. கன்னி ராசி மரகதபச்சை | |
| 7. துலாம் ராசி வைரம் | |
| 8. விருச்சிக ராசி பவழம் | |
| 9. தனுசு ராசி புஷ்பராகம் | |
| 10. மகர ராசி நீலம் | |
| 11. கும்ப ராசி நீலம் | |
| 12. மீன ராசி புஷ்பராகம் | |

எங்களிடம் ராசிக் கல் மோதிரம் வாங்கி பயன பெறும் அனைவருக்கும் எங்களது வாழ்த்துக்கள்.

12-ம் ஆண்டை நோக்கி சென்று கொண்டு இருக்கும் நாங்கள் வைரம் தவிர ஒவ்வொரு ராசிக்கும் ஒரிஜினல் கல் வைத்த வெள்ளி மோதிரம் ரூ. 400/-க்கு தருகிறோம்.

ரூ. 250/-க்கு கார்னெட் மோதிரம் வாங்கி அணிந்தால் செல்வ வளம் பெருகும். தங்க நகைகள், வெள்ளி பாத்திரங்கள், கொலுசுகள், ராசிக்கல் மோதி... வாங்க சிறந்த இடம்.

**P.R. JEWELLERY**

GOLD • SILVER • DIAMOND & BIRTH STONES

102, USMAN ROAD, T. NAGAR, MADRAS 600 017

TUESDAY HOLIDAY. PH: 434 4442

• தபால் எழுதினால் முழுவிபர பாம்லட் இலவசமாக அனுப்புகிறோம்.

**தரத்திற்கு உத்திரவாதம்**

| நியூமராலஜிபடி கல் மோதிரங்கள் |
|---|
| March 21 to April 20<br>Diamond (or) Ruby |
| April 21 to May 21<br>Emarald (or) Moonstone |
| May 22 to June 21<br>Pusparagam (or) Topaz |
| June 22 to July 23<br>Ruby (or) Pearl |
| July 24 to August 23<br>Diamond (or) Ruby |
| August 24 to September 23<br>Sapphire (or) Coral |
| September 24 to October 23<br>OPAL (or) Sapphire |
| October 24 to November 22<br>Topaz (or) Pusparagam |
| November 23 to December 21<br>Amethyst (or) Tarquise |
| December 22 to January 20<br>Garnet (or) Gomeydhagam |
| January 21 to February 19<br>Amethyst (or) Pearl |
| February 20 to March 20<br>Emarald (or) Aquamarine |

**ஒவ்வொரு ராசிக்கும் மோதிரம் ரூ 400**

**ஹைதராபாத் முத்து 10 கிராம், ஒரு மாலைக்கு ரூ 200**

வைரம் தவிர அனைத்து கல் வைத்த வெள்ளி மோதிரம் ஒன்று ரூ. 400/-க்கு கிடைக்கும். தபால் செலவு ரூ. 25 சேர்த்து ரூ. **425** க்கு D.D. (or) M.O அனுப்பினால் பதிவு தபாலில் அனுப்புகிறோம். **செப்புகம்பியில் அளவு எடுத்து அனுப்பவும்.**

புத்தம் புதிய பொலிவுடன்

மே '97 முதல் வெளிவருகிறது



# கோபுர தரிசனம் ஆன்மிக மாதஇதழ்

ரா.கணபதி எழுதும்

## மதுரம், மதுரம் மஹா பெரியவாள்



**அனைத்துத் துறைகளிலும் நல்லியல்புகளிலும் இமயமாக விளங்கிய ஸ்ரீ காஞ்சி மஹாபெரியவாளின் அவ்வித இனிமைகளுக்குச் சான்றுகள் வழங்கும் தொடர்!**

**(ஓவியர் வினு அவர்களின் கைவண்ணத்துடன்)**

விலை ரூ.10

மற்றும் பல்வேறு புதிய பகுதிகளுடனும், அதிகரிக்கப்பட்ட பக்கங்களுடனும் வெளிவருகிறது

*கவி, நியாய - மீமாம்ஸா - சிரோமணி, திருவெண்காடு டி.கே.முத்துஸ்வாமி சாஸ்திரிகள் எழுதிய*

'தசமஹாவித்யா' புத்தகம் வேண்டுவோர் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

*கோபுரதரிசனம், 1032, 38வது குறுக்குத்தெரு, திருவள்ளுவர்நகர், திருவான்மியூர், சென்னை-41. போன்: 490 0303; 490 06 03*

# ஏழு மெடல் தமிழுக்கு; இன்னும் ஒன்று இனிமைக்கு...!

"எனக்கு அது ரொம்பவும் வித்தியாச மான முதல் அனுபவம். அத்தனை காமிராக் களின் பிளாஷ்களும் என் மீது ஏக காலத்தில் மின்னிட, மேடையை விட்டுக் கீழே இறங்கி யதும் அத்தனை பேரும் சூழ்ந்து நின்று வாழ்த் திட- நான் கூச்சத்தால் நெளிந்து போனேன்."

இதைச் சொல்கிற போதும் நிர்மலாவுக்குக் கூச்சம் குறையவில்லை.

சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் எம்.ஏ. பட்டப் படிப்பில் முதல் மாணவியாக ஏழு பரிசுகளைப் பெற்ற காட்சி நாளிதழ்களில் புகைப்படமாக வந்து நிர்மலாவை இப்போது கல்வியில் ஒரு கதாநாயகியாக ஆக்கி விட்டிருக் கிறது.

இதுவரை தமிழில் யாரும் ஏழு பரிசுகளைப் பெற்றிருப்பதாகத் தெரியவில்லை.

போலித்தனமில்லாமல் பேசுவதற்காகவும் நிர்மலாவுக்கு இன்னொரு பரிசு தரலாம்.

"ஆரம்பமுதலே ஏதோ தமிழ் மீது நான் கொண்டிருந்த காதலால்தான் பட்டப் படிப்பில் தமிழ் எடுத்தேன் என்றால் நான் பொய் சொல் கிறேன் என்று அர்த்தம். நான் வந்தவாசியைச் சேர்ந்தவள். ப்ளஸ் டூவில் முதல் குரூப். பத்தாவது வரை தமிழ் மீடியம். ப்ளஸ் ஒன் படிக்க சென்னை வந்து சரோஜினி வரதப்பன் ஹையர் செகண்டரியில் ஆங்கில மீடியத்தில் சேர்ந்தபோது குழம்பியே போனேன். அவ்வளவு சீக்கிரம் தமிழ் மீடியத்தி லிருந்து ஆங்கிலத்துக்கு என்னால் தாவ முடியவில்லை. எனவே பட்டப் படிப்பில் தமிழுக்கு விண்ணப்பித்தால் கிடைக்கும் என்பதாலேயே பி.ஏ. தமிழ் விண்ணப் பித்தேன். எளிதாக சீட்டும் கிடைத்தது. இதுதான் உண்மை."

பி.ஏ. படிக்கும் போது வகுப்பில் முதல் ராங்க்



*அம்மாவுடன்



• நிர்மலா

இரு பக்கச் சிறுகதைப் போட்டியில் தேர்வான இரண்டாவது கதை தவிர்க்க முடியாத காரணங்களால் இந்த இதழில் இடம் பெறவில்லை.
— ஆர்.



''அம்மா! கல்யாணத்துக்குப் பிறகு நான் அவருக்கு அடங்கித்தான் நடக்க வேண்டுமாம்! கண்டிஷனா சொல்றார்!''

''அடக் கடவுளே! அப்படிப்பட்டவனையா நீ காதலிச்சு கல்யாணமும் பண்ணிக்கப் போறே!''

''நிச்சயமா! தன் எண்ணம் எவ்வளவு தப்பானதுன்னு அவருக்குப் புரிய வைக்க வேண்டாமா?''

– ''பிரெஞ்சு நகைச் சுவை'' நூலிலிருந்து, புத்தனாம்பட்டி சி. மணி

வாங்க ஆரம்பித்ததும்தான் நிர்மலாவுக்கு தமிழ் மீது உண்மையிலேயே காதல் ஏற்பட்டது.

செல்லம்மாள் மகளிர் கல்லூரியில் செல்லப் பெண்ணாக இந்த தமிழ் படிக்கும் மாணவி மாறிப் போனார்!

அதே கல்லூரியில் எம்.ஏ. படித்தார். இப்போது கழுத்து நிறைய மெடல்கள்!

பக்தி இலக்கியத்திலும், புதுக்கவிதையிலும் நிர்மலாவுக்கு அளவு கடந்த ஈடுபாடு.

**எம்**.ஏ. பட்டத்தைப் பெருமையோடு வாங்கியாயிற்று. பிறகு?

''மீனாட்சி கல்லூரியில் எம்ஃபில் செய்கிறேன். செல்லம்மாவில் அந்தப் படிப்பு இல்லை. இருந்தால் அங்கேதான் படித்திருப்பேன். முதல்வரும் சரி, பிரபாகரி மேடம் தலைமையிலான தமிழ்ப் பேராசிரியைகளும் சரி, என் மீது காட்டும் அன்புக்கு நான் நிரந்தர அடிமையாகிப் போனவள்.''

எம்ஃபில்லுக்கு இவர் தேர்ந்தெடுத்திருக்கும் தலைப்பு ரொம்ப வித்தியாசம்.

''வார மலர் கவிதைகளில் வாழ்க்கைச் சிந்தனைகள் (தினமலர்– 1991-95)''

தன் ஆராய்ச்சிக்காக நிர்மலா செய்த முதல் வேலை– தினமலர் அலுவலகம் போய் ஐந்து வருட வாரமலர்களையெல்லாம் தேடிப் பிடித்து ஜெராக்ஸ் எடுத்து வந்ததுதான்.

இதற்கிடையில் ஓசூரில் டி.வி.எஸ். அகாடமியில் நிர்மலாவுக்கு தமிழாசிரியை வேலை கிடைத்திருக்கிறது.

ஆய்வுக் கட்டுரையை எழுதியபடி ஆசிரியைப் பணியையும் பார்க்கப் போகிறார்.

சரி, எம்ஃபில்லுக்குப் பின்?

''பி.எச்டி பண்ணுவேன். தலைசிறந்த தமிழ்ப் பேராசிரியையாக வர வேண்டும் என்பது இலட்சியம்.''

**நி**ர்மலா சொல்லும் சில சங்கதிகள் 'இப்படியும் ஒரு கல்லூரிப் பெண்ணா?' என்று வியக்க வைக்கின்றன.

''அப்பா அம்மா இல்லாமல் தனியே எங்கும் போனதில்லை. எம்ஃபில் சேர்ந்த பின்புதான் இப்போது கொஞ்சம் கொஞ்சம் வெளியே போகிறேன். தோழிகளோடு சேர்ந்து பார்த்த ஒரே படம்: கருத்தம்மா! அதுகூட எம்.ஏவில் 'இதழியல்' பாடம் ஒன்று உண்டு. அதில் படம் பார்த்துவிட்டு ஆசிரியைகளுடன் விவாதிப்பதற்காக ஒரு பகுதி உண்டு. அதற்காகப் போனதுதான்.''

எங்கும் தமிழ் எதிலும் தமிழ்.. பெயர்ப் பலகைகளைத் தமிழில் எழுத வேண்டும் போன்ற தமிழ்க்குடிமகன் அவர்களின் நடவடிக்கைகளைப் பற்றி இந்த தங்கப் பதக்க தமிழ் மாணவி என்ன நினைக்கிறார்?

''நல்லதுதான். ஆனால் சில சமயம் மக்கள் சிரமப்படுவார்களோ என்று பயமாகவும் இருக்கிறது. ஒரு இடத்தில் காப்பி கடைக்கு 'குழம்பியகம்' என்று போர்டு பார்த்தேன். குழம்பிப் போக வாய்ப்புண்டு.''

குழப்பமில்லாத சிந்தனை!

— ராணிமைந்தன்

படங்கள் : ஸ்ரீதர்

திருப்பதிக்கு லட்டு!

# "நான் ஜோதிடராவேன் என்று எந்த ஜோதிடரும் சொன்னதில்லை!"

**ஊருக்கெல்லாம் ஜோதிடம் சொல்லும் ஜோதிடர்கள் தங்களுக்காக யாரிடம் போய் ஜோதிடம் பார்ப்பார்கள்? ஜோதிடர் தஞ்சை பரத்வாஜைச் சந்தித்துக் கேட்டோம்....**

"என்ன இப்படிக் கேட்டு விட்டீர்கள்? என்னுடைய ஜாதகமாகட்டும், கைரேகையாகட்டும் - எதையுமே மற்ற ஜோதிடர்களிடம் போய்க் காட்ட வேண்டிய அவசியமே இல்லை. எனக்கு நானேதான் பார்த்துக் கொள்வேன்!"

"உங்கள் குடும்பத்துக்கு?"

"நானேதான். ஒருவர் எப்படி ஜோதிடர் ஆகிறார் தெரியுமா? முதலில் தனக்குத்தானே பார்த்துப் பார்த்து பலன்களெல்லாம் சரியாகப் பலிக்கிறதா என்று சுயபரிசோதனை செய்து பார்த்துக் கொள்கிறார். பிறகு அவர் குடும்பத்துக்கு. இப்படிப் பார்த்துப் பலன்கள் சரியாக இருக்கிறபோதுதான் மற்றவருக்கு ஜோதிடம் பார்க்கவே ஆரம்பிக்கிறார்."

"நீங்கள் யாரிடம் போய் இந்தக் கலையைக் கற்றுக் கொண்டீர்கள்?"

"யாரிடமும் போய்க் கற்றுக் கொள்ளவில்லை. பல நூல்களையும் சுயமாகப் படித்துப் படித்துத்தான் கற்றுக் கொண்டேன்."

"ஜோதிடம் எந்த அளவுக்குப் பலிக்கும்?"

"நூற்றுக்குத் தொண்ணூறு சதவிகிதம் பலிக்கும்."

"மீதி பத்து சதவிகிதம் ஏன் பலிப்பதில்லை?"

"அதற்குப் பல்வேறு காரணங்கள் இருக்கலாம். ஒன்று, ஜாதகத்திலுள்ள பிறந்த நேரம் சரியாகக் குறிக்கப்பட்டிருக்காது. அல்லது ஜோதிடம் பார்ப்பவர்களும் சரியாகக் கணித்துப் பலன் சொல்லாமல் இருக்கக்கூடும்!"

"நீங்கள் எத்தனை ஆண்டுகளாக ஜோதிடம் பார்க்கிறீர்கள்?"

"எனது இருபத்தோராவது வயதிலிருந்து. அதாவது பதின்மூன்று வருஷங்களாக!"

"பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன்பு நீங்கள் ஜோதிடராக இல்லை என்பதால் அப்போது நீங்கள் வேறு யாரிடமாவது போய் ஜோதிடம் பார்த்திருப்பீர்களே?"

"நிறைய. எனக்குச் சிறு வயதிலிருந்தே ஜோதிடராக வேண்டும் என்கிற ஆசை. அதனால் எனது ஜாதகத்திலோ, கைரேகையிலோ அப்படியொரு வாய்ப்பு பிரகாசமாக இருக்கிறதா என்பதைத் தெரிந்து கொள்வதற்காகச் சுமார் மூவாயிரம் பேரிடமாவது போய்ப் பார்த்திருப்பேன். இதிலொரு வேடிக்கை என்னவென்றால் அவர்களில் யாருமே நான் ஜோதிடராக வருவேன் என்று சொல்லவேயில்லை!"

சந்திப்பு : **பிரின்ஸ்**

படம் : **கோபிநாத்**



# பச்சோந்

மழை வெள்ளத்தால் தடம் தெரியாமல் அரித்துச் செல்லப்பட்டிருந்த கொங்கனூர் குறுக்குச் சாலையை செப்பனிடும் பணியில் தீவிரமாய் இருந்த பொறியாளர் ராமதுரையைத் தேடிக் கொண்டு அந்த ஜீப் வந்தது.

அவருடைய டிவிஷனைச் சேர்ந்த ஜீப்தான். ஜீப்பிலிருந்து இறங்கியவர்களும் டிவிஷன் ஆபீஸ் சிப்பந்திகள்தான் – ஒருவரைத் தவிர.

வித்தியாசமாய்த் தெரிந்த அந்த ஒருவருக்கு, அவரை அழைத்து வந்திருந்த ஊழியர்கள் காட்டிய கூடுதல் மரியாதை, 'அவர்' தலைமை அலுவலகத்திலிருந்து வந்திருக்கிறார் என்று அடையாளம் காட்டியது.

இரண்டு வாரத்துக்கு முன்பு, அந்த காண்ட்ராக்டர் சத்தியபுத்திரன், ராமதுரை இல்லாத நேரத்தில் டிவிஷன் ஆபீசுக்கு வந்து சத்தம் போட்டு, "ஹெட் ஆபீசில் பெட்டிஷன் கொடுத்து இந்த ராமதுரையை ஒரு வழி பண்ணிட்டு மறுவேலை பார்க்கிறேன்" என்று, ஆவேசத்தில் அள்ளி வீசி விட்டுப் போன சட்டை கழற்றிய வார்த்தைகள் ராமதுரையின் காதிலும் விழுந்தன.

என்றாலும் அவர் அதைச் சட்டை செய்யவில்லை, அப்போது.

இன்று...

கேள்விப்பட்ட சம்பவம் நினைவுக்கு வந்து, சத்தியபுத்திரன் கொடுத்த புகார் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டதன் பேரில்தான் தலைமை அலுவலகத்திலிருந்து 'ஸ்பெஷல் மெசஞ்சர்' வந்திருக்கிறார் என்று ராமதுரை யூகித்து முடிப்பதற்குள் –

ஜீப்பிலிருந்து இறங்கி வந்த 'மெசஞ்சர்', ஜோல்னா பையிலிருந்து ஒரு உறையை எடுத்து ராமதுரையிடம் நீட்டி, "சார்... இதுல ஒரு கையெழுத்துப் போடுங்க" என்றார் மற்றொரு கடிதத்தைக் காட்டி.

உறைக்குள் ஒளிந்து கொண்டிருக்கும் குற்றக் குறிப்பாணையின் நகலில் கையொப்பமிட்டு, உறையைப் பெற்றுக் கொண்ட ராமதுரையின் நெஞ்சில் 'கருக்'கென்றது.

பிரித்துக் கூடப் பார்க்காமல் மடித்து பாண்ட் பாக்கெட்டில் வைத்துக் கொண்டார்.

ராமதுரையை விமர்சிக்கத் தகுதியோ, துணிவோ இல்லாத மற்றவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ள –

"தாங்க்ஸ் சார்" என்ற தலைமை அலுவலகச் சிப்பந்தி, விருந்துக்கோ விடுதித் தங்கலுக்கோ காத்திராமல், "வரேன்" என்ற ஒரே வார்த்தையில் பீல்டில் இருந்த ஆறு பேரிடமும் ஒட்டு மொத்தமாக விடைபெற்றுக் கொண்டு உடனே புறப்பட்டுச் சென்றவிதம் அவர்களுக்கெல்லாம் ஆச்சரியமாக இருந்தது.

ராமதுரைக்கோ, அது புதிய அரசாங்கம் பொறுப்புக்கு வந்துள்ளதன் அடையாளமாய்த் தெரிந்தது. தனக்கு நியாயம் கிடைக்கும் என்ற நம்பிக்கையை அதிகரிக்கச் செய்தது.

மதிய உணவுக்கு அவர் ஜீப்பிலேயே உட்கார்ந்து கொள்ள, மற்றவர்கள் சற்றே விலகிப் போய் மரத்தடியில் கடை விரித்தனர்.

"....இவர் நேர்மையா இருக்கலாம். அதுக்காக அரசியல்வாதிங்களும் அப்படித்தான் இருக்கணும்னு எதிர்பார்த்தா எப்படி?" என்றார் ஒருவர்.

"அட அத உடுங்க... அஞ்சு வருசம் பொறுமையா இருந்தவர், அந்த ஆள் சத்திய புத்திரனோட கட்சி, தேர்தல்ல தோத்துப்



# ராஜ்ஜியம்

போய் அவருடைய காண்ட்ராக்டும் முடிஞ்சு போன நேரத்தில போய் வம்புல மாட்டு வாரா...?" – இது வேறொருவர்.

"தோற்றுப் போன கட்சிக்காரன்னாலும் பெட்டிசன் கொடுத்தால் நடவடிக்கை எடுத் துத்தானே ஆகணும்..." – இன்னொருவர்.

காற்றில் மிதந்து வந்து காதுகளைத் தாக்கிய ஊழியர்களின் விமர்சனத்திலிருந்து விடுபட்டு, பாண்ட் பாக்கெட்டிலிருந்த குற்றக் குறிப் பாணையை வெளியில் எடுத்தார், ராமதுரை.

ஒழுங்கு நடவடிக்கை சட்டத்தின் உச்சமான பிரிவைப் பயன்படுத்தி குற்றக் குறிப்பாணை தொடுக்கப்பட்டிருந்தது. ஒரு வார கால அவகாசத்தில் விளக்கம் கோரப் பட்டிருந்தது. தவறினால் குற்றம் ருசுவென தீர்மானித்து தண்டனை ஆணை பிறப்பிக்கப் படும் என்ற வாசகத்துடன் முற்றுப் பெற்

**லைஃபான்**

றிருந்தது.

தனக்கு நியா யம் கிடைக்காமல் போனால் கூடப் பர வாயில்லை; மனதில் இருப்பதைக் கொட்டி விட வேண்டும் போலிருந்தது.

மறுநாளே தலை மையகம் செல்ல தீர் மானித்தார், ராமதுரை.

தலைமைப் பொறி யாளரின் நேர்மையையும் கண் டிப்பையும் பற்றி ராமதுரை கேள் விப்பட்டிருந்ததை உறுதிப்படுத்தும் வகையில் அமைதியாயும், சுத்தமாகவும் மாறிப் போயிருந்தது தலைமை அலுவலகம். பத்து மணிக்கெல்லாம் முழு மூச்சில் செயல் படத் தொடங்கி இருந்தது...

நீளமாய்க் காத்திருக்க வைக்காமல், பார் வையாளர் பகுதியில் போய் உட்கார்ந்த பத்தா வது நிமிடமே அனுமதி கிடைத்து உள்ளே போனார்.

நமஸ்கரித்து, சுய அறிமுகம் செய்து கொண் டார்.

அதற்குள் ராமதுரை சம்பந்தப்பட்ட கோப்பு மேஜையில் கொண்டு வந்து வைக்கப் பட, எடுத்து, குறிப்புகளை ஒருமுறை பார்த்து விட்டு, "எஸ்... சொல்லுங்க" என்றார் தலை மைப் பொறியாளர்.

"...சார்.. நான் மிஸ்டர் சத்தியபுத்திரன் கிட்ட நேருக்கு நேர் எந்த வாக்குவாதமும் பண் ணலே."

"புரசிட்"

"பத்து நாள் நான் மெடிக்கல் லீவில் இருந் ததைப் பயன்படுத்தி ஒரு மூணு கிலோ மீட்டர் எக்ஸ்டண்டுக்கு – போடாத ரோட்டுக்கு அவர் பில் வாங்கி இருந்ததைப் பார்த்த ஆத்திரத்தில் 'அரசியல் பொறுக்கிங்கன்னு' நான் சொன்னது உண்மை... ஜனங்களோட வரிப்பணம் கொள்ளை போன குமுறல்ல சொன்ன வார்த்தை... எப்படியோ அவர் காதுக்குப் போயிருக்கு... அதை வைத்து பெட்டிஷன் கொடுத்திருக்கார்...."

"தென்?"

"என்னோட இருபத்தஞ்சு வருச சர்வீஸில் இப்படி ஒரு எக்ஸஸ் ரிஜைம் நான் பார்த்த தில்லே சார்..." கடந்த ஐந்து வருடத்தில் சத்திய புத்திரனிடம் பட்ட பாடு இப்படிச் சொல்ல வைத்தது, ராமதுரையை.

தலைமைப் பொறியாளர் மெலிதாய் புன்னகைத்தார்.

"எல்லாமே அதிகரிச்சிட்டு போகும்போது



"உங்களுக்கு உடனே ஒரு ஆபரேஷன் செஞ்சாகணுமே!"

"ஏன் டாக்டர் அப்படி?"

"எனக்கு அவசரமா ரெண்டாயிரம் ரூபா தேவைப்படுதேய்யா!"

— ஆர்.பி.எஸ்

அரசியல்வாதிங்களோட ஆக்டிவிடீஸ் மட்டும் எப்படி குறையும்னு எதிர்பார்க்கறீங்க?''

"எக்ஸ்க்யூஸ் மீ சார்! இனி எந்தக் கட்சி வந்தாலும் இவ்வளவு மோசமா இருக்காதுன்னு நம்புறேன் சார்" ராமதுரையின் சர்வாங்கமும் துடித்தது.

"மிஸ்டர் ராமதுரை! எப்படிப் பார்த்தாலும் ஆட்சியில் இருக்கிற கட்சிக்குத்தான் காண்ட்ராக்ட். ஸோ நாம் கொஞ்சம் புரடெக்டிவ்வா இருக்கணும்... ஃபீல் பண்ணாதீங்க... சப்போஸ் இந்த முறையும் மிஸ்டர் சத்தியபுத்திரனோட கட்சி ஜெயிச்சு ஆட்சிக்கு வந்திருந்தால்...? கொஞ்சம் யோசிச்சுப் பாருங்க... ஒரு சின்ன பனிஷ்மெண்ட் - மூன்று மாதம் இன்கிரிமெண்டை நிறுத்தினால் கூட உங்களுக்கு சர்வீஸே வெறுத்துப் போயிருக்கும்... இல்லையா?"

"சார்"

"உங்க பர்சனல் ஃபைல் பார்த்தேன்... நல்லாருக்கு... உங்களை மாதிரி சின்ஸியர் ஆபீசர் இந்த நாட்டுக்கு ரொம்ப அவசியம்... கொஞ்சம் பொறுமையா டீல் பண்ணுங்க..."

"சார்"

"இப்ப சொன்னதை எழுதிக் கொடுத்துட்டுப் போங்க... ஒரு வார்னிங் போட்டு குளோஸ் பண்ணிடறேன்."

"தேங்க்ஸ் சார்" - இழந்த நிம்மதி சற்றே திரும்பி வந்தது ராமதுரைக்கு.

"அப்புறம் ஒரு முக்கியமான விஷயம்..."

"சார்..."

"அடிக்கடி புயல் - வெள்ளம் பாதிக்கிற உங்க டிவிஷனுக்கு பாலம் கட்டவும் கால்வாய் வெட்டவும் பத்து கோடி ரூபாய் சாங்ஷன் ஆகி இருக்கிறது உங்களுக்குத் தெரிஞ்சிருக்கும்."

"சார்"

"அதற்கான டெண்டர் இந்த வாரம் டிசைட் ஆயிடும். திங்கட்கிழமை வேலை ஆரம்பிக்கணும். பெரிய ப்ராஜக்ட்ங்கறதாலே மினிஸ்டர் புரோகிராம் இருக்கலாம். நல்லா செய்யுங்க. அன்றைக்கே கிடைக்கிற மாதிரி உங்களைப் பற்றின பெட்டிஷனுக்கு ஃபைனல் ஆர்டர் போட்டனுப்பிடறேன்."

"நல்லது சார்."

திங்கட்கிழமை.

'எப்போது விடியும்?' என்று இரவெல்லாம் விழித்திருந்த ராமதுரை, எட்டு மணிக்கே டிவிஷன் ஆபீசுக்கு வந்து விட்டார்.

தலைமைப் பொறியாளர் வாக்களித்தபடி சத்தியபுத்திரன் கொடுத்த புகார் மீதான கோப்பு, தனக்கு 'வார்னிங்' கொடுத்ததோடு முடிக்கப்பட்டு விட்டது என்பதைக் கண்ணால் பார்க்கும் வரை மனது நிலை கொள்ளாது போலிருந்தது.

தபால் வாங்கப் போன சிப்பந்தியின் வரவை எதிர்பார்த்து வாசலிலேயே நின்றிருந்தார், ராமதுரை.

சட்டென்று ஒரு மாருதி கார் வந்து வாசலில் நின்றது.

அதைப் பார்த்த பிறகுதான், பத்து கோடி ரூபாய் ப்ராஜக்ட்டுக்குப் புது காண்ட்ராக்டர் வர இருப்பது ஞாபகம் வந்தது ராமதுரைக்கு.

காருக்குள் இருப்பவர்களைப் பார்க்க முடியாதபடி கறுப்புக் கண்ணாடி போர்த்தி இருந்தது மாருதி.

கதவுகள் திறந்து கால்கள் இரண்டு வெளிப்பட்டன - கறை வேட்டி கட்டிய கால்கள்.

தலைமைப் பொறியாளர் கணித்தபடி புதிதாய் ஆட்சி அமைத்திருக்கிற கட்சியின் கரை வேட்டி.

ராமதுரையை பிரமிக்க வைத்து காரிலிருந்து வெளிப்பட்டார் சத்தியபுத்திரன்.

"அண்ணன் சத்தியபுத்திரன் வாழ்க" என்ற கோஷத்துடன் வேன் ஒன்று வந்து நிற்க, பத்து பேர் இறங்கினார்கள்.

அவர்களில் அகலமாய் இருந்த இருவர் ஒரு மாலையைத் தூக்கிக் கொண்டு வந்து சத்திய புத்திரனுக்கு அணிவித்து கோரஸாய் கைதட்டினார்கள்.

அதில் ஒரு தொண்டர் ரொம்பவும் உணர்ச்சிவசப்பட்டுச் சொன்னார் : "என்னதான் நாங்க ஆளுங்கட்சியா வந்துட்டாலும் உங்களை எதிர்த்துக்கிட்டு எப்படி அரசியல் பண்றதுன்னு தவிச்சுக்கிடந்தோம். நல்ல காலம். நீங்களே எங்க கட்சிக்கு வந்துட்டீங்க."

பாசத்துடன் அந்தத் தொண்டரைக் கட்டித் தழுவிக் கொண்டார், புதுக் கட்சியைச் சேர்ந்து விட்ட புதிய காண்ட்ராக்டர் சத்தியபுத்திரன்.

தலைக்கு மேல் இருகரம் குவித்து, ராமதுரை உள்ளிட்ட அங்கு இருந்த அத்தனை பேரையும் புன்முறுவலுடன் நமஸ்கரித்தார்.

"அண்ணன் சத்தியபுத்திரன் கரங்களை வலுப்படுத்துவோம்" என்ற கோஷம் காதைத் துளைக்க -

அதிகரித்துப் போன இதயத் துடிப்புடன் தலைமை அலுவலகத் தபாலை எதிர்பார்த்து வாசலிலேயே நின்றிருந்தார், ராமதுரை.

## இங்கே கொஞ்சம் கவனிங்க!

# அரிசி guard!

முன்பெல்லாம் ஊர்க்காவல் படை - 'ஹோம் கார்டு' என்ற பெயர் அடிக்கடி செய்திகளில் அடிபட்டுக் கொண்டிருந்தது. காவல் துறையோடு கைகோத்துக் கொண்டு அவர்கள் பல சமயங்களில் சட்டம் ஒழுங்கை நிலைநாட்ட உதவி செய்து வந்தார்கள். இப்போது அந்தப் பெயரையே கேள்விப்பட முடிவதில்லையே. என்ன ஆயிற்று ஹோம் கார்டு பிரிவுக்கு? இருக்கிறதா? இயங்குகிறதா?

ஊர்க்காவல் படையின் உதவி கமாண்டன்ட் ஜெனரல் கே. வெங்கடகிருஷ்ணனிடம் இந்தக் கேள்விகளைக் கேட்டபோது, 'எங்கள் நிலையை எடுத்துச் சொல்ல உங்கள் கேள்விகள் மூலம் வாய்ப்பு தந்திருக்கிறீர்கள்' என்று சொல்லிவிட்டு ஆரம்பித்தார்:



கே. வெங்கடகிருஷ்ணன்

"சீனப் போரின்போது பிறந்த குழந்தைதான் ஊர்க்காவல் படை. அந்தக் காலத்தில் அதாவது உலகப் போரின்போது இரவில் விமானத் தாக்குதல் நேர்ந்தால் வீட்டின் விளக்குகளை அணைக்கச் சொல்லி மக்களுக்கு விசில் ஊதி எச்சரிப்பது, குண்டு வீச்சின்போது மேற்கொள்ள வேண்டிய பாதுகாப்பு நடவடிக்கைகளை அறிவிப்பது போன்ற பணிகளைச் செய்ய ஏ.ஆர்.பி.என்ற பிரிவு இயங்கி வந்தது. ஹோம் கார்டும் கிட்டத்தட்ட அது போன்ற பிரிவுதான். போலீஸுடன் இணைந்து செயல்படவும், பொதுமக்களின் உதவிக்காகவும் அமைக்கப்பட்ட பிரிவு.

பொதுமக்கள் ஆர்வத்தின் அடிப்படையில் தாமாக முன்வந்து இப்பிரிவில் சேரலாம். சேர்ந்து முதல் பதினைந்து நாட்களுக்கு 'ஃபுட் ட்ரில்', அடுத்து இரு வாரங்களுக்கு ஆயுதப் பயிற்சி (ஆர்ம்ஸ் ட்ரில்) என்று தரப்படும். கலவரம், பெரிய அளவில் மக்கள் கூடும் நிகழ்ச்சிகள் உதாரணமாக மாநாடுகள், ஆலய உற்சவங்களில் கூட்டத்தைக் கட்டுப்படுத்துவது போன்றவை எங்கள் பணி.

வடசென்னையில் மூன்று டிவிஷன்களும், தென் சென்னையில் மூன்றும், மத்திய சென்னையில் இரண்டு டிவிஷன்களும் இயங்குகின்றன. மகளிர் ஊர்க்காவல் படை என்று தனிப் பிரிவும் உண்டு. மொத்தம் இங்கே இரண்டாயிரம் பேர் இருக்கிறோம். போலீஸ் டி.ஜி.பி.தான் இப்படையின் ஒட்டு மொத்தத் தலைவர். சென்னை போலீஸ் கமிஷனர்தான் எங்களுக்கு கமாண்டன்ட். நான் உதவி கமாண்டன்ட். எல்லா மாவட்டங்களிலும் இதே போன்ற நிர்வாக அமைப்புதான்."

"இதுவரை பெரிய அளவில் நீங்கள் ஆற்றிய மக்கள் சேவை ஏதாவது..."

"ரேஷன் கார்டு விநியோகம் தொடர்பாக சென்னை நகரில் புள்ளி விவரக் கணக்கெடுப்பு முழுவதையும் ஐந்து நாட்களில் முடித்தோம். இது ஒரு சாதனையே. இந்தப் பணியின் மூலம் பொதுமக்கள் எங்களுக்கு 'அரிசி கார்டு' என்றே செல்லப் பெயர் வைத்து விட்டார்கள். (ஹோம் கார்டு போல).

இப்போது சமீபத்தில் நாங்கள் மேற்கொண்ட ரோந்துப் பணியின் மூலம் அண்ணாநகரில் சங்கிலிப் பறிப்பு கிட்டத்தட்ட இல்லை என்றே

---

**அட, துப்பாக்கியை விடுங்கள், கூட்டத்தைப் பயமுறுத்தி கலைக்கப் பயன்படுத்தப்படும் 'மஸ்கட்' ஆயுதங்களைக் கூட உபயோகிக்க பல பேருக்கு இன்று தெரிவதில்லை. காரணம் முழுமையான பயிற்சி இல்லை.**

சொல்லலாம்."

"இருந்தாலும் முன்பு போல ஹோம் கார்டுகள் பணி இப்போது பெருமளவில் பேசப்படுவதில்லை. பத்திரிகைகளிலும் வருவதில்லை. இந்த அமைப்பில் சேரும் தன்னார்வம் குறைந்து வருவது போல் தெரிகிறதே, சரியா?"

"சரி என்றுதான் சொல்ல வேண்டும். நான் போலீஸ் துறையைச் சேர்ந்தவன் அல்ல.

நீங்கள் குறிப்பிட்ட அதே தன்னார்வத்தில் ஒரு அடிப்படை ஹோம் கார்டாகச் சேர்ந்து இன்று இந்த அளவு உயர்ந்திருக்கிறேன். ஹோம் கார்டு இயக்கத்தின் நாடித் துடிப்பை அறிந்தவன் என்ற முறையில் மனம் விட்டுச் சொல்கிறேன். காவல் துறை அழைத்தால்தானே நாங்கள் போக முடியும். நாங்களாக முடிவெடுத்துக் கொண்டு போய் நிற்க முடியாது. சமீப காலமாக எங்களுக்கு முன்போல் அழைப்பு வருவதில்லை என்பது உண்மை. காரணம் எனக்குத் தெரியாது.

அதேபோல, முன்பு போன்ற பயிற்சியும் இப்போதைய ஊர்க்காவல் படையினருக்குத் தரப்படுவதில்லை. அட, துப்பாக்கியை விடுங்கள், கூட்டத்தைப் பயமுறுத்தி கலைக்கப் பயன்படுத்தப்படும் 'மஸ்கட்' ஆயுதங்களைக் கூட உபயோகிக்க பல பேருக்கு இன்று தெரிவதில்லை. காரணம் முழுமையான பயிற்சி இல்லை. எங்களுக்கு அளிக்கப்படும் காலணிகள் சீக்கிரமே கிழிந்து போய் விடுகின்றன. அனைத்துக்கும் மேலாக எங்களுக்குச் சம்பளம் இல்லை. வெறும் அலவன்ஸ்தான். அதுகூட ஒரு ட்யூட்டிக்கு வெறும் எட்டரை ரூபாய் மட்டுமே. இது போன்ற காரணங்களால் மக்களின் ஆர்வம் ஊர்க்காவல் படையைவிட்டு விலகிப் போக வாய்ப்புண்டு. என்னைப் போன்ற சில 'கமிட்டட்' ஹோம் கார்ட்ஸ் இருக்கிறோம். நாங்கள் இப்பணியை வெகுவாக நேசிக்கிறோம். ஆனால் இன்னும் எத்தனை நாளைக்கு நாங்களே இருக்க முடியும். நான் சொன்ன குறைபாடுகளைக் கவனித்து சீர் செய்தால் ஊர்க்காவல் படையின் பெருமை மீண்டும் உலா வரும் என்று நிச்சயமாய் நம்புகிறேன்."

- ராணிமைந்தன்



"உங்க கதையில மட்டும் எப்படி இவ்வளவு திருப்பங்கள் இருக்கு?"

"முன்னாடி நான் டிராபிக் கான்ஸ்டபிளா இருந்தேன்."

– பா. ஜெயக்குமார்



"தலைவர் பயணக் கட்டுரை எழுதப் போறாராமே, எந்தப் பயணம்?"

"ஜெயில்ல இருந்து கோர்ட்டுக்கும் கோர்ட்டுல இருந்து வேற ஊர் ஜெயிலுக்கும் அடிக்கடி போய் வர்றதைத்தான்!"

– பா.ஜெயக்குமார்



"கட்சிக்காரங்க இப்போ சிகரெட்டை கீழே போட்டா அணைக்காம போறாங்களே"

"அதை காலால அணைக்கப் போய் அதைத் தலைவர் தீ மிதிச்சதா நினைச்சுகிட்டா... எதுக்கு வம்பு."

– ராதாவாசுதேவன்



**வி.கே. ராமசாமி**

# யானை கட்டித் தீனி போடவா?!

சிவாஜியை வைத்து செல்வம் எடுத்து வெற்றி கண்ட பின்பும் பல படங்கள் எடுத்தேன். சில சுமாராக ஓடின. ஆனால் அடிக்கடி தோல்விகளைச் சந்திக்க வேண்டி வந்தது. தனி வாழ்க்கை சிக்கல்களும் இதற்கு ஒரு காரணம். ஜோடிப்புறா என்ற படம் தான் நான் கடைசியாக எடுத்தது. அதுவும் தோல்வி கண்டதால், 'சரி; இனிமேல் தயாரிப்பு வேலை வேண்டாம்' என்று முடிவு செய்தேன்.

தொடர்ந்து படங்களில் மட்டும் நடித்துக் கொண்டு வந்தேன். என் காலத்தின் இரண்டு இமயங்களாக இருந்த சிவாஜி – எம்.ஜி.ஆர். இருவர் படங்களிலும் எனக்குத் தொடர்ந்து வாய்ப்பு கிடைத்து வந்தது.

அப்படித்தான், எம்.ஜி. ஆரின் காவல்காரன் படப் பிடிப்பு நடந்து கொண்டிருந்தபோது திடீரென்று ஒரு நாள் எம்.ஜி.ஆர். என்னிடம் கேட்டார் : "நீங்கள் படம் எடுத்து, நிறைய நஷ்டமாகி, கடனில் இருக்கிறீர்கள் என்று கேள்விப்பட்டேன்; நிஜமா?"

"ஆமாம்" என்றேன் தயக்கத்துடன்.

எனக்குப் புரியவில்லை. எதற்காக எம்.ஜி.ஆர். இதை திடீரென்று கேட்கிறார்?

சற்று நேரம் அமைதியாக இருந்தவர், ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவராகச் சொன்னார் :

''உங்க கடனெல்லாம் தீரணும். கஷ்டம் போகணும். மனசு நிம்மதியா இருந்தாத் தான் கலைஞர்களால உற்சாகமா வேலை பார்க்க முடியும். நீங்க ஒண்ணு செய்யுங்க. உங்களுக்காக நான் ஒரு படம் நடிச்சுத் தரேன். உடனே வேலையை ஆரம்பிங்க'' என்றார்.

சிலிர்த்து விட்டது எனக்கு! ஒரு படம் எம்.ஜி. ஆர். நடித்துத் தர மாட்டாரா என்று 'தினம் தினம் அவர் வீட்டுக்குப் படை எடுக்கும் தயாரிப்பாளர்களை நானறிவேன். எம்.ஜி.ஆர். நடிக்கிறார் என்ற செய்தி வந்தவுடனேயே மாநிலம் முழுவதும் ஏரியாக்கள் விற்றுத் தீர்ந்துவிடும் என்கிற அளவுக்கு செல்வாக்கு மிக்கவர். படத்தின் வெற்றி பற்றிச் சந்தேகமே யில்லை. வெள்ளி விழாவா, பொன் விழாவா என்பது தான் கேள்வி!

அப்படிப்பட்ட ஒரு மாமனிதர் தாமே முன்வந்து எனக்காக ஒரு படம் செய்து தருவதாகச் சொல்வதென்றால்...?

**"நீங்கள் படம் எடுத்து, நிறைய நஷ்டமாகி, கடனில் இருக்கிறீர்கள் என்று கேள்விப்பட்டேன்; நிஜமா?"**

## கிழவேடமல்லவா?



என் மீது அவருக்கிருந்த அன்பு எத்தகையது என்பதைச் சொல்லியே ஆகவேண்டும்.

**எம்**.ஜி.ஆருடன் என் பழக்கம் என்பது, நாடக காலத்திலிருந்தே தொடங்கியது. கலைவாணர் நாடக சபாவில் நான் நடித்துக் கொண்டிருந்தபோது, நான் தங்கியிருந்த இடத்திலிருந்து இரண்டு வீடுகள் தள்ளி அவர் குடியிருந்தார்.

பெண்கள் மட்டுமல்ல; ஆண்களே பார்த்து மயங்குகிற தோற்றம் அவருடையது. ஆணழகன் என்ற சொல்லுக்கு அவரைத் தவிர என்னால் வேறு உதாரணம் காட்ட முடியாது. தோள் வரை தவழ்ந்து புரளும் கேசம், நெற்றியில் பட்டையாக சந்தனம், விபூதி, நடுவில் குங்குமம், கழுத்தில் ஒரு ருத்திராட்சம், கதர் ஜிப்பா, கதர் வேட்டி, ஒரு அங்கவஸ்திரம். – இதுதான் அன்றைய எம்.ஜி.ஆர்.

அப்போதுதான் திரையுலகில் நுழைந்தவர், சிறு சிறு வேடங்களில் நடித்துக் கொண்டிருந்தார்.

நேரம் கிடைக்கிறபோதெல்லாம் எங்கள் கலைவாணர் நாடக சபாவுக்கு நாடகம் பார்க்க வருவார். நாடகத்துக்கு வருவதென்றால் ஆரம்பிக்கிற சமயம் வந்து முடிகிறபோது கிளம்பிப் போகிற ரகம் அல்ல அவர்.

ஆரம்பிப்பதற்கு முன்பே வந்து, நாடகம் முடிந்து, நடிகர்கள் மேக்-அப் கலைக்கிறவரை உடன் இருப்பார். கலைவாணருடன் அவருக்கு அப்போதே நெருங்கிய தொடர்பு இருந்தது. அவர் மூலம், குழுவிலிருந்த என்னைப் போன்ற நடிகர்கள் யாவருக்கும் அவர் நெருங்கிய நண்பரானார்.

அத்தனை நடிகர்களிலும் எனக்குத்தான் மேக்-அப்பைக் கலைத்துவிட்டு வர நேரம் அதிகமாகும். கிழ வேடமல்லவா? நான் வரும் வரை எம்.ஜி.ஆர். காத்திருப்பார். பின், இருவரும் ஒன்றாகக் கிளம்பிப் போவோம்.

என் பெற்றோர், ஊர், படிப்பு பிற விஷயங்களைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொண்டவர், தன்னைப் பற்றியும் சொல்லுவார். இளமையில் பட்ட சிரமங்கள், கலையுலகம் தந்த ஆரம்ப கால நிராகரிப்புகள் பற்றியெல்லாம் மனம் திறந்து பேசிக் கொண்டே வருவார்.

நாடகங்களில், நான் சொந்தமாக வசனங்களைச் சேர்த்துப் பேசுவது பற்றி அவருக்கு மிகுந்த வியப்பு. "எப்படி நீங்க இந்த மாதிரி டைலாக் டயலாக் பேசறீங்க? ஆனா, கரெக்டா அடுத்தவர் ஸ்கிரிப்ட் படி பேச 'கீ வேர்ட்' மட்டும் சரியா குடுத்துடறீங்க?" என்று கேட்பார் வியந்தபடி.

நான் சொல்லுவேன் : "பொன்னுசாமிப் பிள்ளை கம்பெனியில் இருந்தவரைக்கும் ஒழுங்கா, குடுத்த வசனங்களைத்தான் பேசிட்டிருந்தேன். தனியா பிரிஞ்சு போய் நாடகம் போட்ட




அன்றைய எம் ஜி ஆர்!



சமயத்துலதான், கேட்க ஆளில்லாமல் இஷ்டத்துக்குப் பேச ஆரம்பிச்சேன். அதை யும் தவிர, நான் விருதுநகர் பக்கத்து ஆளு. அந்தப் பக்கத்து மனுஷங்க எல்லாருக்குமே ரத்தத்துல கொஞ்சம் நையாண்டித்தனம் அதிகம் கலந்திருக்கும்!'' என்பேன். எம்.ஜி.ஆர். சிரிப்பார்.

**நா**ம் இருவர் படத்தில் நடிக்க எனக்கு முதன் முதலில் வாய்ப்புக் கிடைத்தது கேள்விப்பட்டதும் சந்தோஷம் கொப்பளிக்க, என்னைக் கட்டிப் பிடித்து வாழ்த்திய முதல் நபர் எம்.ஜி.ஆர்.தான். "நல்ல டயம் வந்துருச்சி. பிரமாதமா வரப் போறீங்க. நல்லா செய்யுங்க!" என்று மூன்று வாக்கியங்களில் அவர் என்னை அன்று வாழ்த்தியது இன்றும் என் காதுகளில் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

பிறகு 'சர்வாதிகாரி' என்ற படத்தில் இருவரும் முதல் முறையாக இணைந்து நடித்தோம். அதன்பின் கொஞ்ச நாள் தொடர்பே இல்லாமல் இருந்தது. காரணம், அவரும் சரி; நானும் சரி; வேறு வேறு படங்களில் பிஸியாக இருந்ததுதான்.

ஆனால் நடிகர் சங்கத்தில் எப்போதாவது சந்தித்துக் கொள்வோம். அப்போது மட்டும் பழைய சம்பவங்களைப் பேசிக் கொள்வதுடன் சரி.

காவல்காரனிலிருந்துதான் அவரது எல்லா படங்களிலும் நான் நடிக்கத் தொடங்கினேன்.

அந்தச் சந்தர்ப்பம் ஏற்படுத்தித் தந்த நெருக்கத்தினால்தான் எம்.ஜி.ஆர். என் கஷ்டங்களைப் பார்த்துவிட்டு, "நான் ஒரு படம் நடித்துத் தருகிறேன்" என்றார்.

நான் யோசித்தேன். நிச்சயம் அது சாதாரண வாய்ப்பு அல்ல. படம் தயாராகி, வெளியானால் என் அப்போதைய கஷ்டங்கள் தீருவது மட்டுமல்ல; ஆயுள் முழுக்கவே நான் கஷ்டமில்லாமல் வாழ முடியும்!

ஆனாலும் எம்.ஜி.ஆரைப் போட்டுப் படம் எடுப்பதென்றால் சாதாரண விஷயமா? நான் சொன்னேன் : "உங்களைப் போட்டுப் படம் எடுக்கறதுங்கறது யானை கட்டித் தீனி போடற கதை. ஒருவேளை ஏ.பி.என். என்னோட இருந்தப்பவே சொல்லியிருந்தீங்கன்னா இது நடந்திருக்கும்! அவர் போனதோட என் பாதி பலம் போயிடுச்சி. மீதி பலத்தை என் சொந்தக்காரங்க பலவிதமா குலைச்சிட்டாங்க. இப்ப தனி மரமா இருக்கேன். படம் எடுக்க முடியும்ங்கற நம்பிக்கை போயிடுச்சி" என்றேன் விரக்தியாக.

எம்.ஜி.ஆர். எனக்கு ஆறுதல் சொன்னார். எப்படியாவது முயன்று, எடுத்துவிட்டால் பின்னால் சற்று மூச்சுவிட முடியுமே என்று கேட்டார். அது வாஸ்தவம்தான். ஆனால் நான் அப்போது மனரீதியிலும் பணரீதியிலும் அதற்குத் தயாராக இல்லை.

"உங்க நல்ல மனசுக்கு நன்றி சொல்ல வார்த்தையே இல்லை. ஆனால் இப்ப என்னால் படம் எடுக்க முடியாதுங்கறதுதான் உண்மை. போதுமான நிர்வாக பலம், பணபலம் எதுவுமே இல்லை" என்று மீண்டும் மறுத்தேன்.

அவர் விடவில்லை.

"நல்லா யோசனை பண்ணிச் சொல்லுங்க!" என்றார்.

எனக்கு யோசிக்க எதுவும் இல்லை. நான் சொன்னேன் :



''ஏப்ரல் ஃபூல் பண்ண வேண்டியதுதான். ஆனால் அதுக்காக இப்படியா?''

''ஏன், என்னாச்சு?''

''ஆபரேஷன் சக்ஸஸ்... பேஷண்ட் பிழைச்சிட்டாரு'ன்னு சொல்லிட்டு, நல்லா ஏமாந்தீங்களா, இன்னைக்கு ஏப்ரல் முதல் தேதி'ன்றார் அந்த டாக்டர்!''

– பிரசன்னகுமார்

# சிலிர்த்துவிட்டது!



"நீங்க ஒரு படம் நடிச்சித் தர மாட்டீங்களான்னு எத்தனையோ பேர் காத்திருக்காங்க. நீங்களோ, வேணாம் வேணாம்னு சொல்ற என்னை விடாம கேக்கறீங்க.... உங்களை வெச்சி நான் படம் எடுத்துத்தான் தீரணும்னு விதி இருந்தால் நிச்சயம் நடக்கும். இப்போதைக்கு நான் கேட்டுக்கறது எல்லாம் இதுதான். தயவுசெய்து உங்க படங்கள்ல எனக்கு நடிக்க வாய்ப்புக் கொடுக்கறதை மட்டும் நிறுத்திடாதீங்க!'' என்றேன் தழுதழுத்தபடி.

சட்டென்று என் தோளைப் பற்றி, எம்.ஜி.ஆர். சொன்னார் : "நான் என்ன, யார் உங்களை விட்டாலும் கலையுலகம் உங்களை விடவே விடாது!"

ஐம்பது வருடங்கள் ஆகிவிட்டன. அவர் வாக்கு பொய்க்கவில்லை!

சினிமாவில் இருந்தபோதும் சரி; அரசியலுக்குப் போன போதும் சரி; சினிமாக்காரராகவோ அரசியல்வாதியாகவோ இல்லாமல் எப்போதும் அவர் ஒரு முழுமையான மனிதராக, மனிதநேயம் மிக்கவராக இருந்தார் என்பதால்தான் அவர் மக்கள் மனத்தில் நிரந்தரமாக உட்கார்ந்தார்.

முதல் முதலில் அவர் முதல்வரானபோது என்னை, கோட்டைக்குத் தம் காரிலேயே கூட்டிப் போனார். வழியெல்லாம் தம் கனவுகளைத்தான் அவர் சொன்னார். அத்தனையும் மக்கள் நலத் திட்டங்கள்.

சிறிய வயதில் உண்ண உணவில்லாமல் தாம் பட்ட கஷ்டம், இந்த மாநிலத்தில் வேறு யாருமே படக் கூடாது என்பது அவரது ஆசை, லட்சியமாக அப்போதே இருந்தது! மதிய உணவுத் திட்டமெல்லாம் அதன் வெளிப்பாடுதான்.

வள்ளல், வள்ளல் என்று ஊரே அவரைச் சொல்லும். அது, அவர் வளர்த்துக் கொண்ட குணம் அல்ல. பிறவியிலேயே அவருக்கு அமைந்துவிட்ட பண்பு அது.

மிக அதிக விலை உள்ள தங்கபஸ்பம் எப்போதும் அவர் வீட்டில் இருக்கும், அவர் சாப்பிடுவதற்காக. அதைச் சாப்பிடுகிறபோது யாராவது வந்துவிட்டால், ஒருகணம் கூட யோசிக்காமல், வந்த விருந்தாளிக்குக் கையிலிருக்கும் தங்க பஸ்பத்தைத் தந்து சாப்பிடச் சொல்லுவார்!

ஆனால் அவர் மேனி தங்கம் போல் மின்னுவதற்குக் காரணம் தங்க பஸ்பமல்ல... நல்ல மனசுதான்!

(தொடரும்)

## மும்பை மசாலா:

### கும்பிடுவோம் குண்டர்களை!

வல்லப்பாய் தத்தர், மில் உரிமையாளர், பிஸினஸ் புள்ளி... சுட்டுக் கொல்லப்பட்டிருக்கிறார்! பிஸினஸ் வட்டாரங்கள் கதி கலங்கி, தொழிலதிபர்களெல்லாம் பிரைவேட் செக்யூரிட்டி ஏஜென்ஸிகளைத் தஞ்சமடைந்துள்ளார்கள்; அண்டர்வர்ல்டின் ஆதிக்கம் தலைவிரித்து ஆடுகிறது! காங்கிரஸ்காரர்கள் எதிர்கட்சிக்காரர்களாய், லட்சணமாய், "சட்டம் ஒழுங்கு செத்து விட்டது; அரசை டிஸ்மிஸ் செய்" என்று கூச்சலிடுவதுதானே நியாயம்? ஆனால் மூச்சுவிடக் காணோம்! காரணம், காங்கிரஸ்காரர்களும் இந்த 'டான்'களின் தயவில்தான் வாழ்கிறார்கள்! கட்சிப் பாகுபாடின்றி, இன்று மும்பையின் எல்லா அரசியல்வாதிகளும் கும்பிட்டு பிரதட்சிணம் செய்வது அண்டர் வர்ல்ட் டான்களைத்தான்!

### சரியான நாடகம்!

அண்மையில் கோவிபார் என்ற குடிசைப் பகுதியில், குலாம் ஹுசைன் என்ற மனிதனின் குடலை உருவிய குற்றத்துக்காக, மூன்று ரௌடிகளை முக்கால் நிர்வாண நிலையில், தெருவில் ஊர்வலமாக, விலங்கிட்டு, போலீஸ் நடத்திச் சென்றனர். இதை எதிர்த்து, பல பெண்கள், முக்கியமாக



ஜனதாதள ஆதரவாளர்கள் போராட்டம் நடத்த, போலீஸ் லத்தி சார்ஜ் செய்ய, சிலருக்கு கைகால் முறிவு, குறைப்பிரசவம் என்றெல்லாம் அல்லோலகல்லோலப்பட்டது! வழக்கம்போல் 'என்கொயரி'! ஆனால் வழக்கத்துக்கு மாறாய் அதை முடித்து விட்டார் கூடுதல்

• பூஜாபட்

கமிஷனர் வொய். சி. பவார். நடந்து முடிந்த உள்ளாட்சித் தேர்தல்களில், குலாம் ஹூசைன், சமாஜ்வாதி கட்சிக்கு ஆதரவு சேர்த்ததால் வெறுப்படைந்த ஜனதாதள வேட்பாளர், அவரைத் தீர்த்துக்கட்ட இரகசியமாக சமூக விரோதிகளை ஏவியதாகவும், கோஷமிட்ட பெண்களை இவரே திரட்டி, தூண்டியதாகவும் தெரியவந்துள்ளது!

### பாவம், புலிகள்!

**பா**துகாக்கப்பட்ட வனப்பகுதியில் விலங்குகளை வேட்டையாடினார் தாக்கரேயின் ஒரு மகன். அந்த சமுசா அப்படியே இருக்க... பிரிதொரு மகனான உதவ்தாக்கரே, மும்பைவாசிகளுக்கு தீபாவளிப் பரிசாக, அதே போரிவிலி பார்க்கில் ஒரு 'டைகர் ஸஃபாரியை' வழங்க நினைக்கிறார். ஐம்பது ஏக்கர் நிலத்தில் 1.2 கோடி செலவில் ஏற்கெனவே இருக்கும் "லயன் ஸஃபாரி"க்கு ஜோடியாக ஒரு புலிகள் பார்க்! ஆனால் காட்டிலாகா அதிகாரிகள் முகத்தில் சிரிப்பில்லை– "4,000மாக இருந்த புலித்தொகை 1500ஆக மெலிய, பாடுபட்டு, ப்ராஜக்ட் டைகர் மூலம் 4,000க்கு உயர்த்தியுள்ளோம். இயற்கையான சூழலில், வனத்தில் அவற்றை விட்டுவிடுவதுதான் நல்லது" என ஜாடைமாடையாக சொல்லியிருக்கிறார்கள். ஹூம்! காட்டுப் புலியைப் பிடித்து வந்து நகரத்தில் வைக்க வேண்டாம் என்று 'உதவ்' வுக்கு யார் உணர்த்துவார்கள்?

### தொடரும் தாவூத் அராஜகம்!

**யா**ருமறியாத படத் தயாரிப்பாளரான நாசிம் ரிஜ்வியும், அவரது ரிலீசாகாத படமான 'அங்கார்வாடியும்', திடீரென்று மும்பையில் பரபரப்பை ஏற்படுத்தியுள்ளன. புண்ணியத்தைக் கட்டிக் கொண்டவர் சோட்டா ஷகீல்– தாவூத் இப்ராஹீமின் வலது கை! சென்ஸார் போர்டில் 'பாஸ்' செய்யப்பட்டிருக்கும் இந்தப் படத்தில் ISI (பாகிஸ்தான்)க்கு எதிராக வசனங்கள் இடம் பெற்றுள்ளனவாம்! இப்படத்தின் ட்ரெயிலர் ஸோனி டெலிவிஷனில் காட்டப்பட்ட உடனே, டீ.வி.காரர்களுக்கும் தயாரிப்பாளர்களுக்கும் ஃபோனில் மிரட்டல்கள்! ஷகீலின் மிரட்டல்களை அரசுக்கு விட்டிருக்கும் சவாலாக கருதுகிறார் சிவ சேனைக் காவலர்!



• பாவம் புலிகள்

### "ஆபாசமா? நானா..?"

**பூ**ஜாபட்டைப் பற்றி வழக்கமாகப் பாடப்படும் 'ஆபாச' பல்லவிதான்! ஆனால் பாடியிருப்பவர் புதுமுகம்! மும்பையைச் சேர்ந்த இல்லத்தரசி அர்ச்சனா சௌஹான்! அசிங்கமான புகைப்படங்களுக்கு போஸ் கொடுத்ததற்காக பூஜாபட் மீது வழக்கு தொடுத்திருக்கிறார். பட்... பூஜா என்ன சொல்கிறார்?– "நான் இதுவரை எந்தவித ஆபாச போஸூம் கொடுத்ததேயில்லை (???) அப்படிப்பட்ட புகைப்படங்களை நம் பத்திரிகைகள் வெளியிடுவதுமில்லை(!!!) ஆபாசம் என்பது, அவரவர் பார்வையில், பார்க்கும் கோணத்தில் (ஹி ஹி) இருக்கிறது". வழக்கு விசாரணைக்கு வந்தால் தூள்தான்!

## பூஜா என்ன சொல்கிறார்..?

### பெயர் மாற்றப் பிரியர்கள்!

**ப**ழக்கப்பட்டுப் போன V.T. ஸ்டேஷனை, C.S.T. (சத்ரபதி சிவாஜி டெர்மினஸ்) ஆக மாற்றியது போதாதென்று, வெஸ்டர்ன் ரெயில்வே டெர்மினஸான "சர்ச் கேட்"டின் அழகிய பெயரை C.D.தேஷ்முக் (பிரபல பொருளாதார வல்லுனர்) டெர்மினஸாக மாற்றப் போகிறார்களாம்! CSTக்கும் CDDக்கும் வித்தியாசம் தெரியாமல் பாமரர்கள் குழம்பப் போவது ஒருபுறமிருக்க, இந்த மாற்றத்தை IMC(இண்டியன் மர்சண்ட் சேம்பர்ஸ்) காரர்களே வரவேற்கவில்லையாம்! இதேபோல் சிலகாலமுன் பாந்த்ராவிலுள்ள ஹில்ரோட்டை, அங்கு படுகொலை செய்யப்பட்ட கார்ப்பொரேட்டர் நினைவாக, ராம்தாஸ் நாயக் ரோடாக மாற்றினர். வேடிக்கை என்னவென்றால், நாயக் ஜீவித்திருந்தபோது ஹில் ரோடின் பெயர் மாற்றத்தை தீவிரமாக எதிர்த்திருக்கிறார்!

- ஜெயஸ்ரீ ராஜ்

# 'கல்கி' ஆசிரம பிரச்னைகள்



• முற்றியது கலி!



• இன்னொரு குழந்தை!



• ஒரிஸ்ஸாவின் பிதாமகர்!

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம் – 1.

*? தனி நபரை விட தேச நலனே முக்கியம் என்று மூப்பனார் கூறியுள்ளாரே?*

! எல்லாம் முன்னெச்சரிக்கைதான். அப்படிச் சொல்லி வைத்தால்தானே, 'அமைச்சரவையில் த.மா.கா. சேர முடியாது' என்று முதலில் முரண்டு பிடித்தாலும் பின்னால் சேர்ந்து கொள்ள வாய்ப்பு இருக்கும்!

● மு. கருணாநிதி, தேவராயனேரி.

*? 'என்னை அன்னையாக நினைத்துத்தான் என் காலில் விழுகிறார்கள்' என்று கூறும் ஜெயலலிதா, 'தான் கூடத்தான் அன்னை தெரஸாவின் காலில் விழுந்திருக்கிறேன்' என்றும் கூறுகிறாரே?*

! தம்மை அன்னை தெரஸா லெவலுக்கு உயர்த்தி வைத்துப் பார்க்க ஆசைப்படுகிறார்... கலி முத்திப் போச்சு என்பார்களே, இதுதான் போலும்!

● கே. எம். ரவிச்சந்திரன், மதுரை – 20.

*? சீதாராம் கேசரியின் பலம் என்ன? பலவீனம் என்ன...?*

! பலவீனம், அவர் மீதும் அவர் கட்சியினர் பலர் மீதும் உள்ள ஊழல் குற்றச்சாட்டுகள். பலம் – அவை குறித்து அரசு நடவடிக்கை எடுத்தால், 'கவிழ்த்து விடுவேன்' என்று பயமுறுத்துகிற லெவலுக்கு நாடாளுமன்றத்தில் உள்ள கட்சி எம்.பி.க்களின் எண்ணிக்கை.

● வி. ரெங்கநாதன், சென்னை – 49.

*? 'கல்கி' ஆசிரம பிரச்னைகள் (சர்ச்சைகள்) குறித்து எங்கள் கல்கியின் கருத்து என்னவோ?*

! எனக்கு, ஏஜெண்டுகளிடம் நம்பிக்கை இல்லை. கல்கி பகவானே நேரில் வந்து ஒரு பேட்டி தரச் சம்மதிக்கட்டும். பேசி விட்டுச் சொல்கிறேன்.

● கே. கணேசன், சென்னை - 58.

*? ஐக்கிய முன்னணி அரசுக்கு ஆதரவு தரவேண்டிய கடமையும் பொறுப்பும் காங்கிரசுக்கு இருப்பதாக கருணாநிதி எதை வைத்துச் சொல்கிறார்?*

! இடைத்தேர்தல் வந்தால் மக்கள் பணம் விரயமாகும் என்பதெல்லாம் சும்மா அல்வா! இன்றைய சூழலில் இடைத்தேர்தல் பி.ஜே.பிக்குச் சாதகம் என்பதுதான் நிஜமான பயம். மேலும், ஐ.மு. அரசு நீடித்தால்தானே தி.மு.க. மத்திய அமைச்சர்களும் பதவியில் நீடிக்க முடியும்?

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

*? மறைந்த ஒரிசா மாநில முதல்வர் பிஜு பட்நாயக் பற்றி...?*

! சுதந்தரப் போராட்டத் தியாகி. ஒரிஸ்ஸாவின் முன்னேற்றத்துக்கு அரும்பாடுபட்டவர். அவர் முயற்சி மட்டும் இல்லாவிட்டால் பாராதீப் துறைமுகம் இல்லை. துறைமுகத்துக்கும் தைடாரி இரும்புக் கனிம வயல்களுக்குமிடையே நெடுஞ்சாலை அமையவும் காரணமாயிருந்தார். அவரால்தான் இன்று இரும்புக் கனிமம் ஒரிஸ்ஸாவிலிருந்து ஏற்றுமதியாகிறது. ஊழலை எத்தனைக்கெத்தனை வெறுத்தாரோ, உணவை அத்தனைக்கத்தனை விரும்பினார். இரண்டுமே கடைசி வரை அவரைச் சங்கடப்படுத்தின!

● எஸ்.ஏ.என். செந்தில்குமார், சூலூர்.

*? தம்மை அவதூறு சேற்றில் புதைக்க ஆட்சியாளர்கள் நினைத்தார்கள்; ஆனால் மக்கள் உள்ளங்களில் திருவண்ணாமலை தீபமாக ஒளி வீசுகிறோம் என்று ஜெயலலிதா அறிக்கை வெளியிட்டுள்ளாரே?*

! மலைச்சாரலில் காட்டுத் தீயாகப் பரவிய ஊழலை திருவண்ணாமலை தீபம் என்று



• சமனமான...



• ...மனநிலை...



கூடாது என்றால், அவர் மீது வழக்குகள் தொடரும் 'நெகடிவ்' அணுகுமுறை மட்டும் போதாது; நல்லாட்சி வழங்கும் 'பாஸிடிவ்' அணுகுமுறையும் தேவை. முதல்வரின் ஆர்வமும் சுறுசுறுப்பும் அமைச்சர்கள், அதிகாரிகளிடமும் பரவ வேண்டும்.

● **நிலா காதலன், நாகூர்.**

*? ஹஜ் பயணிகள் தீ விபத்தில் இறந்தது பற்றி...?*

! கூடாரங்கள் அல்லது பந்தல்களில் ஏற்படும் தீ விபத்துகளில் பலர் மரணமடைவது என்பது புதிய விஷயமல்ல. ஏறத்தாழ இதே போன்ற சோகம் அண்மைக் காலத்தில்தான் இந்தியாவிலும் நடந்தது. இறந்து போனவர்களால் ஏற்படும் துயரம் ஒரு பக்கமென்றால், அரசு நிர்வாகம் இன்னமும் பாடம் கற்காமல் இருப்பது அதனினும் வேதனை.

● **ஆர். ரமேஷ்பாபு, விருத்தாசலம்.**

*? ஒரு படம் முடித்ததும் இமயமலை போகும் ரஜினி; ஹாலிவுட் போகும் கமல்... இருவரைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?*

! வெற்றி தோல்விகளைக் கடந்த சமனான மனநிலை பெறவும் கசப்பான விமர்சனங்களை மறக்கவும் பயணங்கள் உதவும். ஹாலிவுட்டில் கூடுதல் வசதி - அடுத்த படத்துக்குக் கதை கவரலாம்.

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
எல். முருகன்,
சமத் டெய்லர்,
156, நேதாஜி ரோடு,
மதுரை — 625 001.



* முன்னெச்சரிக்கை

# குறித்து...?

வர்ணித்தால், அதை நம் மக்கள் என்ன முட்டாள்களா!

● **ஷோபனாதாசன், நாட்டரசன்கோட்டை.**

*? 'அரசியலில் எதையுமே முற்றுப்புள்ளி எனக் கருதக்கூடாது. கால் புள்ளி, அரைப் புள்ளியாகக் கருதவேண்டும்' என்று ப. சிதம்பரம் கூறியுள்ளாரே?*



* இலக்கணப் பிழை!

! கால்புள்ளி, அரைப்புள்ளியெல்லாம் மறந்துடுங்க! முற்றுப்புள்ளி மீது ஒரு கொக்கி போட்டு கேள்விக்குறியாக்கி அதையே பட்டையடித்து ஆச்சர்யக்குறியாக மாற்றும் ஆற்றல் அரசியல்வாதிகள் அனைவருக்குமே உண்டு. மூப்பனாரும் ப.சியும் விதிவிலக்கா என்ன...!

● **எல். முருகன், மதுரை - 1.** ❑

*! தி.மு.க. அரசு காட்டும் மெத்தனப் போக்கினால் அ.தி.மு.க. மீண்டும் தலையெடுத்துவிடும் போலிருக்கிறதே?*

! நன்றாகச் சொன்னீர்கள். 'ஜெ'யின் மெகா ஊழல் ஆட்சி மீண்டும் தலையெடுக்கக்

● **ப. சுகுமார், தூத்துக்குடி - 1.**

*? ஜெயலலிதா தம்மைக் கடவுளின் குழந்தை (child of God) என்று குறிப்பிட்டுக் கொண்டது பற்றி...?*

* பகுத்தறிவு...



*... ஒப்பீடு

! உலகில் அனைவருமே children of God தான். வளர்ப்பு மகன் திருமணத்தை சன் டி.வியில் விளாசிவிட்டு, இப்போது விஜய் டி.வி.யில் வருடிக் கொடுக்கும் கேள்விகள் கேட்கிற ரபிபெர்னார்ட் உள்பட!

● **ப. சங்கர், திருப்பூர்.**

*? பெரியார் - வாரியார் - ஒப்பிடுக?*

! முன்னவர் நாத்திகம் பேசிய பகுத்தறிவாளர். பின்னவர் பகுத்தறிந்து பழுத்த ஆத்திகக்கனி.





# வள்ளல்

**சங்கீதாவுடைய பார்வையில் கொதிக்கிற குழம்பின் உக்கிரம் போல ஒரு ஜிவுஜிவு தெரிகிறதே...!**

பொங்கல் பண்டிகை சமயம் ஊராரின் பொங்கல் பானைகளில் தங்கக் காசு போடுவது தவிர வேறென்ன வள்ளல்தன்மை காட்டுகிறார் சத்யராஜ்?

– இந்தக் கேள்வி கிளைமாக்ஸ் வரை நீடிக்கிறது. எதிர்பாராத ஒரு சஸ்பென்ஸ் அவிழ்ந்து, ராட்சஸ வேகத்தில் ஒரு ஃபிளாஷ் பேக் சொல்லப்படுகிறபோது, கேள்விக்கு விடை கிடைப்பது மட்டுமல்ல; நீண்ட நாட்களுக்குப் பிறகு சத்யராஜுக்கும் ஒரு வெற்றிப் படம் உறுதியாகிறது.

இனி கதை. பிரமாத நவீனம் ஒன்றுமில்லை. அப்பா – மகள் பாசம். 'அப்பாவுக்கு மனைவியாக' மீனா வருகிறபோது எழுகிற சிக்கல். (நன்றி : கேனடி கண்மணி) கொஞ்சம் சென்ட்டிமென்ட். கொஞ்சம் சண்டை. வளமான காமெடிக்கு கவுண்டமணி. மாறுபட்ட வில்லத்தனத்துக்கு மணிவண்ணன்.

ஆரம்பத்தில் சங்கீதா மேல் சத்யராஜ் பொழிகிற பாசம் கொஞ்சம் டூ மச் என்று சொல்ல வைத்தாலும், இறுதியில் அதற்கொரு ரீஸன் தெரிகிறது. காதலியின் மகள்! போதாதா?

ஒரு ஹீரோயின், இரண்டு ஹீரோயின் எல்லாம் மலையேறி இங்கே மூன்று!

பத்து நிமிஷம் வந்தாலும் ரோஜாவின் ராஜாங்கத்தில் தியேட்டரில் விஸில் பறக்கிறது. அப்புறம் மேக்-அப் போடாத மீனா, துள்ளலும் எள்ளலுமாக சங்கீதா.

சத்யராஜுக்கு ஈடுகொடுத்து, படம் முழுக்க சங்கீதா வெளுத்து வாங்கியிருக்கிறார். 'டேய் தொரராசு' என்று அப்பாவைப் பேர் சொல்லிக் கூப்பிடுகிற 'செல்ல வெளிப்பாடு' நயம். மீனாவை அவர் மணந்து, அழைத்து வருகிறபோது பார்வையில் கொதிக்கிற குழம்பின் உக்கிரம் போல் ஒரு ஜிவுஜிவு தெரிகிறதே, அது மேலும் நயம். வேலை வாங்கியிருக்கிற இயக்குநருக்கு ஸ்பெஷல் பாராட்டுக்களைச் சொல்ல வேண்டும்.

தேவாவின் இசையில் ஒரு பாட்டு கேட்கிற மாதிரி இருக்கிறது. (கேட்டது மாதிரியும்?)

முதல் பாதியின் அநியாயத் தொய்வைத் தவிர்த்து நீளம் குறைக்கப்பட்டிருந்தால் மேலும் ரசித்திருக்க முடியும். இப்போதும் ஒன்றும் கெட்டுவிடவில்லை. கத்திரிக்கோலுடன் தியேட்டருக்கு தியேட்டர் ஆள் அனுப்பிக் கொஞ்சம் வெட்டச் சொல்லுங்கள். நூறு நாள் கேரண்டி!

**- ஆர்.பி.ஆர்.**

பாதன் அச்சகத்தில் அச்சிட்டு, பாதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி ; ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; ஃபேக்ஸ் : 2345621.
ஆண்டுச் சந்தா : ரூ. 208/-; ஆறு மாதச் சந்தா : ரூ. 104/- (உள்நாடு).

# வெப்பத்தை விரட்டுங்கள்! கோடையை கொண்டாடுங்கள்!



## உங்கள் வீட்டின் கூரைமேல்
## 'ஜனதாசெம்' பூசிடுங்கள்



வீடுகள், தொழிற்சாலைகள்;
மாட்டுத்தொழுவங்கள்,
கோழிப்பண்ணைகள், தங்குமிடங்கள்
ஆகியவற்றின் கூரைகளில்
"ஜனதா செம்" அடித்திடுங்கள்...
பாருங்கள் மாயாஜாலத்தை.

"ஜனதாசெம்" வெப்பமான சூரிய
கதிர்களை உள்ளே வரவிடாமல்
பெரும்பாலும் தடுக்கிறது.
அதனால் உட்புறம் குளிர்ச்சியாக
இருக்கிறது. "ஜனதாசெம்" எந்த வித
கூரைக்கும் ஏற்றது.

**ஜனதாசெம்®**

வெப்பத்தை தணித்திடுங்கள்.
'ஜனதாசெம்'
தேர்ந்தெடுங்கள்.

EFFICIENT/1024/97

நிறமும் தரமும் நிரந்தரம்

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka